# கல்கி

KALKI 9.11.97 ரூ. 4.00

புட்டபர்த்தியில் ரணதுங்கா...



# 'வாஷிங் மெஷின்' சுஜாதா எழுதும் 'கவர் ஸ்டோரி!'

திரைக்கதை
பற்றி
நமக்குத் தெரியாது.
ஆனாலும்
அசல் கதை
இதுதான்...

# விடுதலை வீரன் மருதநாயகம்

ஆங்கிலேயரை எதிர்த்து வீரப் போரிட்டுத் தூக்கில் தொங்கியவர் மருதநாயகம்.

மருதநாயகம் இராமநாதபுரம் சேதுபதியின் கீழ் இருந்த பனையூரில், இந்து வெள்ளாளர் குடும்பத்தில் பிறந்தார். இவர் இளைஞனாக இருந்தபோது, இவரது வீரத்தைப் பாராட்டி பிரெஞ்சுப் படையினர் தங்களுடன் சேர்த்துக் கொண்டனர். இவரைக் கண்டு வியந்த போர்த்துக்கீசிய ரோமன் கத்தோலிக்கப் பெண்ணை மருதநாயகம் மணந்து கொண்டார்.

நாளடைவில் பிரெஞ்சுப் படையை விட்டு, ஆங்கிலப் படையில் மருதநாயகம் சேர்ந்து செல்வாக்குப் பெற்றார். அச்சமயத்தில் திண்டுக்கல்லில் ஹைதர் அலி, பௌஸ்தார் பொறுப்பை ஏற்றிருந்தார். தஞ்சையில் மூன்றாம் சரபோஜி மன்னர், ஸ்வார்ட்ஸ் பாதிரியாரின் ஆதரவால் ஆட்சியைப் பிடித்திருந்தார். மருதநாயகம் இந்து மதத்தை விட்டு முஸ்லீமாக மாறி தமது பெயரை யூசுப்கான் என்று வைத்துக் கொண்டார். இவரின் வீரத்தையும் விசுவாசத்தையும் பாராட்டி, ஆங்கிலேய அரசு இவரை மதுரை கவர்னராக நியமித்தது.

ஆங்கிலேயரின் கீழ் இருந்து கொண்டு மருதநாயகம் மக்களுக்கு நல்ல பணிகளைச் செய்து பெருமை சேர்த்தார். யூசுப்கான் என்ற இவரது பெயர் நாளடைவில் கான்சாகிப் என்று அழைக்கப் பெற்றது. இவரது சேவையைக் கண்டு ஆங்கிலேயர் வெகுண்டனர். அதனால் ஏற்பட்ட ஆங்கிலேயரின் எதிர்ப்பை மருதநாயகம் சமாளிக்க வேண்டிய நிலை உருவானது.

வீரன் மருதநாயகத்தின் காலம் சிவகெங்கை மருதுபாண்டியர்களின் காலத்திற்கு சற்று முந்தியது.

ஆங்கிலேயரின் தாக்குதலில் மருதநாயகம் அதிகம் பாதிக்கப்பட்டார். நவாபின் படையும் ஆங்கிலேயருடன் சேர்ந்து கொண்டு மருதநாயகத்தை எதிர்த்தது. இறுதியில் கோட்டைக்குள் தொழுகையில் இருந்தபோது கான்சாகிப் என்ற மருதநாயகம் கைது செய்யப்பட்டார். இறுதிவரை ஆங்கிலேயருடன் கடுமையாகப் போரிட்ட மருதநாயகம் ஆங்கிலேயரால் 1764இல் தூக்கிலிடப்பட்டார். இன்றும் மானாமதுரை, திருப்பாச்சேத்தி, திருபுவனம் பகுதி மக்கள் மருதநாயகம் என்று குழந்தைகளுக்குப் பெயர் வைத்து பெருமைப்படுகின்றார்கள். மதுரையில் கான்சாகிப் மேட்டுத் தெரு என்பது கான்சா மேட்டுத் தெருவென்று அழைக்கப்பட்டு வருகின்றது.

— இளங்கவின்

# ஊட்டி ரயில் ஓடுமா? அரசு அறிவிப்பில் நம்பிக்கையில்லை!



• ஊட்டி ரயில்...

**உலகிலேயே மிகவும் அழகான ரயில் பாதை என்று சொல்லப்படும் மேட்டுப்பாளையம்–ஊட்டி ரயில், நஷ்டம் காரணமாக இனி ஓடாது என்று ஓர் அறிவிப்பு. பிறகு, முதல்வர் கலைஞரின் வேண்டுகோளுக்கு இணங்க, ரயில்வே அமைச்சர் பாஸ்வான் அது நிறுத்தப்படாது என்று அறிவித்தார். ஆனாலும் அந்த ரயில் இன்னும் எத்தனை நாளைக்குத் தொடர்ந்து ஓடும் என்பதில் பலருக்கும் சந்தேகம். நிலைமை அப்படி. என்ன நிலைமை? நேரடியாகச் சென்று விசாரித்தோம்.**

“ஊட்டி ரயிலை நிறுத்த மாட்டோம்னு அமைச்சர் சொல்லியிருக்கறதை நம்ப முடியலை சார். காரணம், முன்பு நஷ்டம்னு சொன்னவங்க, இப்ப எப்படி நஷ்டத்தைச் சரிக்கட்டப் போறாங்கன்னு தெளிவாச் சொல்லலை. இப்ப இந்த மலைப் பாதையில ஓடற ஏழு எஞ்ஜின்களும் நூறு வருஷப் பழசு. அதனால புதிய எஞ்ஜின்கள் வாங்கணும். அதை எப்ப வாங்கப் போறாங்கன்னு சொல்லலையே! அப்படி வாங்கப் போறதா ஐடியா வெச்சிருந்தா, சுவிட்சர்லாந்து அரசு தானாவே வலிய வந்து, நூறு கோடிக்கு ஐந்து எஞ்ஜின்கள் தர்றதாவும் அதில் 50 சதத்தை மான்யமாவும் 50 சதத்தை நீண்ட காலக் கடனா திருப்பித் தந்தாப் போதும்னும் சொன்னதை ஏன் நமது அரசு ஏத்துக்கலை? இதுக்கு என்ன அர்த்தம்? ரன்னிமேடு ரயிலைத் தனியாருக்குத் தாரை வார்த்த மாதிரி, இதையும் தனியாருக்கே தாரை வார்த்து விடுகிற திட்டத்தில் இருக்காங்கன்னு தானே அர்த்தம்?” என்று சரமாரியாப் பொரிந்தார், நீலகிரி மாவட்ட நுகர்வோர் பாதுகாப்புக் கூட்டுக் குழுவின் செயலாளர் சக்தி எனும் செந்தில்குமார்.

ரன்னிமேடு ரயில் நிலையம் தனியாருக்குத் தாரை வார்த்துக் கொடுத்ததாகச் சொல்லப்படுவது இதுதான். ஊட்டியிலிருந்து ரன்னிமேடு (குன்னூருக்கு அடுத்த ஸ்டேஷன்) வரை சுற்றுலாப் பயணிகளை அழைத்துக் கொண்டு ‘பாக்கேஜ் டூர்’ மாதிரி வந்து இயற்கையின் சுற்றுப்புற அழகைக் காட்டுகிற ஒரு விஷயம்தான். அதுவும் லீஸுக்குத்தான் கொடுத்திருக்கிறார்கள். அப்படி ரயிலை ஓட்டிக் கொண்டிருக்கும் கே.நடராஜனைச் சந்தித்து, லாபம் தருகிறதா என்று கேட்டோம்.

“இந்த ரன்னிமேடு ரயில் நிலையத்தை அரசு மூடியது 82-ம் வருஷம்னு நினைக்கிறேன். பிரிட்டிஷார் மிகவும் கஷ்டப்பட்டுப் போட்ட இந்த ரயில் பாதை மண்மூடி வீணாகப் போக வேண்டுமா என்கிற ஆதங்கம்

• செந்திலகுமார்



• எஸ்.ஆர்.பாலசுப்பிரமணியம்

எனக்கு. இதை எப்படி வெளிநாட்டவர்களைக் கவரும்படி இயக்கலாம் என்று யோசித்து யோசித்துத்தான் கடந்த பத்து மாதங்களாக இதை இயக்க ஆரம்பித்திருக்கிறேன்.

"இந்த ரயில் ஒருநாள் ஓட எனக்குப் பதினாறாயிரம் ரூபாய் செலவாகிறது. 150 பேர் பயணம் செய்கிற இதில் சில சமயங்களில் நான்கைந்து பேரைக் கூட ஏற்றிக் கொண்டு போய் சுற்றிக் காட்டுகிறேன். காரணம் இதன் மேல் எனக்கிருக்கும் பற்றே தவிர, லாப நோக்கம் இல்லை.

"கட்டணம் சாதாரண மக்களுக்கான தில்லைன்னு சொல்றாங்க. வாங்குற கட்டணத்துக்கு, ஸ்பெஷல் லஞ்ச், மினரல் வாட்டர் என்று சகல வசதிகளையும் செய்து கொடுக்கிறேன். (தலைக்கு 500 ரூபாய்) ஊட்டி-மேட்டுப்பாளையம் அரசு ரயிலில் மாத்திரம் தினசரி போகிற சாதாரண ஜனங் களா போறாங்க? சுத்திப் பார்க்க வர்ற பயணிங்க தானே அதிலும் வெளிநாட்டுப் பயணிங்கதானே அதிகம் வர்றாங்க. இதையெல்லாம் வெளிநாட்டுப் பயணிங்க எப்படியெல்லாம் பாராட்டியிருக்காங்க தெரியுமா!" என்றார்.

• நடராஜன்



• சரவணன்



• செந்தில் குமார்



**த**னியார் ஒருவருக்கே ஊட்டி ரயில் ஓடியாக வேண்டும் என்கிற உறுதியும் பற்றும் இருக்கிறபோது, அரசாங்கத்துக்கு மட்டும் ஏன் இத்தனை அலட்சியம் என்பதே பலரது கேள்வி.

"புதிய ரயில் எஞ்ஜின்களை வாங்கி, சர்வீஸ்களின் எண்ணிக்கையையும் அதிகப்படுத்தினால் நிச்சயம் நஷ்டத்தை ஈடு கட்டி விடலாம். ஆனால் புதிய எஞ்ஜின்கள் உடனடியாக வாங்கப் படாவிட்டால், இருக்கிற பழைய எஞ்ஜின்கள் இன்னும் எத்தனை நாளைக்குத் தாக்குப் பிடித்து ஓடும் என்பதைத் திட்டவட்டமாகச் சொல்ல முடியாது!" என்றார் ஊட்டி ஸ்டேஷன் மாஸ்டர் சரவணன்.

"ஊட்டி ரயிலை நிறுத்துகிற திட்டத்துக்கு ரயில்வேயின் இரண்டு யூனியன்களுமே எதிர்ப்புத் தெரிவிக்குது சார். இதில வருமானம் இல்லேன்னு சொல்றதும் சும்மா. சீசன் இல்லாத இந்தச் சமயத்திலேயே தினசரி கலெக்ஷன் நாற்பதாயிரம் ரூபாய் தெரியுமா! அரசு அக்கறை எடுத்தா நிச்சயம் இது லாபம் தான்!" என்று ஸ்டேஷன் மாஸ்டர் சொன்னதை உறுதிப்படுத்தினார், (எஸ்.ஆர்.எம்.யூ.) யூனியன் செயலாளர் திவாகரன்.

**இ**து குறித்துத் தொகுதி எம்.பி. என்கிற முறையில், மத்திய இணை அமைச்சர் எஸ். ஆர்.பாலசுப்பிரமணியம் என்ன சொல்கிறார்? அவர் கோவை வந்திருந்தபோது சந்தித்துக் கேட்டோம்.

"ஊட்டி ரயில் நிறுத்தப் படாது என்று இப்போது அறிவிக்கப்பட்டதற்குக் காரணமே, வரப் போகிற குன்னூர் இடைத் தேர்தல்தான் என்று சொல்லப்படுகிறதே?"

"சம்பந்தமேயில்லை. இதெல்லாம் தேவையில்லாத முடிச்சு. சென்ற ஆண்டு கூட ஊட்டி ரயில் நிறுத்தப்படப் போவதாக ஒரு புரளி கிளப்பப்பட்டது. அப்படியெதுவும் நடக்கவில்லையே! அது மாதிரி தான் இப் போதும். ரயில்வே அமைச்சரே நிறுத்தப்படாது என்று அறிவித்து விட்டாரே! எனக்கு தனிப்பட எழுதியிருக்கும் கடிதத்திலும் நிறுத்தப்படாது என்றே கூறியிருக்கிறார்."

"ஊட்டி ரயிலைத் தனியார் ஒருவருக்குத் தாரை வார்த்துக் கொடுப்பதற்குத்தான் அரசு முயற்சி செய்கிறது என்று சொல்லப் படுகிறதே?"

"இதுவொரு கற்பனை என்பதைத் தவிர வேறு என்ன சொல்ல முடியும்?"

"தொகுதி எம்.பி. என்கிற முறையில், இந்த ரயில் நிறுத்தப்படாமலிருக்க என்ன செய்தீர்கள்?"

"இது குறித்து ரயில்வே அமைச்சகத்துடன் பலமுறை பேசியிருக்கிறேன். வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் அமைச்சரிடம் நேரிலும் பேசியிருக்கிறேன்!"

"ஊட்டி ரயில் நிறுத்தப்படாது என்கிற நம்பிக்கை மக்களுக்கு வர வேண்டுமானால், புதிய எஞ்ஜின்கள் வாங்குவதற்கு ரயில்வே நிதி ஒதுக்கீடு செய்ய வேண்டும். அப்படி ஒதுக்காத வரை நம்பிக்கை வராது என்கிறார்களே?"

"நிச்சயம் ஒதுக்கப்படும். அதற்கான அறிவிப்பும் விரைவில் வெளியிடப்படும்!" என்று உறுதியாகச் சொன்னார் எஸ்.ஆர்.பி.

கட்டுரை, படங்கள்:
**கா.சு. வேலாயுதன்**

# “பாபாவின் அருளாலேயே வெற்றி பெறுகிறோம்!”

## — இலங்கை கேப்டன் ரணதுங்கா பேட்டி

**கிரிக்கெட் உலகில் 'Black Thunder' என்று அழைக்கப்படுபவர். எந்த நிலையிலும் நிதானம் இழக்காமல் தமது அணியை வெற்றிப் பாதைக்கு அழைத்துச் செல்பவர். அவர்தாம் இலங்கை அணியின கேப்டன் அர்ஜுன் ரணதுங்கா. அண்மையில் பெங்களூருக்கு வந்திருந்த அவர், புட்டபர்த்திக்குச் சென்று சாய்பாபா அவர்களைத் தரிசித்துச் சுமார் ஒரு மணி நேரத்துக்கு மேலாக உரையாடினார். பாபா தரிசனம் முடிந்து வெளியே வந்த அவர், கல்கிக்கு பேட்டியளித்தார்...**

**கல்கி** : பௌத்த சமயத்தவரான உங்களுக்கு பாபா மீது எப்படி பக்தி வந்தது?

**ரணதுங்கா** : பாபா சாதி-சமயங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவர் என்பதால் அவர்மீது எனக்கொரு காதலே உண்டு. அவருக்கு நான் அடிமை என்று சொன்னால் கூட அதுவும் பொருத்தமானதாகவே இருக்கும். கடவுள் எந்த மதத்தையும் சார்ந்தவரல்ல. நாம்தான் மதங்களின் பெயரில் பிரிந்து கிடக்கிறோம்; சண்டையிட்டுக் கொள்கிறோம்... யாரை தரிசிக்கும்போது நமக்கு இறையுணர்வும் தெளிவும் ஏற்படுகிறதோ அவர் நமக்குக் கடவுள் மாதிரிதான். அந்த வகையில் பாபா எனக்குக் கடவுள் மாதிரிதான். இதற்கு நான் மதம் மாற வேண்டுமா என்ன!

**கல்கி** : எப்போது - எப்படி நீங்கள் முதன் முதலாக பாபாவைச் சந்தித்தீர்கள்?

**ரணதுங்கா** : இரண்டாண்டுகளுக்கு முன்பு நான் இலங்கை அணியின் கேப்டனாகப் பொறுப்பேற்றுக் கொண்ட சமயம்... ஆஸ்திரேலியா சென்று, ஆஸ்திரேலிய - மேற்கிந்தியத் தீவு அணிகளுடன் நாங்கள் விளையாட வேண்டிய நிலை. அப்போது எங்கள் அணியின் முழுத் திறமைகளையும் காட்டி விளையாடி, வெற்றி பெற்று, உலகின் கவனத்தையே எங்கள் பக்கம் திருப்ப வேண்டும் என்று நினைத்தேன். காரணம், இலங்கையில் நடந்து கொண்டிருக்கும் இனக் கலவரங்களால் எங்கள் நாட்டின் பொருளாதாரம் மிகவும் பாதிக்கப்பட்ட நிலை - வெளிநாட்டவர்கள் யாரும் எங்கள் நாட்டுக்கு வந்து வியாபாரம் செய்யவே அச்சமுறும் நிலை. இந்த நிலையில் விளையாட்டுத் தூதுவர்களாகச் செல்லும் நாங்களாவது வெற்றி பெற்றால், உலகின் கவனம் எங்கள் மீது திரும்புமல்லவா! நல்ல பெயர் கிடைக்குமல்லவா என்று நினைத்தேன்.

இச்சமயத்தில்தான் எனது இந்திய நண்பர் ஒருவர் பாபா பற்றிக் கூறினார். 'நீ ஆஸ்திரேலியா செல்வதற்கு முன்பு பாபாவைத் தரிசித்து விட்டுப் போ. நினைத்தது நடக்கும்' என்றார். அப்படியே வந்து, பாபாவைத்



• புட்டபர்த்தியில் ரணதுங்கா...

# நாங்கள்

தரிசித்து என் எண்ணங்களையெல்லாம் சொன்னேன். பாபாவின் அருள் எனக்குக் கிடைத்தது. ஆஸ்திரேலியாவில் தொடர்ந்து நாங்களே வெற்றி பெற்றோம். இறுதிப் போட்டியில் நாங்கள் ஆஸ்திரேலியாவிடம் தோற்றாலும் அதுவொரு போராட்டத்துக்குப் பிறகு ஆஸ்திரேலியாவுக்குக் கிடைத்த வெற்றியாகவே இருந்தது. எனவே, எங்களின் ஆட்டம் உலகின் கவனத்துக்கு வந்து விட்டது. நானும் பாபாவின் பக்தனாகி விட்டேன். அதன் பிறகு நடந்த உலகக் கோப்பை போட்டியில், ஆஸ்திரேலியாவும் வெஸ்ட் இண்டிஸும் இலங்கைக்கு விளையாட வர மாட்டோம் என்று அறிவித்த போது, எங்கே அது இலங்கையில் நடக்காமலே போய்விடுமோ என்று பயந்தேன். பாபாவிடம் ஓடிவந்து முறையிட்டேன். 'கவலைப்படாதே! நீங்கள்தான் சாம்பியன்!' என்று சொல்லி அருள்பாலித்தார் பாபா. அதன்படியே நாங்கள் வென்றோம். உலகக் கோப்பையை நான் கையில் வாங்கும்போது, அதை மனதால் பாபாவுக்கே அர்ப்பணம் செய்தேன். பிறகு ஒவ்வொரு தொடர் ஆட்டத்துக்கு முன்பும் நான் வந்து பாபாவைத் தரிசனம் செய்வது வழக்கமாகி விட்டது. உலகக் கோப்பையை வென்ற பிறகு, நாங்கள் எதிர்பார்த்தது போலவே உலகின் பார்வையும் எங்கள் மீது பட்டது. அதன் பிறகு இலங்கையின் பொருளாதாரத்திலும் ஒரு நல்ல மாற்றம் ஏற்பட ஆரம்பித்தது. இதை எங்கள் அதிபரே குறிப்பிட்டுப் பாராட்டியபோது, என்னைக் கொஞ்சம் கர்வப்படக் கூட வைத்தது. என்றாலும் அவை எல்லாவற்றையும் பாபாவுக்கே அர்ப்பணம் செய்துவிட்டு, அவரது பக்தனாக... இல்லையில்லை... அவரது வெறியனாக மாறி விட்டேன்!

**கல்கி :** உங்கள் நாட்டில் நடக்கும் இனக் கலவரங்கள் முடிவுக்கு வரவும் பாபாவிடம்



வேண்டிக் கொண்டீர்களா?

**ரணதுங்கா** : பாபாவிடம் வேண்டிக் கொள்ளாமல் வேறு யாரிடம் போய் வேண்டிக் கொள்ள முடியும்! இன்று அதுபற்றிக் குறிப்பிட்டே பாபாவிடம் கேட்டேன். விரைவிலேயே ஒரு முடிவுக்கு வரும் என்று நம்பிக்கையளித்தார். சந்தோஷமாக இருக்கிறது. என்னதான் இருந்தாலும் தமிழர்களும் நாங்களும் அண்ணன் தம்பிகள்தானே! எதற்காக இப்படிச் சண்டை போட்டு அமைதியான வாழ்க்கையை இழக்க வேண்டும்?

**கல்கி** : சரி, கிரிக்கெட்டுக்கு வருவோம். அது எப்படி தொடர்ச்சியாக உங்களால் வெற்றி பெற முடிகிறது?

**ரணதுங்கா** : இதில் என்ன ரகசியம் இருக்கிறது? நேரம் நல்ல நேரமாக இருந்தால் எல்லாமே வெற்றிதான். பாபாவின் அருள் கிடைத்தது கூட எங்கள் நேரம் நன்றாக இருப்பதால்தான்! அப்புறம் எப்படித் தவறுகள் நிகழும்?



"இதுதான் மேடம்; லேட்டஸ்ட் டிசைன்! ''அறிக்கைகள் புடவை''ன்னு வந்திருக்கு!"

– வீ.எஸ். கணேசன்

**கல்கி** : உங்கள் அணியினர் இலங்கையில சிறப்பாக ஆடுகிற அளவுக்கு வெளிநாடுகளில் சிறப்பாக ஆடுவது கிடையாது... உதாரணமாக, வெஸ்ட் இண்டீஸுக்கு எதிராக வெஸ்ட் இண்டீஸிலும், நியூஸிலாந்துக்கு எதிராக நியூஸிலாந்திலும் ஆடியபோது தோற்றுத் தானே போனீர்கள்... இந்தக் குற்றச்சாட்டு பற்றி?

**ரணதுங்கா** : இதெல்லாம் உங்களைப் போன்ற பத்திரிகையாளர்கள் கூறுகிற குற்றச் சாட்டுகள்தானே தவிர, உண்மையில்லை. உலகக் கோப்பை ஃபைனல் இலங்கையிலா நடைபெற்றது? ஷார்ஜாவில் வெற்றி, இந்திய பொன்விழா சுதந்தரக் கோப்பைக்கான வெற்றி... இவையும் இலங்கையில் நடைபெறவில்லையே! இருந்தாலும் நீங்கள் குறிப்பிட்ட அந்த நாடுகளில் நாங்கள் சரிவர விளையாடவில்லை என்பதும் உண்மைதான். அதனால் தோற்றோம். தொடர்ச்சியாகக் கிடைத்த வெற்றியினால் ஏற்பட்ட கர்வத்துக்குக் கிடைத்த பரிசுதான் அந்தத் தோல்விகள். அதன் பிறகு எங்கள் அணியில் ஒரு மீட்டிங் போட்டு எங்கள் தவறுகளை அலசினோம். பிறகு அவற்றைத் திருத்திக் கொண்டு, பேட்டிங் வரிசையை மாற்றினோம். பிறகு வெற்றி பெற்றோம். இனியும் வெற்றி பெற்றுக் காட்டுகிறோம், பாருங்கள்!

**கல்கி** : உங்கள் அணியின் திறமை ஒருநாள் போட்டிகளில் பளிச்சிடுகிற அளவுக்கு டெஸ்ட் போட்டிகளில் பளிச்சிடுவதில்லையே, ஏன்?

**ரணதுங்கா** : உண்மைதான். நான் ஓய்வு பெறுவதற்கு முன்பு, டெஸ்ட் போட்டிகளிலும் இலங்கை அணிதான் முதல் இடத்தில் இருக்கிறது என்கிற நிலையை அடைவோம் என்றே நம்புகிறேன்.

**கல்கி** : ஒருநாள் போட்டிகளில் உங்கள் அணியினர் காட்டும் அபாரத் திறமைக்கு என்ன காரணம்?

**ரணதுங்கா** : நாங்கள் எல்லாப் போட்டிகளிலும் மிகவும் கவனமாகத்தான் ஆடுகிறோம். நான் முன்பே சொன்ன மாதிரி, எங்களுக்கு நேரம் நன்றாக இருக்கிறது. கூடவே பாபாவின் அருளும் இருப்பதால் சாதனைகள் நிகழ்கின்றன; அவ்வளவுதான்!

**கல்கி** : இந்திய அணியின் ஆட்டம் பற்றிச் சொல்லுங்களேன்...

**ரணதுங்கா** : அப்படிச் சொல்வது தவறு. நான் இன்னொரு நாட்டு அணியின் கேப்டன் என்பதால் இன்னொரு அணியைப் பற்றிக் கூறுவது மிகவும் தவறு.

**கல்கி** : அண்மையில் உங்கள் நாட்டில் நடந்த ஆட்டத்தில், இந்திய அணி உங்களை வெற்றி கொள்ள முயன்றபோது, நீங்கள் 'அழுகுணி' ஆட்டம் ஆடியதாகவும் போதிய வெளிச்சம் இருந்தும் நீங்கள் விளையாட வரவில்லையென்றும் உங்கள் நாட்டு பத்திரிகையே எழுதியது பற்றி?

**ரணதுங்கா** : போதிய வெளிச்சம் இல்லையென்று நடுவர்கள்தானே தீர்ப்பளித்தார்கள். அதில் நாங்கள் எங்கே அழுகுணி ஆட்டம் ஆடினோம்?

**கல்கி** : உங்கள் அணி கோச், உல்மர் மாற்றப்பட்டு, வாட்மோர் வந்ததற்கு என்ன காரணம்? உங்களுக்கும் அவருக்குமான தனிப்பட்ட

## காதில் விழுந்தவை

# தி.மு.க. மேலிடத்தின் வருத்தம்!



♦ அ.தி.மு.க. (போட்டி) அணியினர், 'ஒன்று பட்டால் உண்டு வாழ்வு' என்று மதுரையில் காட்டியிருந்தாலும், அவர்களுக்குள் முணுமுணுப்புகள் இல்லாமல் இல்லை. ''ஜெ.வை. ஊழல் என்று சொல்லும்போது எங்களிடம் உள்ள கண்ணப்பனும் ஊழல் தான். ஆனால் அவர் வசதியாக இருக்கிறபடியால் கட்சியில் சற்று செல்வாக்காக இருக்கிறார். எங்க ஆள் தனிக்கட்சி நடத்தி எல்லாவற்றையும் இழந்து விட்டு இருக்கார்'' என்று புலம்பினார் திருநாவுக்கரசுவின் தோழர் ஒருவர்.

♦ ஒரு சீனியர் த.மா.கா. பிரமுகருடன் பேசிக் கொண்டிருந்தபோது மிக்க வருத்தத்துடன் சொன்னார்:

''மாநிலத்தில் ஆளும் கட்சியை எங்களால் தீவிரமாக எதிர்க்கவும் முடியவில்லை; அதே சமயம் ஆட்சியின் சுகத்தையும் அனுபவிக்க முடியவில்லை! இதன் விளைவு என்னவென்றால் கட்சி பாதிக்கப்படுகிறது. இந்த நிலை தொடருமானால் வரும் தேர்தலில் செல்வாக்கு சரியக்கூடும். எழுச்சியுடன் பிறந்த கட்சிக்கு இப்படி ஒரு சோதனை. தலைவர் என்ன செய்வாரோ தெரியவில்லை!''

♦ தி.மு.க. மேலிடத்துக்கு வேறு விதமான வருத்தம் இருக்கிறது. எதிர்க்கட்சியாக இருக்கும் போது உற்சாகமாகச் செயல்படும் கட்சிக்காரர்கள் ஆளும் கட்சியாக மாறும்போது செயல்படாமல் இருப்பதுதான் அந்த வருத்தம்! ''முன்னெல்லாம் தினசரி நிறைய பொதுக் கூட்டங்கள் நடத்துவோம். இப்போதெல்லாம் விரல்விட்டு எண்ணும் அளவில் தான் கூட்டங்கள் நடக்கின்றன. காரணம் கூட்டத்தை ஏற்பாடு செய்யும் கட்சிக்காரர்களும், பேசும் பேச்சாளர்கள் உட்பட பிரமுகர்களும் சென்னையில் தங்கள் சொந்த வேலையாக அலைந்து கொண்டிருப்பதுதான்'' என்றார் கட்சிப் பிரமுகர் ஒருவர்.

♦ முன்னாள் அமைச்சர் இந்திரகுமாரி, வழக்கு விசாரணைக்குப் போன நேரம் தவிர மற்ற நேரங்களில் என்ன செய்கிறார்? கோயில் கோயிலாகச் சென்று கொண்டிருக்கிறார். சாமியார்கள், ஜோதிடர்கள் ஆகியோரிடம் கலந்தாலோசிக்கிறார். இந்த வருடமும் சபரிமலைக்குச் செல்ல இருக்கிறார்.

— தில்லப்பா

---

தகராறா? உங்களின் உலகக் கோப்பை வெற்றிக்கு உல்மரின் பங்கு முக்கியக் காரணம் இல்லையா?

**ரணதுங்கா** : உல்மரால்தான் உலகக் கோப்பையை வென்றோம் என்று எப்படிச் சொல்ல முடியும்? ஜெயசூர்யாவும் அரவிந்தோவும் ரன் எடுத்தது உல்மராலா என்ன? ஒரு கோச் என்பவர் ஆட்டக்காரர்களுடைய குறைகளைப் போக்கி, அவர்களுடைய நம்பிக்கையை வளர்த்து ஆட வைப்பவராக இருக்க வேண்டும். அதற்குத்தான் அவர் சம்பளம் வாங்குகிறார். அப்படித்தான் உல்மரும் எங்களுக்கு ஆலோசனைகள் வழங்கினார். நாங்களும் வெற்றி பெற்றோம். அதனாலேயே வெற்றிக்கான முழுப் பங்கும் தமக்கே சொந்தம் என்று அவர் நினைப்பதா? அப்படி நினைத்ததால்தான் அவர் மாற்றப்பட்டு யார்டிலீ வந்துள்ளார். அணியின் கேப்டனும் கோச்சும் ஒரே கருத்தில் இருந்தால்தான் வெற்றி பெற முடியும். கருத்து மாறுபடும்போது எதிர்க் கருத்துக் கூறுபவர் மாற வேண்டியதுதான். 'நீயா நானா' என்கிற பிரச்னையால்தான் உல்மர் மாற்றப்பட்டார். போர்டும் என்னை ஆதரித்தது. இப்போது நானும் யார்டிலீயும் எல்லா முடிவுகளையும் சேர்ந்தே எடுக்கிறோம்.

**கல்கி** : இப்போது உங்கள் அணியில் நன்றாக ஆடக்கூடிய அனைவருமே ஓய்வுபெறும் வயதில் உள்ளீர்கள். அடுத்த வரிசைக்கு என்ன செய்யப் போகிறீர்கள்?

**ரணதுங்கா** : நான், ஜெயசூர்யா, டி-சில்வா, மகானாமா ஆகியோர் அந்தக் காலகட்டத்தில் இருக்கிறோம் என்பது உண்மைதான். நாங்கள் அனைவரும் 99-ல் இங்கிலாந்தில் நடைபெறவுள்ள உலகக் கோப்பை வரை ஆடுவதாக உத்தேசம். நாங்கள் சாம்பியன்தான் என்பதை மறுபடியும் ஒருமுறை நிரூபித்து விட்டே ஓய்வு பெறுவோம். மற்றபடி எங்கள் பௌலர்கள் அனைவருமே இளைஞர்கள்தான். அதனால் அதுபற்றிக் கவலையில்லை. பேட்டிங் பற்றித்தான் கவலைப்படுகிறோம். அதனாலேயே புதியவர்களைச் சேர்த்து, அவர்களுடைய திறமைகளைச் சோதித்து, அவர்களை அடையாளம் காணுகிற முயற்சியில் இறங்கியிருக்கிறோம்.

பேட்டி: **நந்தினி**
படம்: **உமாமணி**

• மதுரை சொர்ணத்தம்மாள் முதலானோர் போலீசாரால் அவமானப்படுத்தப்பட்ட நிகழ்ச்சி...



# பெண்களைக் கௌரவிக்கும் ஒரு டீ.வி. தொடர்!

"பெயர்தான் ஞானி, இப்படிப் பிழைக்கத் தெரியாத அஞ்ஞானியாக இருக்கிறாரே!" என்று வியப்புடன் அலுத்துக் கொள்கிறது தொலைக்காட்சி வட்டாரம். என்னதான் விஷயம் என்று தெரிந்து கொள்ளாவிட்டால் அம்புலி மாமா வேதாளம், 'தலைவெடித்து விடும்' என்று விக்கிரமாதித்தனை மிரட்டுவது போல நமக்குள் ஒரு குரல் ஒலிக்க, பத்திரிகையாளர் ஞாநியைத் தேடிப் போனோம்.

சமாசாரம், வெகு சுவாரஸ்யம். நூற்றைம்பது ஆண்டுகளாகப் பெண்கள் தம் உரிமைக்காகப் போராடி, அடிக்கடி சறுக்கி விழுந்து, எழுந்து நிற்கிற சமூகவியல் விஷயத்தை ஒரு டாக்குமெண்டரி டிராமாவாகத் தயாரித்திருக்கிறார் ஞாநி. தயாரிப்பதற்காக ஆறு லட்சம் கொடுத்தது தூர்தர்ஷன்.

ஆனால், அவர்கள் கேட்ட மூன்று வாரத் தொடரை நாலு ரூபாயிலேயே முடித்துவிட்டு, சமர்த்தாக மிச்சம் இரண்டைத் திருப்பிக் கொடுக்கத் தயாராகி விட்டார் ஞாநி.

இப்படி ஒரு அசடு உண்டோ? சுருட்டத் தெரியாமல் திருப்பியா தருவார்கள்? என்கிற டிபிகல் இந்தியத்தனம் மிக்க விமர்சனங்கள் வர, யோசித்தார் ஞாநி.

எதற்குத் திருப்புவது? பேசாமல் இன்னும் இரண்டு எபிசோடுகள் சேர்த்து எடுத்து விட்டால்?

52 வாரத்துக்கான ஸ்கிரிப்ட் கையில் தயாராக இருந்தது. எத்தனையோ தியாகிகளின் வாழ்க்கைப் போராட்டக் கதைகள். அதில் இரண்டைத் தேர்ந்தெடுத்து எடுத்து, மொத்தம் ஐந்து எபிசோட்களாக தூர்தர்ஷனுக்குத் தந்திருக்கிறார்.

ரெஸ்பான்ஸ் எப்படித் தெரியுமா?

"நாங்க மூணுதானே எடுக்கச் சொன்னோம்? அஞ்சு எதுக்கு? அதெல்லாம் ஒளிபரப்ப முடியாது!"

தொலைக்காட்சியின் தேசபக்தி அத்தகையது.

மிக நீண்ட மௌனத்துக்குப் பின், இப்போது ஒருவழியாக ஒளிபரப்ப ஒப்புக் கொண்டிருக்கிறது டி.டி. 'சுதந்தரப் பொன்விழா ஆண்டின் கொண்டாட்டம் இது' என்று நாள் தோறும் ஒளிபரப்பாகும் விளம்பரத்துக்கு ஓர் அர்த்தம் வேண்டாமா?

ஞாநி இந்தத் தொடருக்காக எடுத்துக் கொண்டிருக்கிற சிரமங்கள் கொஞ்சநஞ்ச

மல்ல. ஆதாரங்களுக்காக மூன்று மாத காலம் தேடிப் பிடித்துப் படித்த புத்தகங்கள் மட்டும் 150! பிறகு சம்பவங்களைத் தொகுத்துத் திரைக் கதையாக்கி 52 வார ஸ்கிரிப்டாக்கி... முக்கிய மான விஷயம், இது வெறும் 'பீகாரில் மழை...' ரக டாக்குமென்டரி அல்ல. போரடிக்காத வேகத்தில் விறுவிறுப்புடன் நாடக வடிவில் தரப்பட்டிருக்கும் நிஜ விஷயங்கள்.

நடித்திருப்பவர்கள் சூப்பர் ஸ்டாரிணிகள் அல்ல! ஜனநாயக மாதர் சங்கத் தலைவி வாசுகி முதல் பத்திரிகையாளர் எஸ். சுபா, பிருந்தா, சுதாசேஷையன், சந்தியா, பத்மா, லதா என்று இன்று முன்னணியில் இருக்கிற பெண் மணிகள்!



• ரேவதி, சித்திகா

"திராவிடர் கழக அருள்மொழி யைக் கூட நடிக்க வைக்க முயன் றேன். ஆனால் முடியாமப் போயிடுச்சி" என்கிறார் ஞாநி.

ஒரே ஒரு நட்சத்திரமும் நடித் திருக்கிறார் – ரேவதி.

"இன்றைய கல்வி முறைகள் பற்றி ஒரு கருத்தரங்கில் என் னோடு ரேவதியும் கலந்து கொண்டார். அந்தக் காலத்தில் பெண்கள், கல்விக்கு என்னென்ன சிரமங்களைப் பட்டார்கள் என்ற விஷயத்தைச் சொல்லி, 'நீங்கள் நடிக்கிறீர்களா?' என்று கேட்டேன். ஒப்புக் கொண்டதோடு மட்டுமல் லாமல் சம்பள விஷயத்திலும் மிக அனுசர ணையாக நடந்து கொண்டார்" என்றார் ஞாநி.

ஜாலியன்வாலாபாக் படுகொலை மாதிரியே தமிழ் நாட்டிலும் ஒரு கொடுமையான சம்பவம் நடந்திருக்கிறது. சுதந்தரப் போராட்டத்தில் ஈடு பட்டதற்காக இருநூறு ஆண்களையும் நூற் றைம்பது பெண்களையும் நீல் என்கிற அதிகாரி புளியமரத்தில் தூக்கிலிட்டிருக்கிறார். முன்பு அந்த நீலின் சிலை சென்னை ஸ்பென்சருக்குப் பக்கத்தில் இருந்தது. பிறகு அது சென்னை அருங்காட்சியகத்தில் வெறும் காட்சிப் பொரு ளாக வைக்கப்பட்டு விட்டது!

நீலால் தூக்கிலிடப்பட்ட சம்பவத்தைச் சொல்கிறபோது நீல் சிலையைக் காட்ட வேண்டுமென்பதற்காக ரொம்பவும் சிரமப்பட்டு அனுமதி பெற்று அருங் காட்சியகத்துக்குள் சென்று படம் பிடித்திருக்கிறார். இதிலென்ன சிரமம் என்ப வர்களுக்கு ஒரு தகவல்... இது வரை யாரும் அருங் காட்சி யகத்துக்குள் படம் பிடிக்க அனுமதிக்கப்பட்டதில்லை. இப்படி ஒவ்வொன்றையும் சிரமமெடுத்துத் தயாரித் திருக்கிறார் ஞாநி.

பெண்களின் வாழ்க் கைப் போராட்டம் பற்றிய முழு – முதல் டாக்கு-ட்ராமா இதுதான்.

"இது ஒரு நிறைவான அனுபவம் எனக்கு. உண் மையில் பெண்களின் சமூக வியல் வரலாற்றைத் தேடிப் படிக்கப் படிக்க பிரமிக்கத் தக்கதாக இருந்தது. என்னை வளப்படுத்திக் கொள்ளக் கிடைத்த வாய்ப்பாகவே இதைக் கருதுகிறேன். ஆனாலும் எத்தனையோ பேரைப் பற்றி விரிவாகச் சொல்ல முடிய லையேங்கற ஏக்கமும் சில பேரைப் பற்றியாவது எடுத்துக் காட்ட முடிகிறதே என்கிற நிறை வும் இருக்கு" என்கிறார் ஞாநி.

வைஜெயந்தி ஐபிஎஸ் போன்ற 'பெண் வீரகாவியங்' களிலிருந்து கொஞ்சம் விலகி, நிஜ முகங்களைக் காண விரும்பு பவர்கள் நவம்பர் முதல் திங்கட் கிழமையிலிருந்து இரவு எட்டு மணிக்கு டிடி பார்க்கவும்.

— சு. வேணுகோபால்



• ஞாநி

'நான்' என்கிற உணர்வு இல்லாத மனிதனே இல்லை. நான் திறமைசாலி; நான் புத்திசாலி; நான் அழகானவன்; நான் இல்லாவிட்டால் வீட்டில் அல்லது அலுவலகத்தில் எதுவுமே நடக்காது... இப்படி ஒவ்வொரு விஷயத்திலும் 'நான்' என்கிற உணர்வுதான் நமக்கு முன்னால் வந்து நிற்கிறது. அந்த நானின் கையைப் பிடித்துக் கொண்டுதான் நாம் நடந்து கொண்டிருக்கிறோம்.

நிஜத்தில் நாம் அப்படி இருக்கிறோமா இல்லையா என்பது பற்றியெல்லாம் பெரும்பாலானவர்கள் கவலைப்படுவதில்லை. உண்மையில் நாம் எப்படியிருந்தாலும் அந்த 'நான்' என்பதை நாம் அப்படித்தான் வைத்திருக்கிறோம். கூட இருக்கிற ஜால்ராக்களும் நமது 'நான்' என்பதை - நம்மைப் பற்றிய நமது கற்பனை உருவத்தை உண்மை போலவே செய்து விடுகிறார்கள். நாமும் உண்மையென்றே நம்பிக் கொண்டிருக்கிறோம்.

இந்த நிலையில், நமது 'நான்' என்கிற உருவம் பிறரால் காயப்படும் போது நாம் துடித்துப் போகிறோம். நமது கௌரவம் பாதிக்கப்பட்டதாக நினைத்துக் காயப்பட்டு விடுகிறோம். அந்தக் காயத்தின் வலிதான் கோபம்!

# ஜெளத்ரம் பழகலாமா?

ஒரு சினிமா பத்திரிகையின் போட்டோகிராபர். புகழ்பெற்ற வட இந்திய ஹீரோவைப் படமெடுக்க வேண்டியிருந்தது. ஹீரோ பாடாய்ப் படுத்தினார். காலை போனால் 'மாலை வா' என்றார். மாலை போனால், 'காலை வா' என்றார்: 'அடுத்த வாரம் வைத்துக் கொள்ளலாமே!' என்றார்.

ஒருபுறம் ஹீரோ இப்படி அலைக்கழிக்க, மறுபுறம் பத்திரிகை ஆசிரியர், 'உடனே படம் வேண்டும்' என்று நெருக்கடி செய்தார். வீட்டில் குழந்தைக்கு வேறு உடம்பு சரியில்லை. கடைசியில் ஹீரோ அலட்சியமாகப் பதில் சொல்கிற போது, கோபத்தில் அந்த ஹீரோவை ஒரு குத்து விடுகிறார் போட்டோகிராபர்!

ஹீரோவின் அலைக்கழிப்பு, குழந்தைக்கு உடம்பு சரியில்லாமல் போனதால் ஏற்பட்ட டென்ஷன், பத்திரிகை ஆசிரியரின் கெடுபிடி... என்று எல்லாமே ஒட்டு மொத்தமாகச் சேர்ந்து அந்த போட்டோகிராபரின் 'நான்' என்பது பலமாகக் காயப்பட்டதால்தான் அதன் வலி ஒரு குத்தாக வெளிப்பட்டது. இது நடந்தது முடிந்த ஓர் உண்மை நிகழ்ச்சி.

நமது கோபத்துக்கு வடிகாலாக - நமது கோபம் தீர - சம்பந்தப்பட்டவரை ஒரு குத்து விடுவதுதான் தீர்வா? அதனால் நமது கோபம் குறைந்து விடும் என்றாலும் பின் விளைவுகளைப் பற்றி யோசிக்க வேண்டும். சம்பந்தப்பட்டவருக்கும் 'நான்' என்கிற உணர்வு இருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டு செயல்பட வேண்டும். நாம் விடுகிற குத்தால் சம்பந்தப்பட்டவரின் 'நானும்' காயப்பட்டுத் திருப்பித் தாக்காதா? அப்புறம் அதற்கு முடிவே இல்லாமல் போய்விடும்!

'நான்' என்கிற நமது கற்பனையைப் பாதுகாக்கிற ஓர் உத்திதான் கோபம். நமது மேலதிகாரி நம்மைத் திட்டுகிறார். 'நாம் தவறுதான் செய்து விட்டோம். அவர் திட்டியது சரிதான்' என்றாலும் அதை எப்போது உணர்வோம் தெரியுமா? அந்த அதிகாரி தமது அறைக்கு நம்மை அழைத்துத் தனிப்பட்ட முறையில் சுட்டிக்காட்டித் திட்டுகிறபோது. 'ஸாரி சார்!' என்று நாமும் வருத்தம் தெரிவித்து விடுவோம். அப்போது நமது 'நான்' பாதிக்கப்படுவதில்லை.

இப்படியில்லாமல், அந்த அதிகாரி நமது இருப்பிடத்துக்கே வந்து மற்றவர்களுக்கு முன்னால் நம்மைத் திட்டுகிற போதுதான் நமது 'நான்' பாதிக்கப்படுகிறது. அத்தனை பேருக்கு முன்னால் நம்மை அவமானப்படுத்தி விட்டாரே என்கிற உணர்வு மேலோங்கி விடுகிறது. அதனால் நாம் செய்த தவறைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு, நமது 'நான்' பாதிக்கப்பட்டதைப் பெரிய அவமானமாகக் கருதுகிறோம்.

அவர் அதிகாரி என்பதால் நம்மால் ஒன்றும் செய்ய முடிவதில்லை. வீட்டுக்கு வந்து மனைவியிடமும் குழந்தைகளிடமும் எரிந்து விழுகிறோம். விஷயம் தெரிந்த மனைவியாக இருந்தால், ஆபீஸில் ஏதோ பிரச்னை போலிருக்கிறது என்று பேசாமல் இருந்து விடுகிறாள். குழந்தைகளையும் விளையாடப் போங்கள் என்று அனுப்பி விடுகிறாள். எதிர் வினைகள் எதுவும் இல்லாத அந்த நிலையில்தான் நம்மை நாமே அலசிப் பார்க்க ஆரம்பிக்கிறோம். ஆபீஸில் நடந்ததற்கு இவர்களிடம் போய் எரிந்து விழுந்தோமே என்று நமக்கு நாமே சமாதானமாகி, மனைவியிடமும் குழந்தைகளிடமும் கொஞ்ச ஆரம்பிக்கிறோம். மனம் பழைய



நிலையை அடைந்து விடுகிறது.

ஆனால், விஷயம் புரியாத மனைவி, 'ஆபீஸ்ல ஒரு பிரச்னைன்னா அதை வீட்டுல வந்துதான் காட்டணுமா?' என்று திருப்பித் தாக்குகிற போது, நமது 'நான்' மேலும் காயப் பட்டு வீட்டிலும் பிரச்னையாகிறது!

கோபம் பிரச்னைக்குரிய ஓர் உணர்வு தான். பின் விளைவுகளை ஏற்படுத்தக் கூடியது தான் என்பதால் அதை அப்படியே அடக்கிக் கொண்டு விடலாமா? அப்படிச் செய்வதும் கடைசியில் மன இறுக்கத்தில் போய் முடிய லாம். எதிராளியின் சொல்லோ செயலோ நமக் குள் நியாயமான கோபத்தை ஏற்படுத்தும் போது, உடனடியாகப் பாய்ந்து குதறாமல் சற்று பொறுத்திருந்து வெளிப்படுத்தினால் உதவும். 'உன் சொல் அல்லது செயல் என்னைப் புண் படுத்திவிட்டது' என்பதை உறுதியாக ஆனால் உணர்ச்சிவசப்படாமல் வெளிப்படுத்தும்போது அதற்குப் பலன் கிடைக்கும்.

நாம் சினிமாவுக்குச் செல்கிறோம். நமது இருக்கை ஒரு கோடியில் இருக்கிறது. அங்கு செல்ல, இருக்கைகளின் இரண்டு வரிசைக்குள் புகுந்து போக வேண்டியிருக்கிறது. அப்படிச் செல்லும்போது, உட்கார்ந்திருப்பவரின் காலை தெரியாமல் மிதித்து விடுகிறோம். அப்போது உடனே என்ன செய்கிறோம்? 'ஸாரி சார்!' என்று சொல்கிறோம். இன்னும் சிலர் தமது கைகளால் மிதிபட்டவரின் காலைத் தொடுவது போல் குனிந்து, கன்னத்தில் கூடப் போட்டுக் கொள்வார்கள். சம்பந்தப்பட்டவரும் சகஜமாக, 'பரவால்லே, பார்த்துப் போங்க' என்பார்.

இப்படியில்லாமல், ஒருவர் காலை மிதித்து விட்டது பற்றிக் கவலையே படாமல் நாம் போனால் என்ன ஆகிறது? சம்பந்தப்பட்டவர், 'யோவ்... கண்ணைப் பின்னாலயா வச்சிருக்கே? எருமை மாடு மாதிரி காலை மிதிச்சுக்கிட்டுப் போறியே!' என்பார். அப்புறம் பிரச்னைதான்!

நாம் சினிமா தியேட்டருக்குச் சென்றது நமக்குப் பிடித்த படத்தைப் பார்த்துச் சந்தோஷப் படுவதற்குத்தானே தவிர, முன்பின் தெரியாத யாரோ ஒருவருடன் சண்டை போடுவதற்காக அல்ல என்பதால், நாம் உடனடியாக 'ஸாரி' சொல்லி விடுகிறோம். பிரச்னைகள் எழாமல் பார்த்துக் கொள்கிறோம். அதனால் சந்தோஷ மாகச் சினிமா பார்த்து விட்டு வருகிறோம்.

அதுபோல்தான் வாழ்க்கையும்! ஒரு சினிமா பார்ப்பதற்கே சமாதானம் செய்து கொள்கிற நாம் - தவறுக்காக வருந்துகிற நாம் - வாழ்க்கை என்கிற மிகப் பெரிய சந்தோஷப் பயணத்தில் சமாதானமாகப் போவதில் என்ன தவறு?

சமாதானம் சரிதான். எல்லா இடங்களிலும் எல்லாச் சமயங்களிலும் சமாதானமாகவே போக வேண்டும் என்றால் 'ரௌத்ரம் பழகு' என்று பாரதி சொல்வானா?

'ரௌத்ரம் பழகு' என்று பாரதி சொன்னது, நமது தவறுகளை மறைத்துக் கொண்டு, நமது கற்பனை 'நானை'க் காப்பாற்றுவதற்காக அல்ல. சமூக அநீதிகளிலிருந்து நியாயங்களைக் காப் பாற்ற!

**டாக்டர் எஸ். விஜயகுமார்**

## சில நாட்களில் நான் நானாகவே இல்லை...

"ஆனால் ஷேப்பர்ஸ் எப்படி வித்யாசமானது?"

விஞ்ஞான பூர்வமாக தயார் செய்யப்பட்ட சேனிடரி நேப்கின் ஷேப்பர்ஸ் இப்பொழுது எனக்கு முழு சௌகரியமும், சுதந்திரமும் கூடுதல் பாதுகாப்பும் கொடுக்கிறது.

"ஆனால் ஷேப்பர்ஸ் நீண்ட சதுரமாக இல்லையே?"

ஷேப்பர்ஸ் கச்சிதமாக பொருந்தும்படி வடிவமைக்கப்பட்டுருக்கிறது. பின்புறம் ப்ளாஸ்டிக்கினால் சீல் செய்யப்பட்டிருப்பதால், **ஓரம் கறை படிவதில்லை, உப்பல் இல்லை.**

"ஆனால் தடிமனான நீண்ட சேனிடரி நேப்கின்தானே நல்ல உறிஞ்சும் தன்மையுள்ளது?"

இல்லை. இனி கிடையாது. ஷேப்பர்ஸ் மெல்லியது கச்சித வடிவுடையது. ஏனெனில் அதன் ஸ்பெஷலாக கம்ப்ரெஸ் செய்யப்பட்ட உள்ளிழுக்கும் பொருள், **அதிகமாக உறிஞ்சிவிடுகிறது.** அதனால் தடிமனான நேப்கின் கொடுக்கவே முடியாத சுதந்திரம் உங்களுக்குக் கிடைக்கிறது.

[illegible]

பெயர்: ________ வயது: ________ தொழில்: ________

விலாசம்: ________ பின்கோடு: ________ போன் நம்: ________

... ஹெல்த்கேர் லிமிடெட், சுபாஷ் ரோடு-A, வில்லே பார்லே மும்பை 400057.

... லிமிடெட்டின் ஒரு தரமான தயாரிப்பு

அதன்
தனித்தன்மையான
அப்சார்ப் ப்ரொடக்ஷன் டெக்னாலஜி
மூலமாக ஷேப்பர்ஸ் மட்டுமே எனக்கு
நம்பிக்கையை அது அதிகமாகத்
தேவைப்படும் பொழுது
அளிக்கிறது.

"எல்லா சேனிடரி நேப்கின்களும் நடுவில் திரண்டு விடுவதில்லையா? சமமாகப் பரப்பாதா?"



ஷேப்பர்ஸ் அப்படி இல்லை அதன் தனித்தன்மையான அப்சார்ப் ப்ரொடக்ஷன் டெக்னாலஜி சேனல் ஈரத்தை கீழே இழுத்து பேடின் முழு அளவிலும் சமமாகப் பரப்பி மேற்பரப்பை சௌகர்யமான உலர்வாக்கி நீண்ட நேரம் உபயோகிக்க உதவுகிறது.

வாருங்கள், நம்பிக்கை பெறுங்கள் - அது உங்களுக்கு அதிகமாகத் தேவைப்படும்பொழுது ஷேப்பர்ஸ் வாங்குங்கள்.







**நம்பிக்கையின் வடிவம்.**

ரூ. 27/- மட்டுமே (10 கொண்ட ஒரு பேக்)

CODE/GF/2/9-97 TAM

# சர்லா செய்தது சரியா?

**வ**ழக்கு விசாரணையை துரிதமாக முடிக்காமல், ஐந்து வருடமாக தன்னை நீதிமன்றக் காவலில் வைத்திருப்பதாகக் கோபமடைந்த சர்லா, நீதிபதியைத் தாக்க முயற்சி செய்த சம்பவம் நீதிமன்ற வட்டாரங்களில் ஒரு பரபரப்பை உண்டாக்கி இருக்கிறது. சர்லாவின் இந்த நீதிமன்ற நடத்தை சரிதானா? மத்திய அரசு வழகுரைஞரும், மூத்த வழக்குரைஞர்களில் ஒருவருமான ஏ.பி. சூர்யபிரகாசம் சொல்கிறார்...

''குற்றவியல் நடைமுறைச் சட்டம் 307ன் கீழ் சர்லா மீது சந்திரலேகாவைக் கொலை செய்ய முயற்சி செய்ததாக வழக்குப் பதிவு செய்து விசாரணை நடந்து வந்தது. இந்தப் பிரிவின்படி வழக்குப் பதிவு செய்தால், அதிக பட்சமாக 90 நாட்களுக்குள் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்து விசாரணையைத் துவக்கி விட வேண்டும். குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்படுகிறதோ இல்லையோ 90 நாட்களுக்குப் பிறகு குற்றம்சாட்டப் பட்டவருக்கு, ஜாமீன் கொடுக்க வேண்டும். ஆனால் சர்லா விவகாரத்தைப் பொறுத்த மட்டில் வேறு பல காரணங்களையும் நீதிமன்றம் நோக்கியிருக்கலாம்.



முதலாவது அவர் ஒரு history shooter. அதாவது [illegible] ஆகப் பட்ட கேஸ்களில், சிக்கிக் கொண்டிருப்பவர். சென்னையில் அவருக்கு நிரந்தர முகவரி கிடையாது. சந்திரலேகா வழக்கைப் பொறுத்தவரை கூலிக்குச் செயல்படும் கொலைகாரனைப் போல் செயல்பட்டதாகக் கருதப்பட்டவர். இருந்தாலும் நீதிமன்றம் அவர் மேல் கருணை கொண்டு ஒருமுறை ஜாமீனில் விட்டது. அவர் மும்பைக்குச் சென்று விட்டான். அதன்பின் சு. சுவாமி, சர்லாவின் ஜாமீன் விவகாரத்தை அரசியலாக்கவே, சென்னை போலீஸ் மிகவும் கஷ்டப்பட்டு மீண்டும் அவரைப் பிடித்து வந்தது. அப்படியும் மீண்டுமொரு முறை ஜாமீன் கொடுக்க முன்வந்தபோது, 'தமது உயிருக்கு ஆபத்து என்று ஜெயிலுக்குள்ளேயே இருக்க விரும்பினான் சர்லா

''இந்த வழக்கைப் பொறுத்த மட்டில் அரசியல் தட்பவெப்ப நிலைக்கு ஏற்ப பரபரப்பு ஏற்பட்டுக் கொண்டு இருக்கிறது. முதலில் மாநில குற்றப் பிரிவு போலீஸார் விசாரித்தார்கள். பின்னர் சுப்ரீம் கோர்ட்டின் தலையீட்டின்

பேரில் சி.பி.ஐ. வழக்கை எடுத்துக் கொண்டது. சர்லாவோ இரண்டு முறை வாக்குமூலம் கொடுத்திருக்கிறார். அதுவும் இரண்டாவது முறையாக வாக்குமூலம் கொடுத்தபோது, முன்னாள் அதிமுக. அமைச்சர், மற்றும் சாராயத் தொழிலதிபர் ஆகியோர் தூண்டிவிட்டுத்தான் ஆசிட் வீசியதாக சர்லா சொன்னதாகப் பரபரப்புடன் பேசப்பட்டது.

"இப்படியான நீண்ட விசாரணையில் இப்போது தடாலடியாக சர்லாவுக்கும் இந்த வழக்குக்கும் சம்பந்தம் இல்லை என்று சி.பி.ஐ. கோர்ட்டில் சொல்லி விட்டது. தமிழ் சினிமாவில் கடைசியில் வரும் திருப்பம் போல இந்தக் காட்சி அமைந்து விட்டது. இப்போது எழுப்பப்படும் மிக முக்கியமான கேள்வி, என்னவென்றால், சர்லா அனுபவித்த ஐந்து வருட தண்டனை எந்தக் கணக்கில் வரும்?

"ஆனால் சர்லாவே தன்னைச் சிலர் தூண்டிவிட்டு இந்தக் குற்றத்தைச் செய்ததாக இரண்டு முறை வாக்குமூலம் கொடுத்திருப்பதால், சிறைப்படுத்தியதற்காக எந்தவித பரிகாரமும் கோர வாய்ப்பில்லை.

"ஒரு விசாரணைக் கைதிக்கு பலவிதங்களில் மன உளைச்சல் இருக்கும். அவர் தன் ஆத்திரத்தை வெளிப்படுத்த நீதிமன்றம்தான் சரியான இடம் என்று கருத வாய்ப்பிருக்கிறது. ஆனால் அந்தக் கைதி சட்டபூர்வமான வழிகளைக் கையாள வேண்டுமே தவிர, வன்முறையில் இறங்கக் கூடாது. ஆனால் இப்போதெல்லாம் மிகவும் ரொட்டீனாக கைதிகளை நீதிமன்றக் காவலில் வைக்கச் சொல்லி உத்தரவு போடுகிறார்கள். விசாரணையைத் தாமதிக்கும் போலீஸ் மீது நீதிமன்றம் பாரபட்சம் காட்டக் கூடாது. அதே சமயம் போலீஸுக்குப் பல நடைமுறைச் சிக்கல்கள் உண்டு என்பதையும் மறந்து விடக் கூடாது.

"கைது செய்வது முதற்கொண்டு, ஜாமீனில் விடுவது போன்ற விஷயங்களில் சுப்ரீம் கோர்ட் பல வழக்குகளில் நிறைய வழிமுறைகளைச் சொல்லி இருக்கிறது. துரதிர்ஷ்டவசமாக அறியாமை காரணமாகவும் அவசரத்தின் காரணமாகவும் பல நேரங்களில் இந்த வழிகாட்டுதல்கள் கடைப்பிடிக்கப்படுவதில்லை. நன்கு விவரம் தெரிந்தவர்களும் வசதியானவர்களும்தான் இந்த வழிகாட்டுதல்களின் பலன்களை அடைகிறார்கள்.

சர்லா அவசரப்பட்டதன் விளைவு, சந்திரலேகா வழக்கில் விடுதலை செய்யப்பட்டாலும், கோர்ட்டில் நீதிபதியைத் தாக்க முயற்சி செய்த வழக்கில் 'உள்ளே' இருக்க வேண்டிய நிலை!

சந்திப்பு : ப்ரியன்


• திருஞானம்

# இந்தக் கொடுமைக்கு முடிவு கட்ட வேண்டாமா?

சுமார் பதினைந்து பஸ்கள், டிரைவர்–கண்டக்டர்கள் இல்லாமல் டெப்போவிலேயே நின்றிருந்தன. இடம் : கே.கே. நகர் மாநகரப் போக்குவரத்துக் கழக டெப்போ.

அத்தனை பேரும் விடுப்பில் போய் விட்டார்களா என்ன? "அந்தக் கூத்தை ஏன் கேக்கறீங்க..." என்று ஆரம்பித்தார் அந்த டெப்போவின் (சி.ஐ.டி.யு.) தலைவர் திருஞானம்.

"இந்த டெப்போன்னு இல்லீங்க... சென்னைல இருக்கற 24 டெப்போவிலும் சரி... ஒவ்வோர் இடத்திலும் இப்படிப் பதினைஞ்சு பஸ்களாவது சும்மாதான் நிக்கும். காரணம் ஆள் இல்லாதது இல்லீங்க... ஆளுங்கட்சிக்காரங்க என்ன செய்யறாங்க தெரியுமா? வந்து 'ஆன் டியூட்டி'ன்னு கையெழுத்துப் போட்டுட்டு கரை வேட்டியைக் கட்டிக்கிட்டுக் கிளம்பிடுவாங்க. அப்புறம் பஸ்கள் எப்படி ஓடும்? இப்படித்தான் நிக்கும். இந்த ஆட்சியில பரவாயில்லைன்னே சொல்லலாம். போன ஆட்சியில இப்படி இருபது முப்பது பஸ்கள் கூட நிக்கும்... ஒவ்வொரு டெப்போவிலும் பதினஞ்சு பஸ்ஸுன்னு 24 டெப்போவுக்கும் கணக்குப் போட்டுப் பாருங்க... மொத்தம் 360 பஸ்! அப்புறம் சிட்டி ஜனங்க தெரிசல்ல தவிக்காம என்னங்க செய்வாங்க? இப்படி வேலை செய்யாமலே டிரைவர், கண்டக்டர்கள் வாங்கற சம்பளத்தைக் கணக்குப் போட்டுப் பாருங்க... மாசத்துக்கு 8.60 லட்சம். தமிழ்நாடு பூராவும் கணக்குப் போட்டுப் பாருங்க... அப்புறம் அரசு போக்குவரத்துக் கழகங்கள் நஷ்டப்படாம என்னங்க செய்யும்? கட்டணத்தை ஏத்தி ஜனங்க தலைலதான் கை வைக்கறாங்க. எல்லா ஆட்சியிலும் கட்சிக்காரங்க சுகமாகத்தான் இருக்காங்க!" என்றார்.

— வேணுஜி

படம்: தி. பாண்டியராசு











1997 நவம்பர் 9
ஈசுவர ஐப்பசி 23
மலர் : 56
இதழ் : 15

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## கிடுக்கிப்பிடியில் கல்யாண்சிங்!

கல்யாண் சிங் வாய்க்கரிசி போட வேண்டியிருக்கும் என்று சென்ற வாரம் தலையங்கத்தில் குறிப்பிட்டிருந்தோம். கடுமையான வார்த்தைதான்; ஆனால் தவறில்லை என்று நிரூபித்து விட்டார் கல்யாண் சிங்.

நம்பிக்கை வாக்கெடுப்பில் பி.ஜே.பிக்கு ஆதரவு தெரிவித்த எம்.எல்.ஏக்களின் எண்ணிக்கை 222. கல்யாண் சிங் அமைச்சரவை உறுப்பினர்களின் எண்ணிக்கை 93! கட்சி மாறி வந்த அத்தனை எம்.எல்.ஏக்களும் அமைச்சர்கள்! 'அமைச்சரவையை விரைவில் மேலும் விரிவாக்குவேன்' என்று வீர சபதம் வேறு! போகிற போக்கைப் பார்த்தால் 222 எம்.எல்.ஏக்களும் அமைச்சர்களாகிவிடுவார்கள் போலிருக்கிறது!

'நேற்று வந்த பிற கட்சி எம்.எல்.ஏக்களுக்கு மட்டும் அமைச்சர் பதவியா? நாங்கள் என்ன பாவம் செய்தோம்...?' என்று முணுமுணுக்கிறார்கள் பி.ஜே.பி. எம்.எல்.ஏக்கள்.

இன்னொரு பக்கம் மாயாவதி சப்புக் கொட்டிக் கொண்டு சண்டைக்குத் தயாராகிறார். "அக்கிரமம்! அநியாயம்! இந்த ஆட்சியை அனுமதித்ததே மாபெரும் தவறு. ஆளுனர் சிபாரிசுப்படி ஜனாதிபதி ஆட்சிதான் வந்திருக்க வேண்டும்..." என்று சபாநாயகரிடம் முறையிட்டிருக்கிறார்.

அடித்துப் பிடித்து பதவியைத் தக்க வைத்துக் கொண்ட உ.பி. முதல்வர், முதல்தரமான சிக்கலில் இருக்கிறார். எதிர்க்கட்சி ஏவுகணை மட்டுமின்றி கட்சிக்குள்ளேயும் அதிருப்தி, மக்கள் மத்தியிலும்




மரியாதை இழப்பு.

இத்தனை இழுபறிகளுக்கிடையே உ.பி.யில் நிர்வாகம் எவ்வாறு நடத்தப்பட முடியும்...?

மத்தியில் பதின்மூன்று கட்சிக் கூட்டணி படும் பாட்டையும் அதன் பலனாக நாட்டில் ஏற்பட்டுள்ள தேக்க நிலையையும் நாம் நன்கு உணர்ந்திருக்கிறோம். அதே கதிதான் இப்போது உ.பி. மாநிலத்துக்கும் ஏற்பட்டிருக்கிறது.

கொள்கை ஒற்றுமை இல்லாத கட்சிகள் கூடி 'ஆட்சி' என்பதாக ஒரு பரிதாப அமைப்பை நிறுவியுள்ளன.

மத்தியில் எதிர்க்கட்சியாக இருந்து ஐக்கிய முன்னணியின் கூட்டணி குழப்பங்களைச் சாடும் பி.ஜே.பி., உ.பி.யில் அதே குழப்பத்துக்கு இடமளித்திருப்பது வேதனைக்குரிய விஷயம்.

தேசிய அளவில் மக்கள் மதிப்பைப் பெற்று அவர்களிடம் ஓர் எதிர்பார்ப்பையும் உருவாக்கிய பி.ஜே.பி., ஹிந்துத்வ பிடிவாதத்தாலும் பப்ரி மஸ்ஜித் தகர்ப்பினாலும் கணிசமாக மதிப்பிழந்தது. இப்போது உ.பி. நிகழ்வுகள், மிச்சமிருக்கும் மதிப்பையும் கரைத்து விடுவதாக அச்சுறுத்துகின்றன.

பி.ஜே.பி.யின் உயர்மட்டத் தலைவர்கள் விழிப்படைந்து, தாற்காலிக பதவி லாபங்களைக் கடந்த தொலை நோக்குப் பார்வையுடன் அரசியலை அணுகினால் நல்லது. மக்களின் நன்மதிப்பைத் திரும்பப் பெற அது ஒன்றே வழி.

## குஜராத்தில் குளறுபடி!

**பி.**ஜே.பியிலிருந்து பிரிந்து வந்து, ராஷ்டிரிய ஜனதா கட்சி தொடங்கி, குஜராத் முதல்வரான வகேலா, இன்று முன்னாள் முதல்வராகி விட்டார்! காரணம், காங்கிரஸின் திருவிளையாடல்தான்!

"தேவேகௌடாவை நீக்கினால்தான் ஆதரவு தொடரும்" என்று ஐக்கிய முன்னணியை மிரட்டிப்




பணிய வைத்தது போல், குஜராத் அரசையும் மிரட்டிப் பணியச் செய்திருக்கிறது காங்கிரஸ்.

வகேலா இடத்தில் திலிப் பாரிக் வந்திருக்கிறார். உ.பி.க்கு நேர் விரோதமாக, குட்டி அமைச்சரவை நிறுவியிருக்கிறார் பாரிக். பதினாறு அமைச்சர்கள் மட்டுமே! ஆட்சியில் பங்கேற்க காங்கிரஸ் முன்வரும்போது, மீதி பதவிகள் வினியோகமாகும்!

ஆர்.ஜே.பியை ஆதரிக்கும் காங்கிரஸ் உறுப்பினர்கள் பலர், தங்கள் கட்சியும் ஆட்சியில் பங்குவகிக்க வேண்டும் என்று கோரி வருகின்றனர். குஜராத் காங்கிரஸ் தலைவர் சபில்தாஸ் மேத்தா (முன்னாள் முதல்வர்) ஏகமாய் கெடுபிடி பண்ணுகிறார்.

"எத்தனை நாள்தான் இப்படி வெளியிலிருந்து நாங்கள் ஆதரிப்பது...? ஒன்று ஆர்.ஜே.பி. அமைச்சரவையில் நாங்கள் இடம்பெற வேண்டும் - அல்லது எங்கள் அமைச்சரவையில் ஆர்.ஜே.பி. இடம்பெற வேண்டும்..." என்கிறார்!

குஜராத் கூட்டணியும் கொள்கை அடிப்படையில் பிறந்ததல்ல. 'என் எதிரியின் எதிரி எனக்கு நண்பன்' என்கிற ஃபார்முலாதான் அதற்கு அடிப்படை!

உ.பி., குஜராத், மத்திய ஆட்சி என்று திரும்பிய பக்கமெல்லாம் அதிகார ஆசையையும் பணம் பண்ணும் நோக்கையும் மட்டுமே அடிப்படையாகக் கொண்டு ஆட்சி அமைக்கப்படும் கேவலத்தைப் பார்க்கும்போது, நாட்டின் எதிர்காலம் குறித்துக் கவலையும் வேதனையும் ஏற்படுகிறது.

'கட்சித் தாவல் தடைச் சட்டம் கடுமையாக்கப்பட வேண்டும்' என்று சபாநாயகர்கள் மாநாட்டில் கருத்து தெரிவிக்கப்பட்டுள்ளது.

சட்டம் கடுமையாக ஆக, அதை ஏய்க்கும் தீவிரமும் அதிகமாவதைத்தான் நாம் பார்த்து வருகிறோம்.

பதவி என்பது நாட்டுக்கு உழைக்கத் தரப்படும் வாய்ப்பு;

அதிகாரம் என்பது மக்களின் தேவைகளை நிறைவு செய்யத் தரப்படும் சந்தர்ப்பம்!

என்கிற உயர்நோக்குகள் இல்லாத சமுதாயத்தில், சட்டத்தால் மட்டும் எதையும் சாதிக்க முடியாது!


என்னய்யா அக்கிரமம் மினரல் வாட்டர் வாங்கினதுக்கும் பத்தாயிரம் ரூபாய் கிளெய்ம் போட்டி ருக்கே....
இந்த மாசம் அஞ்சுமுறை அமைச்சரவைக் கூட்டம் நடந்தது, சார், மறந்துட்டீங் களா!


கணக்கு சொல்லிக் குடுங்கப்பா... 93 அமைச்சர் களில் ஏழு பேர் நீக்கப்பட்டு பத்து பேர் சேர்க்கப்பட் டால் மொத்தம் எத்தனை அமைச்சர்கள்...


மூன்றாவது வரிசையில் ஐந்தா வதாக அமர்ந்திருக் கும் அமைச்சர் குறட்டை விடுவதை உடனடியாக நிறுத்தவேண்டும்!
கொர்.. கர்..
முதல்வர்




உ.பி. அமைச்சரவை:

# நடந்தாலும் நடக்கும்!

எந்த நம்பர்ல நிற்குதோ அந்த இலாகா உங்களுக்கு...

# சின்னப் படங்களில் பெரிய விஷயங்கள்!

கோடிக்கணக்கான ரூபாய்களைச் செலவழித்து, பிரம்மாண்டங்களைக் காட்டிப் படமெடுத்தால்தான் சிறப்பாக இருக்கும் என்பதெல்லாம் வெறும் ஏமாற்று வேலை என்பதை நிரூபித்திருக்கிறார்கள், நமது திரைப்படக் கல்லூரி மாணவர்கள். அமெரிக்காவில் நடக்கும் ஒரு போட்டி அறிவிப்பைப் பார்த்துப் படமெடுத்து அனுப்பி, தலா பத்தாயிரம் ரூபாய் பரிசும் வாங்கியிருக்கிறார்கள். பரிசுத் தொகை குறைவு என்றாலும் பெருமை அதிகம்!

'தேக்கம்' என்று ஒரு படம். அடையாற்றைப் பற்றியது. அந்தக் காலத்தில் இதன் நீர் குடிக்கக் கூட உபயோகப்பட்டிருக்கிறது. இன்று அது எப்படியெல்லாம் மாசுபட்டுக் கிடக்கிறது என்பதைக் காட்டுவதுதான் படம். மக்களின் விழிப்புணர்ச்சியால் இதை மறுபடியும் தூய்மைப் படுத்த முடியும் என்று தீர்வும் சொல்லியிருக்கிறார்கள்.

"நாங்கள் படப்பிடிப்புக்குச் சென்றபோது எதிர்பாராமல் சில காட்சிகள். அஸ்தியைக் கரைத்து விட்டு, அடையாற்றின் நச்சு நீரையே (சடங்கு கருதி) தலையில் தெளித்துக் கொள்கிற காட்சி. இன்னும் சில இடங்களின் கரையோரத்தில், பன்றிகளை அறுத்துக் கொண்டிருக்கிற காட்சிகள்... இப்படி நிஜத்தில் நடந்த பல காட்சிகளையும் நாங்கள் படமாக்கினோம். மூன்று மணி நேரத்துக்குப் படமாக்கிய விஷயங்களை எடிட் செய்து, பதினைந்து நிமிட டாகுமென்ட்ரியாக்கினோம்!" என்றார் இதைத் தயாரித்த வி. மகேந்திர பாண்டியன்.

"என்ன செலவு பிடித்தது?"

"கிட்டத்தட்ட பதின்மூன்றாயிரம். எடிட் செய்வதற்கு அமிர்தம் அவர்கள் உதவினார். அதனால் ஆறாயிரம் ரூபாய் மிச்சம். டைட்டில்ஸுக்கு முக்தா சீனிவாசன் அவர்கள் உதவியதால் அதிலும் மிச்சம்! நண்பர்களான பாஸ்கர் டைரக்டராகவும் சதீஷ்குமார் கேமராமேனாகவும் பணியாற்றியதில் இன்னும் செலவு மிச்சமானது!"

இப்படிப் பல விஷயங்களில் மிச்சம் பிடித்திருந்தாலும் பணத்துக்கு ரொம்பவே கஷ்டப்பட்டிருக்கிறார்.

"அப்பா நான்காயிரம் ரூபாய் கொடுத்தார். மீதிக்கு எனது பஜாஜ் எம் 80-யை அடகு வைத்துத்தான் சமாளித்தேன்!" என்றார் மகேந்திர பாண்டியன்.

'கனவு நனவாகும்போது...' - இது இன்னொரு படம். அதிகக் குழந்தைகள் பெறுவதால் குடும்பங்கள் படும் கஷ்டங்களைச் சொல்கிற படம்.

ஏழை மக்கள் என்ன செய்கிறார்கள்? முதல் குழந்தை பிறந்ததும் ஏராளமான கனவுகளோடு அதைப் பள்ளிக்கு அனுப்புகிறார்கள். இரண்டாவது குழந்தை பிறந்தவுடன், பெற்றோர் வேலைக்குப் போய் விடுவதால் முதல் குழந்தைதான் இரண்டாவது குழந்தையைப் பார்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. அதனால் அதன் படிப்பு அவுட்!

மூன்றாவது குழந்தை பிறக்கிறபோது என்ன நடக்கிறது? இரண்டாவது குழந்தை, மூன்றாவது குழந்தையைப் பார்த்துக் கொள்ள, முதல் குழந்தை



• ஊனை நினைவுறுத்தும், படப்பிடிப்பில்



• அனந்தநாராயணன்



• மகேந்திர பாண்டியன்

வேலைக்குப் போக ஆரம்பிக்கிறது.... இப்படி அதிகக் குழந்தைகளால் ஏற்படும் அவலத்தைச் சொல்கிறது படம்.

படத்தில் இன்னொரு விசேஷ அம்சம் உரையாடலே இல்லாமல் நமக்கு விஷயத்தை உணர்த்துகிற அற்புதம்தான்!

"ஆனாலும் நாங்கள் உரையாடல்களே இல்லாமல்தான் படமெடுக்க வேண்டும் என்கிற எண்ணத்தில் இப்படி எடுக்கவில்லை. உரையாடல்களை வைத்தால் அதற்குச் சுமார் மூன்றாயிரம் ரூபாயாவது செலவாகுமே. பணத்துக்கு என்ன செய்வது என்கிற எண்ணத்தில் தான் இப்படிச் செய்தோம்!" என்கிறார் இதைத் தயாரித்த அனந்த நாராயணன்.

இந்த மாதிரியெல்லாம் பார்த்துப் பார்த்துச் செலவு செய்தும் பட்ஜெட் பதினாறாயிரத்தைத் தொட்டு விட்டதாம். "என் அப்பா ஆறாயிரம் ரூபாய் கொடுத்தார். நண்பர் மகேந்திர பாண்டியன் தமது டூ வீலரை அடகு வைத்ததில் எனக்கும் கொஞ்சம் பணம் கொடுத்து உதவினார். நண்பர்களும் கடனாக உதவினார்கள். ஒருவழியாகப் படம் முடிந்தது!

"ஆனாலும் கடைசியில் ஒரு சிக்கல். போட்டிக்காகக் கேசட்டை இன்றே அனுப்ப வேண்டும் என்கிற சூழ்நிலை. கூரியரில் அனுப்ப 1800 ரூபாய் தேவை. என்ன செய்வது? பலரிடம் கேட்டும் கிடைக்காமல், இறுதியில் தோழி அபர்ணாவிடம் கேட்டால் என்ன என்று தொலைபேசியில் விஷயத்தைச் சொன்னேன். அவர் தமது தாயிடம் கேட்க, அவர் பக்கத்து வீட்டில் கைமாற்று வாங்கிப் பணம் கொடுத்தார்!" என்று நெகிழ்ச்சியுடன் சொல்கிறார் அனந்த நாராயணன்.

— சு. வேணுகோபால்

# வாஜ்பாய் - கன்ஷிராம்: ஒத்துப் போகும் பார்வை!

'பகுஜன் சமாஜ் கட்சியுடன் இனி மேலும்கூட கூட்டணி வைத்துக் கொள்ள வாய்ப்புகள் இருக்கின்றன' - என்று சொல்லுகிற ஒரே பா.ஜ.க. தலைவர் வாஜ்பாயிதான்! லக்னோவில் அவர் இப்படிச் சொன்னபோது, பத்திரிகையாளர்கள் பிரமித்தே போனார்கள். மாயாவதி, கல்யாண்சிங்கையும் பாரதிய ஜனதாவையும் ஒரு பக்கம் தாக்கிக் கொண்டிருக்க, வாஜ்பாயின் கருத்தை ஆமோதிப்பது மாதிரி பேசியிருக்கிறார், பகுஜன் சமாஜ் கட்சித் தலைவர் கன்ஷிராம். 'கூட்டணி அரசு ஆட்சிதான் இனி இந்தியாவில் என்ற சூழ்நிலை எப்போது வந்து விட்டதோ, அப்போது எந்தக் கட்சியுடன் வேண்டுமானாலும் சேர்ந்து ஆட்சி அமைக்கத்தான் வேண்டும்' என்று அடித்துச் சொல்லி விட்டார் அடல்ஜி.





• உத்தரப் பிரதேச அரசியல் நெருக்கடியை ஐ.மு. அரசு விவாதித்துக் கொண்டிருந்தபோது, நள்ளிரவு என்றும் பாராமல், செய்தி-ஒலிபரப்புத் துறை அமைச்சர் ஜெய்பால் ரெட்டி, தூர்தர்ஷன் டைரக்டர் ஜெனரல் சர்மாவைத் தொலைபேசியில் கூப்பிட்டு, உ.பி. சட்டசபை அடிதடிக் காட்சிகளின் தொகுப்பை உடனடியாக அனுப்பி வைக்கச் சொன்னார். சர்மா மறுத்து விட்டார். 'இரண்டு-மூன்று நிமிட தொலைக்காட்சித் தொகுப்புத்தான் லக்னோவிலிருந்து வந்தது. நாளைக் காலைதான் முழுத் தொகுப்பும் வரும். வந்த பிறகு வேண்டுமானால் அனுப்பி வைக்கிறேன்' என்று சொல்லி விட்டாராம். சுயாட்சி அதிகாரம் பற்றியும், அமைச்சர் தலையிட்டு இருக்காது என்றும் வாய் கிழியப் பேசிய ஜெய்பால் ரெட்டியா இப்படி நடந்து கொள்ளுகிறார் என்று தூர்தர்ஷன் வட்டாரத்தில் வியப்பு!

• உ.பி. விவகாரத்தில் இடதுசாரிக் கட்சிகளிடையே சரியான குழப்பம். சி.பி.எம், சி.பி.ஐ இரண்டும் கிட்டத்தட்ட முரணான அபிப்ராயம் கொண்டிருக்கின்றன. மாயாவதி பகுஜன் சமாஜ் கட்சியின் ஆதரவை விலக்கிக் கொண்ட உடனேயே, ஜனாதிபதி ஆட்சியை அங்கே அமல் செய்திருக்க வேண்டும் என்பது ஹர்கிஷன் சுர்ஜீத்தின் வாதம். இந்திய கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் ராஜா அதற்கு மாறான கருத்துக் கொண்டிருக்கிறார். உள்துறை அமைச்சர் இந்திரஜித் குப்தாவுக்கும் உடனடியாக ஜனாதிபதி ஆட்சி கொண்டு வருவதில் துளியும் விருப்பம் இருக்கவில்லை. ஐ.மு.கூட்டத்திலேயே இதை வெளிப்படையாகச் சொல்லி விட்டார். இதற்குப் பிறகுதான் முலாயம் சிங் யாதவ் வெளிநடப்புச் செய்தார்!

• மாருதி நிறுவனத் தலைவர் பிரச்னையில் ஒரு சுமுகமான முடிவு கிடைக்கிற வரையில், புதிய தொழில் நுட்பம் எதையும் அறிமுகப் படுத்தப் போவதில்லை என்று அதன் ஜப்பானிய நிர்வாகிகள் தெரிவித்து விட்டனர். திங்கள்கிழமை நடந்த போர்டு மீட்டிங்கில், தமது சார்பாக கே. சங்காவை பார்கவாவின் இடத்துக்கு நியமிக்க விரும்புவதாக அறிவித்தது. அரசு தரப்பிலிருந்து அறிக்கை எதுவும் இதுவரை வெளி வரவில்லை.

— நியூஸ்வாலா

**1** **சுஜாதா**

# நேர்மை

**சா**லையில் நூறு ரூபாய் நோட்டு கீழே கிடந்தது. விசுவநாதன் அதை தயக்கத்துடன் எடுத்தான். புது நோட்டு. முன்பக்கம் காந்தியும் பின்பக்கம் மலைப்பிரதேசமும் பதினைந்து பாஷையுமாக... எடுத்ததை யாரும் கவனித்தார்களா? சுற்றிலும் பார்த்தான். நடமாடும் இஸ்திரி வண்டியில் ஒருவர் துணி தேய்த்துக் கொண்டிருந்தார். மத்யான வேளை. மைலாப்பூர் சவிவன் காரடன் அருகில் பிரியும் சந்தில் ஒரு சோம்பேறிப் பிற்பகல். இரவில் நிறுத்தியிருக்கும் டாக்சிகள் எல்லாம் சவாரி போயிருந்தன.

விசுவநாதனுக்கு நேர்மை பெரிது. ஐநூறு ரூபாய் நோட்டாக இருந்தாலும் யோசித்திருக்க மாட்டான். அவனுக்கு, பிறர் சொத்துக்கு ஆசைப்படக் கூடாது போன்ற வழக்கொழிந்த கொள்கைகள் உண்டு. படிப்பு, வளர்ந்த விதம் அப்படி (ராமகிருஷ்ணரின் உபதேசங்கள், விதுர நீதி) இருந்தும் திருப்பிக் கொடுக்கும்போது உரியவருக்கு அது போய்ச் சேர வேண்டும் என்று நினைத்தான்.

"இஸ்திரிக்காரரே நீங்க ஏதாவது காணாம போக்கிட்டிங்களா?"

"இல்லீங்களே."

"பணம் ஏதாவது..."

பெருங்காய டப்பாவைத் திறந்து பார்த்து அதைக் கவிழ்த்து, "துட்டு இருந்தாத்தானே காணாம போக்க. இனிமேத்தான் தேச்ச துணிங்களை சம்சாரம் கொண்டு கொடுப்பா. அப்புற மேலத்தான் பைசாவே கண்ல காண முடியும்."

"அப்ப இந்த நூறு ரூபா உங்களது இல்லை. கீழ கிடந்திச்சு."

இஸ்திரிக்காரர், "இருங்க. பெஞ்சாதியை கேட்டுர்றேன். ஏ புள்ளை, சம்பளப் பணம் வாங்குனையா, ஏதாச்சும் நோட்டு தாரை வாத்துட்டியா?"

அவள் "எத்தனி" என்றாள். சிரித்த குழந்தையை அலம்பிக் கொண்டிருந்தாள்.

"நூறு ரூபாயாம்."

"இல்லைய்யா. ஐயர்வூட்டம்மா சம்பளம் இன்னும் தரல்ல. எங்கைல பணம் ஏது? இருவது ரூபா நோட்டை கரி வாங்கியாரக் கொடுத்துட்டனே."

"சாமி, அது எங்களது இல்லிங்க" என்றார் இஸ்திரிக்காரர்.

இந்த நாடகத்தை எதிர்வீட்டிலிருந்து ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தார், சட்டென்று உள்ளே சென்று சட்டை மாட்டிக் கொண்டு வெளியே வந்தார். சாலையில் கவனமாகத் தேடுவது போல பாவனை செய்தார், காலால் தேய்த்துத் தேய்த்து.

"என்ன தேடறீங்க? கிடைச்சுருச்சு."

"மருந்து வாங்கிண்டு வரப்ப ஆட்டோ ரிக்ஷாக்காரனுக்குப் பணம் கொடுத்தபோது நோட்டு விழுந்துடுத்துன்னு நினைக்கிறேன். ஒரு ஹண்ட்ரட்தானே?..."

"இதோ பாருங்க?" என்று ரூபாயைக் கொடுத்தான் விசுவநாதன்.

"ஓ தாங்க்ஸ் சார். நல்லவேளை இங்க விழுந்து உங்க கண்ல பட்டது. உள்ள வாங்க காப்பி சாப்பிடலாம்."

"இல்லை சார். நான் டாக்டரை பார்க்க போயிட்டிருக்கேன். பணத்தை பாதைல பார்த்தேன். உரியவர்கிட்ட ஒப்படைக்கலைன்னா தூக்கம் வராது."

"எனக்கும் அப்படித்தான். நல்ல பழக்கம் சார். அப்ப காப்பி வாண்டாங்கறிங்க, ஒரு மோராவது..."

"இன்னொரு சமயம் வரேன். நைஸ் மீட்டிங்யு."

அவர்கள் சென்றதும் இஸ்திரிகாரரின் மனைவி, "பாத்தியாய்யா சுலபமா தன்னுதுன்னு சொல்லிட்டு நோட்டை வாங்கிட்டாருய்யா. நீயும் சொல்லிருக்கலாமில்லை?"



"தோணலை அஞ்சலை."

"அதான் நீ ஆயுசு பூரா இஸ்திரி தேச்சுக்கினு இருக்கிற. அந்தாளு சந்துபூரா டாக்சி நிறுத்திருக்காரு..." என்று சிரித்தாள்.

குழந்தை தன் சிறிய இடதுகையால் அவன் மூக்கைப் பற்றியது "எதுக்கு மத்தவங்காசு... இது போதுமே நமக்கு?" என்று அதை இடம் வலமாகக் குலுக்க, அது தொடர்ந்து சிரித்தது.

'1998 ஜனவரி முதல் தேதியிலிருந்து, பணம் பெற்றுக் கொண்டு இரத்த தானம் செய்யும் நபர்களிடமிருந்து இரத்தம் பெறக்கூடாது!' என்று இரத்த வங்கிகளுக்கு உச்ச நீதி மன்றம், சமீபத்தில் ஓர் உத்தரவு பிறப்பித்திருக்கிறது.

தாமாக முன் வந்து இரத்த தானம் செய்யும் நபர்கள் மூலம் கிடைக்கும் இரத்தத்தை மட்டுமே இரத்த வங்கிகள் ஜனவரி 98 முதல் பெற்றுக் கொள்ளலாம் என்னும் நிலை தோன்றுகிற போது, சேமிப்பு வங்கிகளில் போதுமான அளவு இரத்தம் கிடைக்காமல் போகும். பணம் பெற்றுக் கொண்டு இரத்தம் வழங்குவோர், பணம் பெறாமல் தானமாக இரத்தம் வழங்குவோர் என்று இரு சாராரிடமிருந்தும் கிடைக்கும் இரத்தமே இப்போது பற்றாக்குறையாக இருக்கையில், உச்சநீதி மன்ற ஆணை, பல நோயாளிகளுக்கு பாதகமாக அல்லவா அமைந்து விடும்?

இது பிரச்னையின் ஒரு பக்கம்தான்.

இன்னொரு பக்கம், இரத்த வங்கிகள் தமக்குக் கிடைக்கும் இரத்தத்தை, பரிசோதனை செய்து, பாதுகாப்பானதுதானா என்று கண்டறியும் முறை சரியில்லை என்பது. தனியார் நடத்தும் இரத்த வங்கிகளிலிருந்து பெறப்படும் இரத்தம், எய்ட்ஸ், ஹெபடைடிஸ், மலேரியா முதலிய வைரஸ் கிருமிகளின் பாதிப்பு இல்லாமல் இருக்கிறதா என்பதைத் திட்டவட்டமாக அறிய முடிவதில்லை. மருந்துகள் கட்டுப்பாட்டு இயக்குநர், மேற்படி நோய்களுக்கான கிருமிகள் தாக்கிய இரத்த வங்கிகள் இரத்தத்தைப் பெறக் கூடாது என்று சட்டம் போட்டிருந்தாலும், சில தனியார் இரத்த வங்கிகள் இவற்றைச் சட்டை செய்வதில்லை. அதனால் தான் மருத்துவ மனைகளில் சிகிச்சை பெறும் நோயாளிகளுக்கு இரத்தம் தேவைப்படும்போது, இம்மாதிரியான தனியார் இரத்த வங்கிகளில் இருந்து கிடைக்கும் இரத்தம் செலுத்தப்படும் போது, பெறப்பட்ட இரத்தத்தில் இருக்கிற கிருமி, நோயாளியின் உடலில் சென்று விடுகிறது.

இந்த இரத்தத்தில் ஹெச்.ஐ.வி. 1 மற்றும் 2 வைரஸ், (அதாவது எய்ட்ஸ் நோய் உண்டாக்கும் கிருமிகள்), ஹெபடைடிஸ் பி, ஹெபடைடிஸ் சி, மலேரியா, ஃபைலேரியா (யானைக் கால் நோய்), பால்வினை நோய்க் கிருமிகள் என்று எது வேண்டுமானாலும் இருக்கலாம்!

மருந்துகள் கட்டுப்பாட்டு இயக்குநர் குறிப்பிட்டுள்ள இந்தப் பட்டியல் கூடச் சிறியது தான். இதைக் கூட தனியார் இரத்த வங்கிகள் பரிசோதிப்பதில்லை என்கிறார்கள்.

குறிப்பாக, எய்ட்ஸ் நோய்க் கிருமிகளைக் கண்டறியச் செய்யப்படும் ஹெச்.ஐ.வி டெஸ்ட்டுகளின் போது, ஒரு குறிப்பிட்ட காலக் கெடுவுக்கு, தானம் பெறப்பட்ட நபரின் இரத்தத்தை பரிசோதனைக்காக வைத்திருக்க வேண்டும். இந்தக் காலக்கெடுவை 'விண்டோ பீரியட்' என்கிறார்கள். இதைச் செய்த பிறகே அந்த நபரின் இரத்தத்தை இன்னொருவருக்குச் செலுத்த முடியும். இப்படி எல்லா இரத்த வங்கிகளிலும் செய்கிறார்களா?

# இரத்ததானம் ஓர் எச்சரிக்கை!

அப்போலோ மருத்துவ மனையில் இரத்த வங்கியை நிர்வகிக்கும் அதிகாரி டாக்டர் கோபாலகிருஷ்ணனைச் சந்தித்துக் கேட்டோம்.

"ஒரு நபரின் உடலில் எய்ட்ஸ் நோய்க்கான வைரஸ் கிருமிகள் புகுந்த உடனே, அந்த நோய்க்கான அறிகுறிகளை, அவரிடமிருந்து எடுக்கப்படும் இரத்தத்திலிருந்து கண்டறிய முடியாது. அந்தக் கிருமிகள் உடலில் பரவி, அந்த நோயின் பாதிப்பை வெளிப்படுத்தச் சில வாரங்கள் ஆகும். இதைத் தான் விண்டோ பீரியட் என்கிறார்கள்.

"ஆனால் நாங்கள் இங்கே 'அப்போலோ'வில் அதற்கான ஆன்ட்டிஜென் பரிசோதனை ஒன்று செய்கிறோம். இதன் மூலம், குறிப்பிட்ட வைரஸ் உட்புகுந்த ஒரு வாரத்துக்குள்ளாகவே, அந்த நபருக்கு ஹெச்.ஐ.வி. கிருமி பாதிப்பு ஏற்பட்டிருக்கிறதா என்று தெரிந்து கொண்டு விடலாம். இந்த டெஸ்ட் மூலம், நாலைந்து வார விண்டோ பீரியடை, ஒரு வாரத்துக்கு குறைத்து விடலாம்'' என்றார் டாக்டர் கோபாலகிருஷ்ணன்.

"உச்ச நீதி மன்ற உத்தரவின் மூலம் உங்களுக்குப் பாதிப்பு ஏற்படாதா?"

"ஏற்படாது. ஏனென்றால் நாங்கள் பணம் கொடுத்து இரத்தம் பெற்றுச் சேமித்து வைப்பதில்லை. நோயாளியின் உறவினர் அல்லது



நண்பர்கள் ஏற்பாடு செய்து, இங்கே தாமாக இரத்த தானம் செய்வதால், உச்சநீதி மன்ற ஆணை காரணமாகப் பிரச்னை எதுவும் எழாது!"

சரி, தாமாக முன் வந்து இரத்த தானம் செய்பவர்கள் மூலமாகவே, மருத்துவ மனைகளுக்குத் தேவைப்படும் இரத்தம் மொத்தமும் கிடைத்து விடுவதாக வைத்துக் கொள்ளுவோம். அப்போதும், கிடைக்கிற அத்தனை இரத்தமும் பாதுகாப்பான, நோய்க்கிருமிகள் இல்லாத, இரத்தம்தான் என்று உறுதியாகச் சொல்ல முடியாது. தனியார் இரத்த வங்கிகள், மருந்துக் கட்டுப்பாட்டு இயக்குநர் குறிப்பிடும் அத்தனை பரிசோதனைகளையும், சமரசம் ஏதும் செய்து கொள்ளாமல், கட்டாயமாகச் செய்தே ஆக வேண்டும். அப்போதுதான் இரத்தம் பெற்றுக் கொள்ளும் நோயாளி எந்தப் புது நோயிலும் சிக்கிக் கொள்ளாமல் இருக்க முடியும். ஆன்ட்டிஜென் பரிசோதனையைக் கட்டாயமாக எல்லா இரத்த வங்கிகளும் செய்தாக வேண்டும் என்று, சட்டரீதியாக மருந்துகள் கட்டுப்பாட்டு இயக்குநர் அமல்படுத்தினால் இதற்குப் பலன் இருக்கலாம். ஆனால் "அதற்குத் தனியாகச் செலவு ஆகுமே? அதுவும் நோயாளியின் தலையில்தானே விழும்?" என்றார் டாக்டர் கே.எம். ராதாகிருஷ்ணன். இவர் இந்தியன் சொஸைடி ஃபார் ப்ளட் ட்ரான்ஸ்ஃப்யுஷன் அன்ட் இம்யுனோ-ஹெமடாலஜி தலைவர்.

"ஒரு யூனிட் பிளட்டை, இப்படி p24 ஆன்ட்டிஜென் டெஸ்ட் செய்து, நோயாளிக்குக் கொடுக்க வேண்டும் என்றால் நோயாளி அதற்காகக் கிட்டத்தட்ட இரண்டாயிரம் ரூபாய் செலவழிக்க வேண்டியிருக்கும். அதாவது, சுமார் ஆயிரம் ரூபாய் p24 ஆன்ட்டிஜென் பரிசோதனைக்கே ஆகிவிடும். நோயாளிக்குப் பாதுகாப்பான இரத்தம் கிடைக்கிறது என்பது அனுகூலம்தான். ஆனால் சிகிச்சை செலவு கூடுகிறதல்லவா?" என்றார் டாக்டர் ராதாகிருஷ்ணன்.

"இரத்த வங்கிகளில் இரத்தம் கொடுக்கும் நபருக்கு, எந்தெந்த டெஸ்ட்டுகள் எடுக்கப் போகிறோம் என்று சொல்லுகிறார்கள். ஆனால் அந்த டெஸ்ட்டுகளின் முடிவைச் சொல்லுவதில்லை. 'அது உங்களுக்குத் தெரிய வேண்டியதில்லை. எங்களுக்கு மட்டும் தெரிந்தால் போதும்' என்று ரகசியமாக வைத்திருக்கிறார்களே, ஏன்?"

"இரத்த வங்கிகளில் செய்யப்படுவது ஸ்க்ரீனிங்தான். இன்னின்ன கிருமிகள் இருக்கின்றன என்று உறுதிபடச் செய்யப்படும் டெஸ்ட் அல்ல. அதில் ஒரு நோய் அறிகுறி பாஸிடிவ் என்று காணப்படலாம். ஆனால் உண்மையில், அந்த இரத்தம் கொடுப்பவருக்கு அந்த நோய் இருக்காது. இதை false positive என்று சொல்லுவார்கள். அதனால் இரத்தம் கொடுப்பவரை அநாவசியமாகப் பயமுறுத்தி, அவர் மனத்தில் சந்தேக விதையை ஊன்றி, அவர் சித்திரவதைப்பட வேண்டுமா? ஒரு செய்தி கூடப் படித்திருப்பீர்கள்: டாக்டர் ஒருவர், அவருக்கு ஹெச்.ஐ.வி. வைரஸ் இருப்பதாகச் சொல்லப்பட்டதைக் கேட்டுவிட்டு, தற்கொலை செய்து கொண்டார். ஆனால் பிறகு அவருடைய டெஸ்ட் முடிவுகள் தெரிந்த போது, அவருக்கு ஹெச்.ஐ.வி. கிருமிகளின் பாதிப்பே இருக்கவில்லை. ஆனால் அதை அறியுமுன்பே அவர் அவசர முடிவை எடுத்து விட்டார்!" என்றார் டாக்டர் ராதாகிருஷ்ணன்.

ஆனால், இப்போது இரத்த வங்கிகளில் இருக்கிற பரிசோதனை முறைகளில் உள்ள குறைபாடு காரணமாக, தனக்கு ஹெச்.ஐ.வி. அல்லது வேறு ஏதாவது வைரஸ் இருக்கிறதை அறியாத அப்பாவி நபர், தொடர்ந்து இரத்த தானம் செய்து கொண்டே இருந்தால், அதற்குச் சமூகம் கொடுக்கும் விலை என்ன என்பதை நினைத்தால் பயமாக இருக்கிறது!

உச்சநீதி மன்றம் தன் ஆணையில், மத்திய அரசுக்கு ஓர் உத்தரவையும் கொடுத்திருக்கிறது. தேசிய இரத்தப் பரிமாற்று கவுன்சில் ஏற்படுத்தி, கட்டாயமான சட்டதிட்டங்களைக் கடுமையாக அமல்படுத்த வேண்டும்; எல்லா மாநிலங்களிலும் இரத்த வங்கி மற்றும் இரத்தப் பரிமாற்ற நிலையங்களை அமைத்து சட்டப்படி நடத்த வேண்டும் என்றும் உச்சநீதி மன்றம் குறிப்பிட்டிருக்கிறது. இது வரவேற்க வேண்டிய விஷயம்.

— சாருகேசி

2 சுஜாதா

# பெயர்

ஜகனுக்கு ஐந்து வருடங்களுக்கு முன் ஊரை விட்ட நினைவுகள், கொள்ளிடம் பாலத்தில் ஒலிக்கும் ரயில் வண்டி சப்தத்துடன் திரும்பின.

"சார், சீரங்கம் வந்திருச்சு. இறங்கணும்னிங்களே?" என்று எதிர் பார்த்த ஆசாமி எழுப்பினார். விருத்தாசலம் வரை தொணதொணத்தவர்.

"நீங்க ஆர்மியா? பொட்டியைப் பார்த்தாலே தெரியுது நம்ம ஆர்மியைபோல ஸ்ட்ராங்."

"இது டில்லி தர்யாகஞ்சில வாங்கினதுங்க." க்ராப் வெட்டு காட்டிக் கொடுத்து விடுகிறது.

"டில்லில வேலைங்களா?"

"இல்லைங்க பார்டர்ல போஸ்டிங் ஆயி கமிஷன் முடிஞ்சு திரும்பறேன்."

"சீரங்கத்தில எங்கங்க?"

"கிழக்கு அடையவளைஞ்தான்."

"வடபாதியா, தென்பாதியா?"

"தெற்கு."

"அங்க வீடு இருக்குதா?"

"ஆமாங்க."

"கல்யாணம் ஆயிருச்சா?"

"இல்லைங்க. அண்ணனுக்கு இப்பத்தான் கல்யாணம் ஆவுது. கல்யாணமே பண்ணாம இருந்தாரு."

"அப்ப உங்களுக்கு லைன் க்ளியர்னு சொல்லுங்க!"

"ஒருவிதத்தில் அப்படித்தான்!"

"வடக்கே பொண்ணு கிண்ணு பாத்து வெச்சிருக்கீங்களா, ஆர்மிக்காரராச்சே!" அவர் காலாட்டிக் கொண்டே சிரித்தபடி கேட்டார்.

"அதெல்லாம் இல்லீங்க. அதுக்கெல்லாம் அவகாசம் கெடைக்கலீங்க."

"எந்த கம்யுனிட்டி? சொல்லுங்க. தக்கபடி பர்ஸ்ட் க்ளாஸா பொண்ணு பாத்துத் தர்றேன்."

"தேவையில்லீங்க."

"அப்ப உன்னூர்லயே காதல் கீதல்னு ஏதாவது..."

"ஒருவகைல அப்படித்தாங்க" என்று சொல்லும்போது சந்தோசமாக இருந்தது.

"நினைச்சேன்!" அவர் கண்களில் ஏமாற்றம் தெரிந்தது.

"நல்லதுங்க. இப்பல்லாம் காதல் பண்ணி கல்யாணம் பண்றதுதான் உத்தமம்னு சொல்றாங்க. எங்க தலைமுறைக்கு அந்த வாய்ப்பு வரலை."

"அப்படி ஒண்ணும் புஸ்தகம், சினிமால வர்றாப்பல காதல் இல்லைங்க. பொண்ணை மூணுவாட்டி சந்திச்சிருக்கேன். திரும்பி வந்ததும் கட்டிக்கிறேன்னு சொன்னேன். போய்ப் பார்த்து பொண்ணு கேக்கணும். அவ்வளவ்தான்."

இறங்கும்போதுகூட சொன்னார். "பெஸ்ட் ஆப் லக். நல்லாருங்க!"

ஸ்டேஷன் வாசல் மாட்டு வண்டிகள் காணமாற் போயிருந்தன. அஞ்சு வருஷத்தில் ஆட்டோ ரிக்ஷாக்கள் நிறைந்து காத்திருக்க, முதுகில் பையைப் போட்டுக் கொண்டு ரெகுலேஷன் காலணிகள் சரளைக் கற்களில் ஒலித்தபோது பெருமையாக இருந்தது. 'பட்டாளத்துக்காரன் வந்துட்டான்!' என்று அப்பா பெருமைப்படுவார்.

விரைவாக நடந்தான். ஆந்தைகளின் கடைசிக் குரல். இருள் பிரியும் நேரம். ஸ்டேசனை ஒட்டிய குடிசை வாசல்களில் சாணி தெளித்து பளிச்சென்று கோலம் போட்டுக் கொண்டிருந்தார்கள். உயர்நிலைப் பள்ளியில் புதிய என்.சி.சி. பிரிவின் போர்டு தெரிந்தது. தனியார் பள்ளி ஒன்று புதுசு. மாணிக்கம் வீட்டை பெயிண்ட் அடித்திருந்தார்கள். லேக்கா உருண்டை பல்ப் கடை எஸ்டிடி, ஐஎஸ்டி பூத்தாக- 24 மணி நேர கடையாக மாறியிருந்தது. டாக்டர்கள் அதிகரித்திருந்தார்கள்.

"டாக்டர் அழகப்பன், ப்ளாஸ்டிக் சர்ஜன், பார்வை நேரம்..." சீரங்கத்துக்கு ப்ளாஸ்டிக் சர்ஜனா! சிங்கப்பெருமான் கோயிலருகே ரெயில்வே கேட் எப்போதும்போல் சதா மூடிக்கிடந்தது.

வீட்டுக்குப் போனவுடன் சைக்கிளை எடுத்துக்கொண்டு மேலவீதி போய் ரமணியைப் பார்த்துவிட்டு வர வேண்டும். அவள் கடிதங்கள் இவன் முன்னணியில் இருந்ததால் ஏபிஓவில் தடைபட்டுப் போய், அவர்கள் அட்ரஸ் தெரியாமல் அண்ணன் மூலம் அனுப்பிய கடிதங்கள் காலதாமதமானதாலோ, தயக்கத்தாலோ பதில் எழுதவில்லை என்று விளக்கம் தருவாள்.

ரமணியை கடைசியில் எப்போது பார்த்தான்?

"உம் பேரே ரமணிதானா?"

"வீட்டில அப்படி கூப்டுவாங்க. எனக்குப் பிடிக்கவே பிடிக்காது."

"நிஜப்பேர் என்ன? எஸ்.எஸ்.எல்.சி. புத்தகத்தில் என்ன பேரு?"

என்னவோ பேர் சொன்னாளே? இந்த முறை சரியாகக் கேட்டுக்'கொள்ள வேண்டும்.

"கல்யாணம் ஆனப்றம் முதல் காரியமா பழைய பேரை மீட்டுக்கணும்" என்றாள்.



"எப்ப வருவீங்க? சரியாச் சொல்லுங்க. எத்தனை நா காத்திருக்கணும்? அப்பா, அம்மா இப்பவே கல்யாணம்னு ஆரம்பிச்சா அதிகநாள் தள்ளிப் போட முடியாது."

"ஜாயின் ஆன கையோடு முதல் சந்தர்ப்பத்தில் லீவு எடுத்துக்கிட்டு வந்துருவேன் ரமணி."

அது நடக்கவில்லை. போஸ்டிங் முதலில் ல்தாக் போட்டார்கள். அப்புறம் கார்கில் டில்லி கண்டோன்மெண்ட்டில் போடுகிறேன் என்று சொல்லி, சட்டென்று அசாம் கலவரத்துக்குத் தாற்காலிகமாக அனுப்பி திப்ருகர், பொங்கேகாம், ஷில்லாங், டார்ஜிலிங் என்று எத்தனை ஊர்கள் பார்த்து விட்டான்! எத்தனை முகங்கள்! ஆனால் அத்தனை முகத்திலும் மறவாத ரமணி.

"ரெண்டுமே ஒரே சிலபின்தானே! என்ன பேர் சொன்னாள்? அனுபமா, அனுஷா, பத்மா? நிஜப் பேரை இப்போதாவது கேட்டு வைத்து உள்ளத்தில் பத்திரப்படுத்த வேண்டும். வீணை வாசிப்பாள். இவன் வந்ததும் வாசிப்பதை நிறுத்தி விடுவாள். கல்யாணம் ஆனபின் தொடர்ந்து வாசி என்று சுதந்தரம் தர வேண்டும்."

**வீ**ட்டின் முன் பந்தல் போட்டு நிறைய செருப்புகள் முன் வாசலை அடைத்திருந்தன. குழல் விளக்கு பொருத்தப்பட்ட வாசலில் வாழை மரம் கட்டிக் கொண்டிருந்தார்கள். பல் தேய்த்து வாய் கொப்பளித்துக் கொண்டிருந்தார் அப்பா.

"வாடா, நேத்தைக்குள்ளா வரதா..."

"வாரண்ட் டிலே ஆயிருச்சப்பா."

"உள்ள போய் காபி சாப்டு. முகூர்த்தத்துக்கு நேரமிருக்கு."

"அண்ணன் எப்படி இருக்காரு?"

"சம்மதிச்சானே! சம்மதிக்க வச்சதே பெரிசா போச்சு. சாமியாராய்டுவான்னுதான் நெனைச்சேன். இந்தப் பொண்ணை பார்த்ததும் மாறி விட்டான். நீ எப்ப பண்ணிக்கப் போறதா உத்தேசம்?"

"உடனேப்பா."

"ஊருக்கு எப்ப திரும்பற? எத்தினி நா லீவு?"

"பதினஞ்சு நாள்ப்பா."

"அதுக்குள்ள... பார்க்கலாம். பார்க்கலாம்."

உள்ளே அத்தை, சித்தி, அம்மா எல்லாரும் வரவேற்றார்கள். சரோஜா அத்தைகூட "அடுத்தது உனக்குத்தானே, இப்பவே முடிச்சுட்டு போயிரேன்!"

மையமாகச் சிரித்தான். "அப்படித்தான் உத்தேசம்!" அதை ரமணியின் அப்பாவல்லவா சொல்ல வேண்டும். எளிதாகக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தால் போதும். இந்த தடபுடல் எல்லாம் வேண்டாம். அண்டாவில் காப்பியெல்லாம் வேண்டாம்.

"நல்ல கலர் வந்துருச்சு பாரு காஷ்மீர் போய்."

"காஷ்மீர் இல்லை அத்தை லதாக்குலேன்னு ஒரு இடத்தில்..."

"என்ன வேலை?"

"எல்லையைக் காக்கறது."

"அப்டின்னா?"

"நான் பூரா சும்மா பனியையே பாத்துக்கிட்டு இருக்கணும்."

"இப்படி ஒரு வேலையா? குளிருக்கு எல்லாம் கொடுப்பாங்கல்ல..."

மகேசுவரி காப்பி கொண்டு வந்து கொடுத்தபோது, "அண்ணே, உன்னை ரமணி ரொம்ப விசாரிச்சாங்க."

ரமணியா! அவனுக்கு உள்ளம் துடித்தது.

"காலையலயே போய் ஒருக்கா பார்த்துட்டு வந்துரு" என்றாள் ரகசியமாக. "அப்றம் முகூர்த்த வேளை வந்துரும்.

எல்லாரும் பிசியாயிடுவீங்க."

இதைவிட என்ன பிசி!

அடி பெண்ணே, உனக்கும் இவ்வளவு விசயம் தெரியுமா? ஐந்து வருஷத்துக்கு முன் பாவாடை, சட்டை இளம் பெண்ணாக அவளை விட்டுச் சென்றது. இப்போது அம்மாவின் பிரதிபிம்பம். அம்மா இளமையில் இப்படித்தான் இருந்திருப்பாள். கண்களில் ஒரு பிரகாசத்துடன்.

"யு லுக் ப்யுடிஃபுல் மகேஸ். எனக்கு பஞ்சாபுகாரன்லாம் சிநேகிதங்க. உன்னைப் பாத்தா கொத்திட்டு போயிருவான்!"

"போங்கண்ணே" என்று ஓடினாள்.

"தெரிஞ்சவங்களைப் பார்த்துட்டு வந்துர்றேன். பத்து நிமிசத்தில வர்றேன் சித்தப்பா."

"பத்து நிமிசம் போதுமா?"

"முகூர்த்தம் எப்ப?" என்று இரண்டாவது காப்பி கொண்டு வந்த பெரியம்மாவைக் கேட்டான். சைக்கிளில் சீட்டைத் தட்டி ஏறிக் கொண்டான். பெடலை பின் வாங்கி மிதிக்கத் தயாரானான்.

"ஒம்பது - பத்தரை. பத்திரிகை வரலை?"

"அதுக்குள்ள நான் வந்துட்டனே, பொண்ணு பேர் என்ன?"

"சுகுணா."

சைக்கிளில் சென்று கொண்டிருந்தவன் ப்ரேக் போட்டு நின்றான். அவனுக்கு சட்டென்று ஒரு பய அலை உடலை ஊடுருவியது.

ரமணியின் நிஜப்பெயர் இப்போது ஞாபகம் வந்து விட்டது. சுகுணா.




## வங்கி மானேஜரின் வானளாவிய அதிகாரம்!

இரண்டு நாட்களுக்குத் தற்செயல் விடுப்புக் கேட்டார் பேங்க் கேஷியர். தரமுடியாதென்று மறுத்து விட்டார் மானேஜர். இருப்பினும் கேஷியர் அந்த நாட்களில் வேலைக்கு வரவில்லை. அதனால் அவருடைய இடத்தில் மற்றவர் அமர்ந்து டிராப்ட் கொடுப்பதற்காக வாடிக்கையாளர்களிடமிருந்து பணம் வாங்கினார். அதைப் பார்த்த மானேஜர் 'வாங்கிய பணத்தை வாடிக்கையாளர்களிடமே திருப்பிக் கொடுத்து விடுங்கள். இன்று யாருக்குமே டிராப்ட் கொடுக்க வேண்டாம்!' என்று கூறவே அப்படியே செய்யப்பட்டது. அன்று வங்கி வேலைகள் எதுவுமே நடக்கவில்லை. மறுநாளும் அப்படியே. இது நடந்தது திருவனந்தபுரத்திலுள்ள புத்தன் சந்தை என்னுமிடத்திலிருக்கும் ஸ்டேட் பேங்க் ஆப் திருவிதாங்கூரின் மாலை நேரக் கிளையில்! ஒரு வங்கியின் மானேஜர் தம்மிஷ்டத்துக்கு இப்படிச் செய்யலாமா? பொது மக்கள் கேட்கும் கேள்வி இதுதான்.

திருவனந்தபுரத்திலிருந்து:
எஸ்.எஸ்.மணி.

# தீபாவளிப் பரிசு

## ஸ்ரீராம் டிரஸ்ட் வழங்கும் மகத்தான முதலீட்டுத் திட்டம்!






ரூ. 10,000 முதலீடு செய்யுங்கள்
5 ஆண்டுகளில் ரூ. 20,000 (இரு மடங்கு)
பெற்றுக் கொள்ளுங்கள்

அத்துடன்

4 இலக்கியப் பொக்கிஷங்களையும்
அன்பளிப்பாகப் பெறுங்கள்

1. **'கல்கி'** வார இதழ் 5 ஆண்டுகளுக்கு (260 வாரங்களுக்கு) உங்கள் இல்லம் தேடி வரும்.
2. **'கல்கி' தீபாவளி மலர்** 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.
3. பொன்விழாக் காணும் **'அமுதசுரபி'** இலக்கிய மாத இதழ் 5 ஆண்டுகளுக்கு உங்கள் இல்லம் தேடி வரும்.
4. **'அமுதசுரபி' தீபாவளி மலர்** 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.

ரூ. 10,000 (ரூ பத்தாயிரம்) **'ஸ்ரீராம் டிரஸ்ட்'** பெயருக்கு செக்/டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி :

**'ஸ்ரீராம் டிரஸ்ட்', ஏ–7, இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு,**
**சென்னை – 600 102. தொலைபேசி எண் : 628 6869 628 7879**

---

1. முழுப்பெயர் : திரு/திருமதி/செல்வி ..........................................
   முகவரி : ..........................................
   ..........................................
   ..........................................
   ..........................................
2. கூட்டாக இடப்பட்டால் அவர்கள் பெயர் :
   முழுப்பெயர் : ..........................................
3. வாரிசுதாரர் : ..........................................
4. **'கல்கி' 'அமுதசுரபி'** இதழ்கள் அனுப்பப்பட வேண்டிய முகவரி : ..........................................
   ..........................................

CHEQUE / D.D. No. .................................DT ..........,.......................ON..........................

அன்புள்ள

இடம் ..........................................

தேதி .......................................... முதலீட்டாளர் கையொப்பம்

# 11:29

**தமிழில் : ரா.கி. ரங்கராஜன்**

**மூலம் : டேனியல் ஸ்டீல்**

'நீயும் பிராடும் விவாகரத்து செய்து கொள்ளப் போகிறீர்களா என்ன?' என்று அந்தச் சிநேகிதி கேட்டதும், பேஜுக்கு உடம்பெங்கும் ரத்தம் உறைந்து சில்லென்று ஆகி விட்டது.

"இல்லையே... ஏன்... ஏன் அப்படிக் கேட்கிறாய்?" என்று திணறினாள்.

"நான் சொல்வது ஒருவேளை தப்பாயிருந்தாலும் இருக்கலாம்..." என்று தயக்கத்துடன் பீடிகை போட்டுக் கொண்டு பேசினாள் அவள். "உன் கணவரை அடிக்கடி இந்தப் பகுதியில் ஒரு இளம் பெண்ணுடன் பார்க்கிறேன். முதலில் அவள் உன் பெண் ஆலிஸினின் சிநேகிதியாக இருக்கலாம் என்று நினைத்தேன். ஆனால் இவளுக்கு வயது இருபது இருபத்தைந்து இருக்கும். இங்கே என் வீட்டுக்குப் பக்கத்தில்தான் அவள் வீடு. உன் கணவர் அவளுடனேயே இருக்கிறார் என்று தோன்றுகிறது. இன்று காலை இரண்டு பேரும் ஜாகிங் போவதைப் பார்த்ததால் உன்னிடம் சொல்கிறேன்..."

பேஜுக்கு மூச்சு அடைத்தது. இத்தனை நாளும் இலைமறை காய்மறையாக இருந்த விஷயம் இப்போது நாலு பேர் கண்ணில் படுகிற அளவுக்குப் பகிரங்கமாகிவிட்டது! ஆலீஸின் தோழி என்று நினைத்தானாம்! அவ்வளவு இளம் வயதுப் பெண்ணுடன்... எல்லாரும் பார்க்கிற மாதிரி ஜாகிங்... கடவுளே!

"அந்தப் பெண் என் கணவருடன் வேலை பார்க்கிறவள். இரண்டு பேருமாகச் சேர்ந்து ஒரு பிராஜக்ட் செய்கிறார்கள். அவ்வளவுதான்..." என்று சமாளிப்பாகப் பதில் கூறினாள்.

ஆனால் அந்தப் பதிலை அவள் சிநேகிதி நம்ப மாட்டாள் என்று பேஜுக்குத் தெரியும். விவாகரத்து வரை விஷயம் வந்து விட்டது என்பதைத் தெரிந்து கொண்டுதான் அவள் ஆழம் பார்த்திருக்கிறாள்.

போனை வைத்து விட்டு ஆண்டியின் அறைக்குப் போன போது அவன் ஏதோ விளையாடிக் கொண்டிருந்தான். ஆனால் அவன் முகத்தைச் சோகம் கப்பியிருந்ததைக் கண்டு அவள் நெஞ்சம் பிளந்தது. கடந்த மூன்று வாரங்களில் வாழ்க்கை எத்தனை சின்னா பின்னமாகி விட்டது! எல்லாருமே நடுக் கடலில் மூழ்கிக் கொண்டிருப்பது போல இருக்கிறது!

அவனருகில் அமர்ந்து, "பாட்டி எப்படி இருக்கிறாள்?" என்று கேட்டாள்.

"பாட்டி, பெரியம்மா இரண்டு பேருக்குமே ஒன்றும் தெரியவில்லை அம்மா," என்றான் அவன். "நான்தான் டிபன் செய்து கொடுத்தேன். பெரியம்மா நகத்தையெல்லாம் ரொம்ப நீளமாக வளர்த்திட்டிருக்கிறாள். பாட்டிலைத் திறக்கக்கூட முடியலே. நான்தான் திறந்து கொடுத்தேன். பாட்டிக்குக் கைக் கடியாரத்துக்குச் சாவி கொடுக்கத் தெரியலே. மூக்குக் கண்ணாடியை எங்கே வைச்சோம்னு தெரியலியாம். கண்ணே தெரியலை," என்று சொல்லிக் கொண்டே போன ஆண்டி, "அப்பா எங்கேம்மா?" என்று திடீரெனக் கேட்டான்.

"ஆபீசிலே பிஸியாய் இருக்கிறார்," என்று வழக்கம் போல் பொய் சொன்னாள் பேஜ்.

"இன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை அம்மா இன்னைக்குக் கூடவா ஆபீஸ்?"

ஆண்டி ஒரு முட்டாளல்ல, சொல்வதையெல்லாம் நம்பி விட. இருந்தாலும் அவனிடம் உண்மையைச் சொல்ல அவள் விரும்பவில்லை. 'உன் அப்பா எப்படியோ போகட்டும். உன்னையும் ஆலிஸையும் நான் கைவிட மாட்டேன்' என்று சொல்ல வேண்டும் போலிருந்தது. கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டாள்.

"அப்பா ராத்திரி சாப்பாட்டுக்கு வருவாராம்மா?"

"தெரியவில்லை," என்று கூறி, மேலே பேசா வண்ணம் அவனை மடியில் எடுத்துச்

சிறிது நேரம் வைத்துக் கொண்டாள். பின்னர் சமையலறைக்குச் சென்று வேலைகளைக் கவனித்தாள்.

அவளை ஆச்சரியப்படுத்தும் வண்ணம் பிராட் இரவுச் சாப்பாட்டுக்கு வந்தான். பேஜின் அம்மாவிடமும் அக்காவிடமும் மரியாதையாகப் பேசினான். தானும் சில சிற்றுண்டி வகைகளைத் தோட்டத்தில் செய்வதாகக் கூறி வாசல்புறம் சென்றான். ஆண்டியும் பின்னாலேயே போனான் அப்பாவுக்கு உதவி செய்ய.

தோட்டத்தில் சில நிமிடம் தனியாக இருந்த சமயம் பேஜ் பிராடைப் பிடித்துக் கொண்டாள். "இன்று காலை ஜாகிங் போனீர்கள் போலிருக்கிறது?" என்றாள்.

ஒரு நிமிடம் அவளை முறைத்துப் பார்த்தவன், "யார் சொன்னார்கள்?" என்றான் அவன்.

"யார் சொல்லியிருந்தாலென்ன?"

அவனுக்குக் கோபம் மேலிட்டது. "உனக்குச் சம்பந்தமில்லாத விஷயம்!"

"ஏன் சம்பந்தமில்லாமல்? எனக்குச் சம்பந்தம் உண்டு. ஆலிக்குச் சம்பந்தம் உண்டு. ஆண்டிக்குச் சம்பந்தம் உண்டு. எங்கள் வாழ்க்கையை நாசம் பண்ணுகிறீர்கள் நீங்கள்.



ஆண்டிக்கு ஒன்றுமே தெரியாதென்று நினைத்திருக்கிறீர்கள். அவனுக்கு எல்லாம் தெரியும். அவன் முகத்தைக் கொஞ்சம் பாருங்கள். உங்களுக்கும் புரியும்.''

''ஓகோ! நீயே அவனுக்குச் சொல்லிக் கொடுத்திருப்பாய்! சீ!'' என்று சிறியவன் ஒரு தட்டை விட்டெறிந்து விட்டு வீட்டுக்குள் திரும்பிச் சென்றான்.

அடுப்பில் கொதித்துக் கொண்டிருந்த பாத்திரத்தை இறக்கப் போய்க் கையைச் சுட்டுக் கொண்டு 'ஸ்!' என்று பேஜ் அலற, அப்பாவின் பின்னாலேயே அழுது கொண்டு ஓடினான் ஆண்டி.

அம்மா கையைச் சுட்டுக் கொண்டதும், அப்பா கத்தியதும் அவனால் தாள முடியாததாக இருந்தது. நடுநடுவே தன் பெயரை அவர்கள் சொல்வதும் அவன் காதில் விழுந்திருந்தது. எல்லாச் சண்டையும் தன்னால்தான் என்று எண்ணி அந்தக் குழந்தையுள்ளம் வேதனை கொண்டது.

ஒருவழியாய்ச் சமையல் முடிந்து, எல்லாரும் சாப்பிட உட்கார்ந்தார்கள். பிராடும் பேஜும் ஆண்டியும் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. ஆண்டியின் அம்மா மட்டும் 'சமையல் ரொம்பப் பிரமாதம்' என்று மருமகளைப் பாராட்டிச் சளசளவென்று பேசிக் கொண்டிருந்தாள்.

பேஜின் இரண்டு விரல்களில் கொப்புளம் ஏற்பட்டிருந்தது. ஐஸ் கட்டியை வைத்துக் கட்டுப் போட்டிருந்தாள். ''ரொம்ப வலிக்கிறதா அம்மா?'' என்று ஆண்டி கேட்டதற்கு, ''சே,சே. ஒன்றுமேயில்லை,'' என்றாள் பேஜ்.

பிராட் அவளை எதுவும் கேட்கவில்லை. ஆண்டியிடம் தன்னைப் பற்றிப் பேஜ் சொல்லி விட்டாள் என்று அவன் உறுதியாக நம்பினான். அதை எண்ணிக் குமுறிக் கொண்டிருந்தவன், எல்லாரும் போன பிறகு, சமையலறையில் தட்டுக்களைக் கழுவிக் கொண்டிருந்தபோது மறுபடி சீறினான்.

ஆண்டி கதவுக்கு வெளியே நின்றிருந்ததை அவர்கள் பார்க்கவில்லை.

''நீதான் ஆண்டியிடம் என்னைப் பற்றிச் சொல்லியிருக்கிறாய்! உண்டா இல்லையா?'' என்றான் பிராட்.

''நான் சொல்லவில்லை. சொல்லவும் மாட்டேன்,'' என்றாள் பேஜ். ''ஆனால் உங்கள் நடவடிக்கையே அவனுக்கு எல்லாவற்றையும் சொல்லி விட்டது. நீங்கள் வீட்டில் தங்குவதே கிடையாது. அப்புறம் அவன் வேறு என்ன நினைப்பான்? ஏன், எனக்கு இன்றைக்கு ஒருத்தர் சொன்ன மாதிரி நாளைக்கு அவனிடமும் ஒருத்தர் சொன்னால் என்ன பண்ணுவீர்கள்?''

''அந்த ராஸ்கலுக்கு இதிலே ஒரு சம்பந்தமும் கிடையாது!'' - கையிலிருந்த தட்டைக் குழாயடியில் எறிந்துவிட்டு பிராட் கோபமாகச் சமையலறையை விட்டு வெளியேறினான்.

பீறிட்டு வந்த அழுகையை அடக்கிக் கொண்டு கண்ணைத் துடைத்துக் கொண்டாள். தோட்டத்தில் இறைந்து கிடந்த பாத்திரங்களை பிராட் ஒழுங்குபடுத்துவது தெரிந்தது.

''நிஜமாகவே இன்று சாப்பாடு ரொம்ப அருமை, டியர்!'' என்று சொல்லிக் கொண்டு உள்ளே வந்தாள் அவன் அம்மா.

''நீ கொஞ்சம் கம்மென்றிரு. இங்கே வீட்டில் நிலைமை சரியில்லை. நீ ஒரு பக்கம்!'' என்றாள் பேஜ், கடுமையாக.

அம்மா அலட்சியமாக, ''எல்லா வீட்டிலும் இருப்பதுதான். கொஞ்ச நாளில் சரியாகி விடும்,'' என்றாள்.

''இது சரியாகாது,'' என்றாள் பேஜ் உறுதியுடன். இனிமேலும் ஒளித்து மறைப்பானேன்? சொல்லிவிட வேண்டியதுதான் என்று தீர்மானித்தவளாக, ''அவருக்கு எவளோ ஒரு பெண்ணின் தொடர்பு ஏற்பட்டு விட்டது. வீடு இரண்டாகிக் கொண்டிருக்கிறது,'' என்றாள்.

அப்போதும் அவன் அம்மா அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. ''பிராட் அப்படியெல்லாம் போகக்கூடியவரில்லை. ஆலிஸனின் பிரச்னையினால் உனக்கு என்னென்னவோ தோன்றுகிறது...''

ஆலிஸனின் பிரச்னை! குழந்தை அங்கே நினைவு நீச்சின்றி, எந்த நிமிடத்திலும் இறக்கப்



**''அரசியல்வாதியோட வீட்டுக்கு வாடகைக்கு குடிபோனது தப்பா போச்சு.''**

**''எதனால அப்படிச் சொல்றீங்க?''**

**''ஒரேயடியா வாடகையை ஆயிரத்திலிருந்து ஆயிரத்து ஐநூறு ரூபாயா உயர்த்திட்டு 'இனி வீட்டு வரி எவ்வளவு அதிகமானாலும் சரி, 2001ம் வருஷம் வரைக்கும் வாடகையை மறுபடியும் உயர்த்த மாட்டேன்'கிறார்.''**

**- இரா. சம்பத்குமார்**

போகிற மாதிரி கோமாவில் கிடக்கிறான். அதைச் சாதாரணமாகப் பிரச்னை என்கிறாள் இவள்!

பேஜ் பல்லைக் கடித்துக் கொண்டிருந்த போது அம்மா தொடர்ந்து, "எனக்கும் உன் அப்பாவுக்கும் கூடப் பல சமயங்களில் சின்னப் பிரச்னைகள் வந்ததுண்டு. அதனால் பெரிதாய் ஒன்றும் நேர்ந்துவிடவில்லையே..." என்றாள்.

பொங்கி எழுந்தாள் பேஜ். "அம்மா! என்ன பேசுகிறோம் என்பது தெரிந்து கொண்டு தான் நீ பேசுகிறாயா?" பால்யத்தில் பட்ட நரகத்தைப் பற்றிப் பேச வேண்டாமென்றுதான் இத்தனை நாளும் மௌனம் காத்து வந்தாள் அவள். ஆனால் எதுவுமே நடக்காத மாதிரி அம்மா பாசாங்கு செய்வதை அவளால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

'நீ என்னென்னவோ பேசுகிறாய்...' என்று சொன்னவாறு அவள் அம்மா வெளியே போக முயன்றாள்.

"போகாதே, நில்!" என்றாள் பேஜ். கோபத்தினால் கண்களில் நீர் முட்டிக் கொண்டு வந்தது. "சின்னப் பிரச்னை என்றா சொன்னாய்? உன் குடிகார புருஷன் என்னை என்னவெல்லாம் கொடுமை செய்தானென்று மறந்து விட்டதா? அதற்கு நீயும் உடந்தையாக இருந்தது மறந்து விட்டதா? என்னை உள்ளே தள்ளிக் கதவைப் பூட்டிக் கொண்டு போனதெல்லாம் மறந்து விட்டதா? எனக்கு அப்போது என்ன வயது? பதின்மூன்று! ஆமாம், பதின் மூன்று!"

சப்தத்தைக் கேட்டு பிராட் உள்ளே வந்தான். நிலைமை ஓரளவு புரிந்தது. "சரி, சரி. இதெல்லாம் இன்னொரு சமயம் பேசிக் கொள்ளலாம்..." என்று சமாதானம் கூற முயன்றான்.

"மூடுங்கள் வாயை! நீங்களும் எவளோ ஒரு கேடு கெட்டவளிடம் தினம் தினம் படுத்து விட்டு வருகிறவர்தானே? அதைப் பொறுத்துக் கொண்டு இருக்கிற மாதிரி இவளும் இவள் புருஷனும் அன்று செய்த அக்கிரமங்களை மறக்கச் சொல்கிறீர்களா?" என்று படபடத்த பேஜ் மறுபடியும் அம்மாவின் பக்கம் திரும்பினாள். "நீ மட்டுமா? அலெக்ஸிஸ் மாத்திரமென்ன? பன்னிரண்டு வயசிலேயே கெட்டுப் போனவள்! நான் மாட்டிக் கொண்டதால், தான் தப்பித்தோம் என்று குஷாலாக ஒதுங்கிக் கொண்டாள்! என்ன துணிச்சலிருந்தால் ஒன்றுமே நடக்காத மாதிரி வேஷம் போடுவாய்!"

பேஜின் அம்மா காலோடு தலை உடம்பு ஆட, பிரேதம் போல் வெறித்து நின்றிருக்க, அக்கா அலெக்ஸிஸ், "எனக்குக் குடிக்க ஏதாவது இருக்கிறதா, பார்" என்று சொன்னவாறு உள்ளே வந்தாள். நியூயார்க்கிலிருக்கும் கணவனுடன் இத்தனை நேரமும் போனில் பேசிக் கொண்டிருந்தாளாகையால் இங்கே நடந்தது எதுவும் அவளுக்குத் தெரியாது.

"இந்தா, எடுத்துக் கொண்டு ஒழி!" என்று அவளை நோக்கி ஒரு மதுப் புட்டியை எறிந்தாள் பேஜ். "அப்பா என்ற பெயரில் ஒரு குடிகாரன் இருந்தானே, அவனுக்கு சர்டிபிகேட் கொடுக்கிறாள் அம்மா! உனக்காவது எல்லாம் நினைவு இருக்கிறதா? அல்லது நீயும் மறந்து விட்டாயா? எனக்குப் பதினாறு வயசு ஆன போது போலீசைக் கூப்பிடுவதாக மிரட்டினேன். அப்புறம்தான் அந்த ஆள் அடங்கினான். உனக்கோ அம்மாவுக்கோ போலீசைக் கூப்பிடத் துணிச்சல் இருந்ததா? நான் அந்த நரகத்திலிருந்து தப்பித்து இங்கே வந்து உயிர் தப்பினேன்...."

அலெக்ஸிஸுக்குப் பேச்சே வரவில்லை. "அப்பா ஒரு டாக்டர்..." என்று ஆரம்பித்தாள்.

"சீ! அந்த வார்த்தையைச் சொல்லாதே! டாக்டர் என்றாலே எனக்கு உடம்பெல்லாம் நடுங்குகிறது. கர்ப்பமாக இருந்தபோது கூட, எந்த டாக்டர் என்ன செய்வானோ என்று நான் ஆஸ்பத்திரிக்குப் போகப் பயந்து செத்தது உனக்கென்ன தெரியும்? பதினெட்டு வயதானதும் நீ டேவிட்டைக் கல்யாணம் செய்து கொண்டாய். முகத்துக்கு ஒப்பனை செய்து கொண்டாய். கண்ணுக்கு ஒப்பனை செய்து கொண்டாய். மார்புக்கு ஒப்பனை செய்து கொண்டாய். உடனே ஆளே மாறி விட்டோம்,



"பிணைக் கைதியா வச்சிருக்கிற மந்திரியை விடுவிடுக்கணும்னா, ஐந்து கோடி ரூபாய் வேணும்; இல்லேன்னா அவரைக் கொன்னுடுவோம்னு அறிக்கை விட்டது தப்பாப் போச்சு."

"என்னாச்சு?"

"அவரை விட்டுவிட்டால் உன்னைக் கொன்னுடுவோம்னு சொல்லி பொதுமக்களெல்லாம் சேர்ந்து எனக்கு அறிக்கை விட்டிருக்காங்க!"

– நெல்லை எம். தங்கவேலு

நாம் பழைய அலெக்ஸிஸ் இல்லை என்று உன்னை நீயே ஏமாற்றிக் கொண்டாய். எல்லா வற்றையும் மறந்தாய். என்னால் ஒப்பனையும் செய்து கொள்ள முடியவில்லை. நடந்த கொடுமையையெல்லாம் நடக்கவேயில்லை என்று ஏமாற்றிக் கொள்ளவும் முடியவில்லை!"

அம்மாவும் அக்காவும் மெல்ல மெல்ல வெளியே நழுவினார்கள். பிராட் மட்டுமே இருந்தான். பேஜின் இளம் பருவத்தைப் பற்றி அவனுக்குக் கொஞ்சம் கொஞ்சம் தெரியும். ஆனால் இவ்வளவு தூரம் தெரியாது.

"பேஜ்... கொஞ்சம் அமைதியாக இரு." என்றான். அதற்கு மேல் அவளை நெருங்கவோ ஆறுதல் சொல்லவோ அவனால் முடியவில்லை.

பேஜ் வெளியே சென்று தோட்டத்தில் சிறிது நேரம் உட்கார்ந்திருந்தாள். புயல் வீசி அடங்கியதால், இருந்த சுமையையெல்லாம் வெளியே கொட்டி விட்டதால், மனம் லேசாயிருந்தது. தன்னைக் கட்டியிருந்த விலங்குகள் அகன்று, சுதந்தரமாக இருக்கும் உணர்வு ஏற்பட்டது.

ஆஸ்பத்திரிக்குப் போய் ஆலிஸனைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. நேரம் கடந்த நேரமாக இருந்தாலும் பரவாயில்லை என்று புறப்பட்டாள்.

ஆலிஸனின் நிலைமையில் எந்த மாற்றமும் இல்லை. அவள் பக்கத்தில் மௌனமாக உட்கார்ந்திருந்தபோது, யாரோ அவள் தோளை மெதுவே தொட்டார்கள்.

தாரென்ஸன்தான்.

"நீ இங்கே இருப்பாய் என்று மனசுக்குள் ஏதோ ஓர் உணர்வு சொல்லியது. அதனால் தான் வந்தேன்," என்றவன், அவள் முகத்தைக் கவனித்ததும் திடுக்கிட்டான். அழுதுகொண்டு இருந்திருக்கிறாள் என்பது அப்பட்டமாகத் தெரிந்தது.

"பேஜ், என்ன ஆயிற்று?"

"ஒன்றுமில்லை," என்று கண்ணைத் துடைத்துக் கொண்டு களைப்புடன் புன்னகை செய்தாள் அவள். "மனசில் இருந்ததையெல்லாம் கொட்டினேன். நிம்மதியாக இருக்கிறது."

அவனுக்கு விளங்கவில்லை. "சரி, வா. ஒரு கப் காப்பி சாப்பிட்டு விட்டு வரலாம்."

அவளுக்கு விருப்பமில்லை. இருந்தாலும் அவன் பின்னே நடந்தாள்.

அவள் போவதைப் பார்த்துக் கொண்டிருந்த நர்சுக்குப் பரிதாபமாக இருந்தது. மூன்று வாரமாக இந்தத் தாய் இரவும் பகலுமாய் எத்தனை கஷ்டம் அனுபவிக்கிறாள்! மரணப் படுக்கையில் கிடக்கும் குழந்தைகளை வைத்துக் கொண்டு அவர்களுடைய தாய்மார்கள் படும் பாட்டைப் பலமுறை பார்த்தவள் அவள். இப்படிப் பாடுபடுவதைக் காட்டிலும் குழந்தை இறந்து போவதே மேல் என்று கூடச் சில சமயங்களில் தோன்றும். ஆனால் அதை எப்படித் தாய்களிடம் சொல்ல முடியும்?

வெயிட்டிங் அறையில், காப்பி மெஷினிலிருந்து ஒரு கப் காப்பி எடுத்து வந்து பேஜிடம் கொடுத்தான் தாரென்ஸன். அவள் மெதுவே உறிஞ்சினாள்.

"என்ன நேர்ந்தது, பேஜ்?"

"புதிதாக எதுவும் நேர்ந்து விடவில்லை," என்றாள் அவள்.

அந்தக் குரலில் தொனித்த சோகத்தைத் தாரென்ஸன் புரிந்து கொண்டான். "சொல்லப் பிடிக்கவில்லையென்றால் சொல்ல வேண்டாம். நான் வற்புறுத்த மாட்டேன்."

நீண்ட நேரம் அவள் கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். பிறகு அழுது கொண்டே கொஞ்சம் கொஞ்சமாகத் தன் இளம் பிராயத்துக் கொடுமைகளைச் சொன்னாள். தாரென்ஸனிடம் எதையும் ஒளிக்கக் கூடாது என்று தோன்றியதே காரணம்.

"என் தகப்பன் ஒரு கேடுகெட்ட பொறுக்கி, குடிகாரன். பெண்டாட்டியை அடித்து உதைத்தவன். என்னையும் அலெக்ஸிஸையும் அவன் நடத்தியவிதம்..." அவள் விம்மினாள். "அப்படிப்பட்டவனை மகா உத்தமன் என்கிற மாதிரி அம்மா பேசுகிறாள். ஒவ்வொரு தடவையும் இப்படித்தான்... எதுவும் நடக்காத மாதிரி நடிப்பாள்..."

அவன் அவளை அணைத்துக் கொண்டு தலையைக் கோதி விட்டான். "நீ அன்றைக்கு உன் அம்மாவையும் அக்காவையும் பற்றிச் சொன்னபோது ஏதோ கோபத்தில் சொல்கிறாய் என்று நினைத்தேன். இப்போதுதான் புரிகிறது..."

"நல்ல காலமாய் பிராடின் நட்பு கிடைத்தது. இவர்கள் முகத்திலேயே விழிக்கக் கூடாதென்றுதான் நியூயார்க்குக்குத் தலை முழுகி விட்டு இங்கே வந்தேன்..." என்று பேஜ் சொல்லிக் கொண்டிருக்கையில் நர்ஸ் வந்து, "உங்களைப் போனில் கூப்பிடுகிறார்கள்," என்றாள்.

அம்மாதான் சமாதானத்துக்காகக் கூப்பிடுகிறாள் என்று பேஜ் நினைத்தாள். ஆனால் கூப்பிட்டது பிராட்.

"பேஜ்..." என்று தடுமாறினான் அவன். "ஆண்டி..."

"என்ன? என்ன அவனுக்கு?" பதறினாள் பேஜ். இப்போதெல்லாம் கெட்ட செய்தியைத் தவிர வேறெதுவும் வருவதில்லை என்றாகி விட்டது. எல்லாமே ஆபத்து, எல்லாமே அபாயம், எல்லாமே விபரீதம்...

"பேஜ், ஆண்டியைக் காணோம்," என்றான் பிராட்.

(தொடரும்)

சென்னை தூர்தர்ஷனில் முழு நேர செய்தி வாசிப்பவர்களாக முதல் முறையாக இருவர் நியமிக்கப்பட்டனர். அவர்கள்: ஆங்கிலத்துக்கு சசிகுமார். தமிழுக்கு ஷோபனா ரவி. இப்போது சசிகுமார் மலையாளத்தின் ஏகபோக சாடிலைட் சானலான 'ஏசியா நெட்'டின் தலைவர்.

"நான் அப்போது எழும்பூரில் மாண்டியத் லேனில் வசித்து வந்தேன். ஒருநாள் இரவு திடீரென்று வானில் புகை மூட்டம். என்னவென்று பார்த்தால் ஸ்பென்ஸர் கட்டடம் தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தது. உடனே தொலைக்காட்சி நிலையத்துக்கு போன் செய்து, கேமராவை வரவழைத்து, சுடச்சுட ஒளிப்பதிவு செய்தது. இன்னமும் என்னால் மறக்க முடியாது" என்கிறார்.

"இன்னொரு சமயம் சுவாமி சின்மயானந்தாவுடன் ஒரு பேட்டி. சொற்பொழிவு நிகழ்த்தியே பழக்கப்பட்ட சுவாமிஜிக்கு கேள்வி கேட்டு, பதில் சொல்லுவது புதிய அனுபவம். என் கேள்விகள் அவரை எரிச்சலடைய வைத்தன என்றே நினைக்கிறேன். திடீரென்று 'இனி நான் கேள்விகளுக்குப் பதிலளிக்கத் தயாராக இல்லை' என்று கூறிவிட்டு வெளி நடப்புச் செய்து விட்டார். அது ஒரு நேரடி ஒளிபரப்பு என்பதால், அடுத்து என்ன செய்வது என்று எனக்கு ஒரு சில விநாடிகளுக்குப் புரியவில்லை. சமாளித்துக் கொண்டு, 'சுவாமிஜி வெளிநடப்புச் செய்து விட்டதால், நிகழ்ச்சி இத்துடன் முடிவடைகிறது; நன்றி' என்று கூறி முடித்து விட்டேன்" என்று மலரும் நினைவுகளில் மூழ்குகிறார் சசிகுமார்.

"ஏசியா நெட் துவக்கும் எண்ணம் எப்படி ஏற்பட்டது?"

"சாடிலைட் சானலுக்கு இந்தியாவில் நல்ல எதிர்காலம் உள்ளது என்று உணர்ந்த போது, என்னுடைய டெலிவிஷன் அனுபவங்களால் சி.என்.என். போல நியூஸ் சானல் தான் துவக்க விரும்பினேன். ஆனாலும் பிராக்டிகலாக சிந்தித்தபோது, ஒரு பிராந்திய மொழி சானல் துவக்குவது புத்திசாலித்தனம் என்று தோன்றியது. அப்படிப் பிறந்ததுதான் ஏசியா நெட்!"

மற்றெந்தச் சானலுக்கும் இல்லாத ஒரு அனுகூலம், ஏசியா நெட்டுக்கு உள்ளது. ஒளிபரப்புடன் நின்று விடாமல், கேரளாவின் பிரம்மாண்டமான கேபிள் டி.வி. நெட் ஒர்க்கும் நடத்துகிறது. இதற்காக கேரள மாநிலத்தின் மின்சார வாரியத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டு, மின் வாரியத்துக்குச் சொந்தமான மின்சாரக் கம்பங்களையே, கேபிள்களை எடுத்துச் செல்லப் பயன்படுத்துகிறது. இன்று ஏசியா நெட்டின் கேபிள் நெட் ஒர்க் மூலம் ஒரு லட்சம் வீடுகள் கேபிள் இணைப்பு பெற்றுள்ளன.

"இதுவரை நீங்கள்தான் மலையாள மொழி சானலின் ஏகபோக உரிமையை அனுபவித்து வந்தீர்கள். விரைவில் 'சூர்யா டி.வி.' என்ற மலையாள சானலை சன் டி.வி. துவக்கப் போகிறதாமே?"

"நாங்கள் மட்டுமே இதுவரை இருக்கிறோம் என்றாலும், எப்போதுமே போட்டியாக இன்னொரு சானல் வராது என்று நாங்கள் நினைக்கவில்லை. சன் டி.வி. தமிழ்நாட்டில் வேரூன்றி இருப்பதைப் போல, நாங்கள் கேரளாவில் இருக்கிறோம். எனவே போட்டிகள் பற்றிக் கவலை இல்லை!" என்கிறார் சசிகுமார்.

சந்திப்பு : **கௌதம்**

படம் : **யோகா**

**சன் டி.வி. போட்டிக்கு வந்தாலும் கவலையில்லை!**



### மேஷம் :

*(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

குடும்பத்துல உல்லாசமான சம்பவங்கள், நடக்கப் போவுது. உங்க மகிழ்ச்சியின் மறு ஆரம்பம் இந்த வாரம்னு வெச்சிக்கங்க. உத்தியோகஸ்தர்கள், வியாபாரிகளுக்கு, சனி மாறுதல் காரணமா, நேத்து வரைக்கும் இருந்த மந்த நிலைமை மாறி சுறுசுறுப்பான வளர்ச்சி தெரிய ஆரம்பிக்கும். அப்பப்ப எதிர்ப்பு இருந்தாலும் புத்திசாலித் தனமா சமாளிப்பீங்க. கவலை வேணாம். கணவன் மனைவிக்குள்ள லேசா சச்சரவு வர்ற டைம் இது. பேசும்போது அளந்து பேசுங்க.

### ரிஷபம் :

*(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

முக்கியமான கிரகங்கள் எல்லாம் இந்த வாரம் உங்களுக்கு சாதகமா அமைஞ்சிருக்கறதால, பொருளாதாரப் பிரச்னை இருக்காது. ஸ்பெகுலேஷன், ஷேர் துறைல இருக்கறவங்க கூட கலபமா லாபம் பார்க்கலாம், இந்த வாரம் உங்களுக்கு என்ன விசேஷம்னா, திடீர்னு சமுதாயப் பணிகள்ல சிலருக்கு ஆசை வரும். கவர்மெண்ட் சர்வென்ட்களுக்கு மதிப்பு உயரும். பெண்களைப் பொருத்தவரைக்கும் அமைதியான வாரம். வீட்டுல மாமியார் மருமகள் சண்டையே வராது.

### மிதுனம் :

*(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

எல்லாத்துக்கும் எதிர் நீச்சல் போட வேண்டி இருக்குதோன்னு சலிச்சிக்காதீங்க. கடைசில வெற்றி உங்களுக்குத்தான்றது ஞாபகம் இருக்கட்டும். வெள்ளிக்கிழமை வரைக்கும் வியாபாரிகளுக்கு வேட்டைதான்! லாபம் நல்லா கொட்டும்! அப்புறம் கொஞ்சம் டல்லா இருக்கும். சிலபேருக்கு பிளாட் வாங்கற யோகம் தெரியுது. இன்னும் சிலபேருக்கு வேலை வாய்ப்பு யோகம்.

### கடகம் :

*(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

மூணு கிரகம் உங்க ராசில வசதியா உக்காந்துட்டிருக்குதுங்க. ஸோ, பிரபுக்கள் ஆதரவு, நல்லோர் நேசம், வெளிநாடு போகும் வாய்ப்பு இந்த மூணுல நீங்க எதையாவது எதிர்பார்த்துட்டிருந்தீங்கன்னா அது ஓர்க் அவுட் ஆயிடும். பதவி உயர்வு, ட்ரான்ஸ்பர் இந்த மாதிரி உத்யோக ரீதில நல்ல பலன்கள் எதிர்பார்க்கலாம். திட்டம் போடறதுல 'மன்னி'களான பெண்களுக்கு இது பர்ஸ்ட் கிளாஸ் வாரம். அத்தனை திட்டமும் உ.பி. பி.ஜே.பி. பிளான்ஸ் மாதிரி சக்ஸஸ் ஆயிடும். சனிக்கிழமை வரைக்கும் வெளியூர் ட்ரிப் எதுவும் வேணாம்.

### சிம்மம் :

*(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

காரியத்தடை, பணப் பிரச்னை, அலைச்சல், நிம்மதிக் குறைவு. இந்த வாரம் கொஞ்சம் ஜாக்கிரதையா இருங்க. குறிப்பா எழுத்து, இசை, சினிமாத் துறைல இருக்கறவங்க விழிப்போட இருக்கணும். உழைப்புக்குப் பலன் இல்லையென்று வருந்த வேண்டி வரலாம். தவிர, எதிரிகள் ஒங்களைக் கவுக்க காத்துட்டிருக்காங்க, கவனம்! வாரக் கடைசில சிலருக்கு உடல் நலன் பாதிக்கப்படலாம்.

### கன்னி :

*(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

பேச்சாற்றல், சாதுர்யம், சிந்தனைத் தெளிவு - இதுதாங்க உங்க சொத்து! இந்த வாரம் சிலருக்கு எதிர்பாராத திடீர் அதிர்ஷ்டங்கள் அடிக்கப் போகுது. அது புதிய பரிசுகளாவோ, கிடைத்தற்கரிய வாய்ப்புக்களாவோ இருக்கலாம். வீட்டுல சந்தோஷத்துக்குக் குறைவில்லை. பெத்தவங்க பெருமைப் படறாப்பல பிள்ளைங்க நடந்துப்பாங்க. இஞ்சினீரிங், கம்ப்யூட்டர் துறையில இருக்கறவங்களுக்கு வளமான சூழ்நிலை கூடி வருது.

# நடக்குமென்பார் நடக்கும்!

சிலருக்கு பக்தி ஜாஸ்தியாகி, கோவில் கோவிலா போகத் தோணும்.

### துலாம் :

*(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-பாதம் வரை)*



ஆறாவது வீட்டு கிரகத் தோட டைரக்ஷ னால, உங்கள்ள, சமுதாயப் பணி - மக்கள் பணில ஈடுபட்டிருக்கறவங்களுக்கு இப்ப பெரிய அளவுல பாராட்டு கிடைக்கப் போவுது. சிக்கல் எதுவும் இருந்து நேத்து வரைக் கும் உங்களோட முக்கியமான முயற்சிகள் தடைப்பட்டு வந்திருச்சின்னா, இப்ப அந்தத் தடைகள் நீங்கிடும். சிலபேருக்கு வெளியூர் பிரயாணங்கள் உண்டு. சுமாரான பணக் கையிருப்புதான். ஆனா பிராப்ளம் இருக்காது.

### விருச்சிகம் :



*(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

நண்பர்களால ஏதாவது முக்கியமான உதவி எதிர்பார்க்கலாம். வீட்டுக்குச் சில விருந்தாளிங்க வரப் போறாங்க. சும்மா இல்லை - நல்ல செய்தியோட! அது, உங்க பொண்ணு கல்யாண விஷயமா கூட இருக்கலாம். துணிச்சலான காரியங்கள்ல ஈடு பட்டு லாபமடையற யோகம் சிலருக்கு இருக்குது. பெண்கள் சிலபேருக்குப் புதிய நகை, புடைவைகள் சேரும். வெளியூர் பயணங்கள் இந்த வாரம் வேணாம்.

### தனுசு :



*(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

சட்டம், அரசியல், ஆன்மீகத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு பிரகாசமான வாரம் இது. எந்தப் புது முயற்சி தொடங்கினாலும் வெற்றி நிச்சயம். மத்தவங்க கொஞ்சம் கவனமா இருக்கணும். எந்தக் காரியமும் கொஞ்சம் இழுத்தடிக்கும். ஃபாரின் போக முயற்சி பண்ணிட்டிருக்கறவங்களுக்கு அதுக்கான பச்சைக்கொடி பறக்கத் தொடங்கிடும். பசங்களால கொஞ்சம் கூடுதல் செலவு இருக்கும். கரண்ட் விஷயத்துல கொஞ்சம் ஜாக்கிரதையா இருங்க.

### மகரம் :

*(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

வெளியூர்களுக்குக் கிளம்பாதீங்க. பிரச்னை எந்த ரூபத்துல வரும்னு சொல்ல முடியாது. குறிப்பா வெள்ளி வரைக்கும் எங்கேயுமே நகராதீங்க. ஆனா லைஃப் உற்சாகமாத்தான் இருக்கும். கலை, ராணுவத் துறைல இருக்கறவங்களுக்கு வளமான பீரியட். கொஞ்சம் பணக் கஷ்டம் இருக்கும். லேசா உடல் கோளாறு வரும். கவனமா இருங்க. வீடு, நிலம் வாங்கறதைக் கொஞ்சம் தள்ளிப் போடுங்க. வீட்டுல சில சில்லறைச் சண்டை வரும். பிள்ளையார் கோவிலுக்கு இந்த வாரம் அவசியம் போயிட்டு வாங்க.





மகர ராசிக்காரரான பெப்ஸி உமா இந்தவாரம் வெளியூருக்கு எங்கேயும் போகாம இருக்கறது நல்லது. கலைத்துறைல இருக்கறதால வளமான பீரியடாம்! (அது சரி. உமா நீங்க படைப்பாளிகள் ஃபேனா? பெப்ஸி ஃபேனா?)

### கும்பம் :



*(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

முன்பின் தெரியாதவங்க கிட்ட ஜாக்கிரதையா பழகணும். குறிப்பா 'ஸேல்ஸ் ரெப்'னு வீட்டுக்கு வந்து ஏதாச்சும் அபேஸ் பண்ணிட்டுப் போற ராசி - இந்த வாரம் உங்கள்ள சில பேருக்கு இருக்கு. கொடுக்கல் வாங்கல் கவனமா இருங்க. அதிகம் பேச்சு வேணாம். வயசானங்களுக்குக் கொஞ்சம் உடம்பு சரியில்லாம போகலாம். சிலபேருக்கு மன அமைதி குறையறாப்பல ஏதாவது சங்கடங்கள் இருக்கும். துர்க்கை வழிபாடு நல்லது செய்யும்.

### மீனம் :



*(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

விழாக்காலம் மாதிரி உற்சாகமான வாரம் இது. பசங்க படிப்புல, சக்கைப் போடு போடுவாங்க. பொன், பொருள் சேர்க்கை நடக்கும். நீண்ட நாளா குழந்தைப் பேறு இல்லாதவங்களுக்கு இப்ப சமயம் கூடி வருது. வாழ்க்கைல குறிப்பிடும்படியான ஏதாவது ஒரு திருப்பம் இந்த வாரம் நடக்கும். ஃபிரெண்ட்ஸ் மூலமா ஏதாச்சும் நல்ல செய்தி வரலாம். சில பேர் கோவில் திருப்பணி மாதிரி புண்ணிய காரியங்கள் செஞ்சி, நல்ல பேர் வாங்குவீங்க.

# குறையொன்றுமில்லை

கோவிலுக்குப் போய் பகவானை சேவிக்கிறோம். நமக்கு என்ன புரிகிறது? எல்லாம் புரிந்தா அந்த காரியத்தைச் செய்கிறோம்?... திருவல்லிக்கேணி போய் நித்தியம் பார்த்தசாரதியை சேவிக்கிறார் ஒருத்தர். என்ன புரிகிறது அவருக்கு...?

ஒன்றும் புரியவில்லை! போகிறார். போனவுடனே கண்ணை மூடிக் கொண்டு விடுகிறார்! அங்கேயல்லவா கண்ணைத் திறக்க வேண்டும்!

ஒரு க்ஷேத்திரத்தில், பெருமாளுக்கு இடது கையில் சக்கரம். 'இந்த ஊரில் எம்பெருமான் இடது திருக்கரத்தில் சக்கரத்தை வைத்துக் கொண்டிருக்கிறான். அதைக் கொஞ்சம் சேவியுங்கள்...' என்று விளக்கைத் தூக்கிக் காண்பிக்கிறார் அர்ச்சகர். வந்தவரோ அப்போதுதான் ஆழ்ந்த தியானத்தில் மூழ்கியிருக்கிறார்!

கோவிலுக்குப் போய் வந்தவரிடம், அந்த ஊருக்குப் போயிருந்திரே, ஒரு விசேஷம் கவனித்திரா?.... என்று கேட்டால்,

'விசேஷமா? என்ன விசேஷம்...?' என்று விழிக்கிறார்.

"பகவான் இடது திருக்கரத்திலே சுதர்ஸனாழ்வார் இருக்கிறதைப் பார்க்கவில்லையா...?"

"இல்லையே! நான் பார்க்கவில்லையே! கற்பூர ஹாரத்தியின்போது கண்மூடி இருந்து விட்டேன்..."

– இந்த மாதிரி நாம் இருப்போம் என்பதால்தான் ஆழ்வார் நம்மைப் பார்த்துக் கேட்கிறார் – 'மேய்ச்சல் தலையிலே



31



அசைபோடுவார் உண்டோ?' என்று....

'மேய வேண்டிய இடத்தில் போய் புல்லை மேயாமல் அசைபோடுவது சரியா...?' என்று அர்த்தம்!

சேவிக்க வருகிற நேரத்தில் பெருமாளை நன்றாகக் கண்ணை அகல விரித்து சேவிக்க வேண்டும். பின்னர் வெளியே வந்து உட்கார்ந்த பிற்பாடு எல்லாவற்றையும் அசைபோடலாம்...

வேத சப்தமும் இப்படித்தான். முழுதும் புரிந்து அனுபவிப்பதில்லை. ஆனால் புரியாது போனாலும் கேட்டால் பயன் அதிகம்.

அர்த்தம் தெரியாமல் சொன்னாலும் எந்த தேவதையை உத்தேசித்துச் சொல்கிறோமோ, அந்த தேவதை நமக்குக் கட்டாயம் பலனைக் கொடுக்கும். ஆகையால் மந்திரத்துக்கு அர்த்தம் தெரியவில்லை என்று அதைத் தள்ளல் ஆகாது. அர்த்தம் தெரிந்து சொன்னால் ரொம்பவும் நல்லதுதான். ஆனால் அவகாசம் இல்லை; தெரிந்து கொள்ள, கற்று வர இயலவில்லையானால் வெறுமே சிரவணம் பண்ணினாலே போதும் - பூரண பலனைக் கொடுத்துவிடும்.

ஏனென்று கேட்டால், வேத மந்திரங்கள் யாவும் விஷ்ணு ஸ்வரூபம். பரப்ரும்மம் சப்த வடிவிலே இருக்கிறது. அதனால் அந்த மந்த்ரங்களுக்குப் பலன் நிச்சயம் உண்டு.

**ய**க்ஞப் பிரவரணத்துக்காக விசேஷமாகப் பசுக்களை ஓட்டிச் சென்று மேய்ச்சலுக்கு விடுவார்கள். அவை நன்றாகப் புல்லை மேய்ந்து, நிறைய க்ஷீரத்தை - பாலை யக்ஞத்தின் பொருட்டு கொடுக்கும். அப்படிப்பட்ட பசுக்கள் பாலைக் கொடுக்க புஷ்டியாக இருக்க வேண்டுமானால் அதற்கும் மஹாவிஷ்ணுதான் அனுக்கிரஹம் பண்ண வேண்டும்!

மேயப் போகும் பசுக்களை துர்தேவதைகள் அடிக்காமல், எந்த ரோகங்களும் பீடிக்காமல் இருக்க வேண்டும் என்று வேதமே சொல்கிறது.

'வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்' என்று ஆண்டாள் சொல்கிறாளே— அது வேதத்தில் குறிப்பிட்ட விஷயம்தான்!

வள்ளல் பசுக்கள்! பால் குடத்தை வாங்குகிறவர்களின் கை சலிக்குமேயொழிய பசுக்கள் கொடுத்துச் சலியாதாம்! அப்படி வள்ளலாக வர்ஷிக்கிற கறவைகள் கன்றினை உடையனவாகவும் இருக்கின்றன.

'தேனு' என்றால் இளங்கன்றுடன் கூடிய பசு. இஷ்டப்பட்டதைக் கொடுக்கும் தேவலோகத்துப் பசு காமதேனு. காமதேனுவின் பெண்ணுக்கு நந்தினி என்று பெயர்.

வசிஷ்டர் ஆசிரமத்திலே அவருக்கு வேண்டிய பாலை நித்தியம் கொடுத்து வந்தது காமதேனு.

...டர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்





அப்படிப்பட்ட, காமதேனுவை ஒத்த பசுக்கள், பாலை வர்ஷிக்க வேண்டும் என்கிறது வேத மந்திரம்; 'அந்தப் பால் எல்லோருக்கும் விநியோகமாக வேண்டும்; எனவே நீ பசுக்களை ரக்ஷிக்க வேண்டும்.'

சர்வ ரக்ஷகனாயிருக்கக்கூடிய நாராயணா, விஷ்ணு! பசுக்களை ரக்ஷித்து யக்ஞத்துக்கு வேண்டிய பாலைக் கொடுத்து, தயிரைக் கொடுத்து, நெய்யைக் கொடுத்து நீதான் உதவ வேண்டும்... என்ற பிரார்த்தனையுடன்தான் யக்ஞ காரியங்கள் ஆரம்பம் ஆகும்.

கர்ம காண்டத்திலே சாத்விக தியாகம் என்று சொல்லித் தரப்படுகிறது. அதாவது ஒவ்வொரு கர்மாவையும் ஆரம்பிக்கும்போது அது 'அவனுடைய' ப்ரீதிக்காக அவனே நம் ஆத்மாவைக் கொண்டு நடத்திக் கொள்கிறான்... என்கிற விநயத்தோடு ஆரம்பிக்க வேண்டும்.

'நான் பண்ணுகிறேன்' என்று சொல்லவே கூடாது! 'நான் சொல்கிறேன், கேள்' என்பவரிடம் விஷயமே கேட்கக் கூடாது! 'அடியேனுடைய விண்ணப்பம் இது...' என்று யார் சொல்கிறார்களோ, அவர் வார்த்தையைத்தான் கேட்க வேண்டும்.

ஆக, சாத்விக பாவம், சாத்விக தியாகத்துடன் யக்ஞ காரியங்களையும் தொடங்க வேண்டும். எல்லாவற்றுக்கும் அவனே காரணமாயிருந்து நடத்திக் கொள்கிறான் என்ற எண்ணம் இருக்க வேண்டும்.



அருள் வாக்கு

'வசதி
யுள்ளவர்களால்
தான் பண உதவி செய்து புண்ணியம் செய்ய
முடியும், நாம் என்ன செய்யலாம்?' என்ற
மற்றவர்கள் எண்ணக் கூடாது. சரீரத்தால் மற்ற
வர்களுக்குக் கைங்கரியம் செய்வது பெரிய
புண்ணியம். அது சித்த சுத்திக்கு ரொம்ப ரொம்ப
உதவும். வசதியே இல்லாதவர்களுக்கு
இவ்விதத்தில் பிறருக்கு சரீர சகாயம் செய்ய
முடியும்.
ஒவ்வொருத்தரும் – பிறருக்குக்கூடத் தெரிய

**ய**க்ஞத்துக்கான அடுத்த மந்திரம் என்ன சொல்கிறது என்பதை வித்யாரண்ய சுவாமி ரொம்ப அழகாக விக்ஞாபனம் பண்ணுகிறார் :

தர்ப்பத்தை அறுத்துக்கொண்டு வர வேண்டும் – யாகத்துக்கான முதல் காரியம் இது. நல்ல தர்ப்பம் (தர்ப்பைப் புல்) வேண்டும். அதன் நுனி தீக்ஷண்யமாக இருக்க வேண்டும்.

புத்திக் கூர்மைக்கு தர்ப்பத்தை உதாரணம் சொல்வதுண்டு. ஏக ஸந்த கிராஹி – ஒருமுறை சொன்னாலே நன்றாகப் பிடித்துக் கொள்பவன், குசாக்ர புத்தியுடையவன்... இவர்களை தர்ப்பத்தைக் கொண்டு உவமிப்பது உண்டு. கூர்மையான தர்ப்பத்துக்குள்ளே விச்வாமித்ர தர்ப்பம் என்றே ஒரு வகையுண்டு. அதன் நுனிதான் ரொம்பக் கூர்மை.

அந்த மாதிரி தர்ப்பம் இருந்து அதில் பவித்திரத்தைச் செய்து போட்டுக் கொண்டால் பெரும் பயனைத் தரும். அதைப் போட்டுக் கொண்டு செய்கிற சங்கல்பத்துக்குப் பங்கமே ஏற்படாது.

இப்படிப்பட்ட தர்ப்பத்தை கிரஹித்து வருவதிலிருந்து யக்ஞ காரியம் ஆரம்பமாகிறது. அதிலேயே ஏராளமாக சிரத்தை காட்ட வேண்டும்.

முதலில் நல்ல நாள் பார்க்க வேண்டும். அது விளைகிற இடத்துக்குப் போக வேண்டும். சுத்தமான இடத்தில்தான் தர்ப்பம் விளையும்.

தீர்த்தத்தினுடைய இன்னொரு ஸ்வரூபம்தான் தர்ப்பம். 'தீர்த்தம் வேறு தர்ப்பம் வேறு என்று நினைக்காதே' என்கிறது வேதம்!

இதற்கு ஒரு கதையுண்டு. இந்திரன் ஒரு முறை வஜ்ராயுதத்தை எடுத்து விருத்ராசுரன் மீது பிரயோகம் பண்ணினான். ஆனால் வஜ்ராயுதத்தால் அவனை ஒன்றும் செய்ய முடியவில்லை. ஏதோ வைக்கோலால் தட்டுகிற மாதிரி அசுரனைத் தட்டிவிட்டு விழுந்து விட்டது.

பிரும்மா இதைப் பார்த்தார். வஜ்ராயுதத்தை எடுத்து, கமண்டலத்திலேயிருந்த தண்ணீரில் ஒரு நனைப்பு நனைத்துக் கொடுத்தார்... 'இப்போ இதைப் பிரயோகம் பண்ணு' என்றார், இந்திரனிடம். இந்திரன் அவ்வாறே பண்ணினான்.

அந்த வஜ்ராயுதமானது விருத்தாசுரனைக் கண்ட துண்டமாக வெட்ட ஆரம்பித்து விட்டது! கையை வெட்டுகிறது; காலை வெட்டுகிறது; ஒவ்வொரு அங்கமாகச் செதுக்குகிறது! அப்படியே ரத்தமாகக் கொட்டுகிறது அவன் உடம்பிலிருந்து...

பார்த்தான் அசுரன்... பிராணன் போகிற தறுவாயிலாவது அவன் நல்லது செய்யலாம்... ஆனால் அவனுக்குக் கெட்ட புத்தி! இப்படி ஓடியது அவன் மூளை :

'பிரும்மாவினிடத்திலே சக்தி கிடையாது. இந்திரனிடத்திலும் சக்தி கிடையாது; வஜ்ராயுதத்துக்கும் சக்தி கிடையாது. ஆயுதத்துக்கு சக்தி, தீர்த்தத்தினால்தான் வந்தது. அதனால் தானே நம்மை வெட்டித் தள்ளுகிறது! ஆகை

வேண்டாம். – ஏதோ ஓர் ஒற்றையடிப் பாதைக்குப் போய் அங்கே உள்ள முள்ளை, கண்ணாடியை அப்புறப்படுத்தி வந்தால் போதும். அது சித்த சுத்திக்குப் பெரிய உதவி. இதுமாதிரி சின்ன தர்மங்களை எவரும் செய்யலாம். பணக்காரர், ஏழை என்ற வித்தியாசமில்லாமல் ஒரு பேட்டையில் உள்ள அனைவரும் சேர்ந்து குளம் வெட்டலாம்.

'ஈசுவர அனுக்கிரகம் வேண்டும். வேண்டும்' என்றால் அது எப்படி வரும்? பரோபகாரமான, ஜீவகாருண்யமான நல்ல காரியங்களைச் செய்து செய்து, மனசு பக்குவப் பட்டால்தான், சித்த சுத்தி உண்டாகி, அந்த சுத்தமான சித்தத்தில் ஈசுவரனின் உருவத்தைப் பார்க்க முடியும். கலங்கின ஜலத்தில் பிம்பம் தெரியாதது போல், நாம் மனசைக் கலக்கிக் கொண்டு ஈசுவர ஸ்வரூபம் தெரியாதபடி செய்து கொண்டிருக்கிறோம். பகவத் பக்தியோடு பரோபகாரமும் செய்து மனசு தெளிவாகும்போது ஈசுவரானுக்கிரகத்தை நாம் கிரகித்துக் கொள்ள வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

யினாலே உலகத்திலே நல்ல தீர்த்தமே இல்லாமல் பண்ணிவிடுகிறேன்...' என்று ரத்தம் வழியக்கூடிய உடம்பைக் கொண்டு போய் ஒவ்வொரு ஜல நிலையிலேயும் தோய்த்தான்!

'பிரும்மா பார்த்தார்... மொத்த ஜலத்தையும் இவன் கெடுத்து விடுவான் போலிருக்கிறதே...' என்று அவன் மீது வைத்திருந்த ஜலத்தையெல்லாம் தர்ப்பமாக மாற்றிவிட்டார்!

இந்தக் காரணத்தினால்தான் தீர்த்தத்தின் இன்னொரு வடிவமாக தர்ப்பையை நினைக்கிறோம். நமது ஒவ்வொரு கர்மாவிலும் தர்ப்பையைச் சேர்த்துக் கொள்கிறோம்.

வீட்டில் வருஷம் பூராவும் இருக்கட்டும் என்று வெயில் காலத்திலே ஜாடி ஜாடியாய் ஊறுகாய் போட்டு வைத்து விடுவார்கள். கிரஹணம் வந்தால் அதைக் கொண்டு போய் வாசலில் கொட்டி விட முடியுமா...? குடும்பத்தை ரக்ஷிக்க வேண்டிய பொறுப்பு இருக்கிறவர்கள் அப்படிச் செய்வதை ஒப்புக் கொள்வார்களாயென்ன...?

சாஸ்திரம் என்ன சொல்கிறது...? கிரகணத்துக்குப் பின் தீர்த்தத்தினாலே கிரஹத்தை அலம்பிவிடு என்கிறது. இல்லையா...? ஊறுகாயை சுத்தி பண்ணுவதற்கு அதுவும் ஜலத்தில் அலம்பப்பட்டதாக ஆக வேண்டும். எனவேதான் ஜலத்துக்கு ஈடான இரண்டு தர்ப்பத்தைக் கிள்ளி ஊறுகாய்ப் பானையிலே போட்டு வைக்கிறோம். அப்படிச் செய்தால் அதற்கு கிரஹண தோஷம் ஏற்படுவதில்லை.

நெய்யைக் கொண்டு ஹோமம் வளர்க்கிறோம். அந்த நெய்க்கு சுத்தி ஏற்பட வேண்டும் என்பதற்காக, அதிலே இரண்டு தர்ப்பையை எடுத்துக் கிள்ளிப் போடுகிறோம்.

இப்படி, அபர கர்மாவாகட்டும், பூர்வ கர்மாவாகட்டும் கோவில் பிரதிஷ்டையாகட்டும்... எல்லா கர்மாவிலேயும் தர்ப்பை ஏற்றமுடையதாய் இருக்கிறது.

தர்ப்பை விளைகிற இடம் பவித்ரமான இடம் என்று சொன்னேன். 'தூய புல்' விளையும் இடம்தான் தூப்புல் என்று அழைக்கப்படுகிறது. சுவாமி தேசிகன் அவதாரம் செய்த ஸ்தலம் அது.

தர்ப்பையை எடுப்பதற்கும் சாஸ்திரம் உண்டு. பன்னிரண்டு பிடி உயரம் இருக்கிற தர்ப்பையைத் தேர்ந்தெடுத்து, கீழேயிருந்து நான்கு பிடி விட்டுத்தான் அறுக்க வேண்டும்.

நம் கிரஹத்தில் நல்லது நடக்க வேண்டும் என்பதற்காக அதை வேரோடு பிடுங்கி விடக்கூடாது. அடியோடு அழித்து விட்டால் பிறகுக்கு வேண்டாமா...? அது மட்டுமல்ல, 'தாவர வர்க்கத்திடமும் கருணை காட்டு' என்கிறது சாஸ்திரம். 'உனக்கு வேண்டியதை மட்டும் கிரஹி; எடுத்துக் கொள்; அதையும் வாழ விடு... அப்போதுதான் நீ ஜீவிக்க முடியும்...' என்கிறது.

அதன்படி தர்ப்பத்தை எடுத்து அரி அரியாக வைக்க வேண்டும். அதன் பிறகு அதையே கயிறாகத் திரித்துக் கட்ட வேண்டும். அப்படியும் சிரஸில் வைத்து யக்ஞ வாடிகைக்குக் கொண்டு வந்து இறக்கி வைக்க வேண்டும். இது கர்மா...

இதையெல்லாம் யார் செய்கிறார்கள் என்பதையும் வேதமே சொல்கிறது. இந்திராணி தர்ப்பையை அறுக்க, உஷா என்கிற தேவதை கட்டி வைக்கிறாள். சாக்ஷாத் பிரஹஸ்பதியே – தேவகுரு – அதைத் தலையிலே சுமந்து வந்து யக்ஞவாடிகையிலே வைக்கிறார்.

இப்படி சமஸ்த தேவதைகளும் செய்யக்கூடிய காரியத்துக்கு, அந்த ஸ்தானத்துக்கு அதிபதியாய், காரியத்துக்குக் காரணமாய் இருக்கக்கூடியவன் விஷ்ணு.

சர்வதேவாந்தர்யாமியாய் இருந்து, இந்த தர்ப்ப சங்க்ரஹணம் என்கிற காரியத்தை நடத்தி வைக்கிறான் அவன் என்று வேதமே சொல்கிறது.

(தொடரும்)

3 **சுஜாதா**

# வொஷிங் மெஷின்

இன்றைக்கும் வேலைக்காரி வரவில்லை. ஸ்வேதாவுக்கு ஆம்லெட் கொடுக்கும்போது, அவள் சீருடைக்கு இஸ்திரி போட வேண்டி யிருக்கும்போது, வாசல் மணி அழைக்கும் போது, ஃபோன் தொணதொணக்க – "ஃபோனையாவது எடுக்கக் கூடாதா? காலைல எத்தனை காரியம் ஒருத்தி செய்ய முடியும்?" என்று ஹாலில் பேப்பரில் மறைந் திருந்த கணவனைக் கேட்டாள்.

"உங்களுக்குத்தான்."

"இல்லைன்னு சொல்லிடு" என்றான் சதீஷ்.

"காலை வேளையில பொய் சொல்லி எனக்குப் பழக்கமில்லை."

"பொய் சொல்ல வேளை பார்க்கக் கூடாது சாவித்ரி."

மீண்டும் கதவு மணி ஒலிக்க, கணவன் பெரிய மனது பண்ணி திறக்கச் சம்மதித்து "சாவித்ரி பேப்பர்க் காரன்." எல்லாக் காரியமும் சாவித்ரியைச் சுற்றித்தான்.

"இன்னிக்கு இல்லைப்பா. ஏம்பா உன் பொஞ்சாதியை விட்டு வேலைக்கு வரச் சொன்னேனே!"

"ஆறு வூட்ல செய்றாம்மா. சி.ஐ.டி. காலனில ஒரு வூட்டை விட்டப்றம் ஒண்ணாந்தேதி வரதா சொன்னாங்க."

"ஒண்ணாந்தேதியா? அதுவரைக்கும் எப்படிப்பா சமாளிப்பேன்?"

"என் தங்கச்சி, அல்லாட்டி தம்பி சம் சாரத்தை வேணா கேட்டுப் பார்க்கறேன். பேப்பர் இல்லிங்களா?"

"இருக்குப்பா. எடுத்துப் பார்த்துப் போட றதுக்கு எனக்கு எங்க அவகாசம்?"

"அய்யா?"

"அய்யாவா" என்று ஏளனமாக "அய்யா பேப்பர் போட்டுட்டா மழை வந்துரும்பா. இருக்கற பேப்பரை சரியா மடிச்சு வெச்சாலே பாக்யம்."

சதீஷ் ஸ்போர்ட்ஸ் பேஜை முடித்துவிட்டு, குறுக்கெழுத்துப் பக்கத்தை நாலாக மடித்துக் கொண்டான். "என்ன என் தலையை உருட்டி யாறது?"

"அய்யா எப்ப் பண்ணுவாரான்னு கேக்க றான். பண்ணுவாரே கடியாரத்துக்குச் சாவி கொடுப்பார்னேன்!"

எல்லாமே செல்லமான கோபங்கள்தான். சாவித்ரிக்கு இந்த அதிகாலை டென்ஷன் பிடிக்கும். ஆனால் வேலைக்காரி வராத தவிப்புத்தான் "டூ மச்."

"உனக்கு வேலைக்காரி வரலைன்னா என்மேல பாய்ற!"

"உங்க மேல யார் பாஞ்சா? கொஞ்ச மாவது ஒத்தாசை பண்ணா சரி. இன்னிக்கு லீவுதானே?"

"இல்லே ஆபீஸ் போகணும். வீடு பெருக் கணுமா?"

"அதெல்லாம் வேண்டாம். மேசை மேல இருக்கற லெட்டர்ங்களை ஒழுங்கா பொறுக்கி வச்சாப் போதும். என்னால எல்லாக் காரிய மும் பண்ண முடியறது. பாத்திரம் தேய்க்க முடியறது. துணி தோய்க்கறதுதான் பெரிய உபத்திரவம்."

அவனுக்கு இரண்டாம் வேளை காப்பி கொடுக்க...

சதீஷ் சோபாவில் இடம் மாறி உட்கார்ந்து கொண்டு, "லெட்சுமி, லீ, ஒரு நாளைக்கு எத்தனை துணி? ஆறு துணியா?"

"பதினெட்டுத் துணி."

"மூணு பேருக்கா!"

"ஆமா, உங்க டி ஷர்ட்டு, டென்னிஸ் ஷர்ட்டு, வாக்கிங் போன ஷர்ட், ஆபீஸ் ஷர்ட், ஸாக்ஸ், ஸ்வேதாவோட யூனிபார்ம். அப்புறம் அவ சுடிதார், அப்புறம் நைட்டி, உங்க நைட் ஷர்ட், ரெண்டு செட் புடைவை, உள் பாவாடை, பாடி, ரவிக்கை. கணக்கு என்ன வரது?"

"கொஞ்சம் கொஞ்சமா தவணை முறைல தோய்க்கறது!"

"அப்படி பண்ணித்தான் மொத்தம் அம்பது துணி சேந்திருக்கு!"

"இதுவரை யார் தோச்சுண்டிருந்தா?"

"எல்லாம் வேலைக்காரிதான். அப்பப்ப

கூடைல போட்டுருவோம். செட்செட்டா தோச்சு மொட்டை மாடில உணர்த்திருவா."

"அவ வரலையாக்கும்?"

"ஆமாம். அதான் ப்ராப்ளம்."

"சாயங்காலத்துக்குள்ள சால்வ் பண்றேன்."

"என்னால தோய்க்க முடியும். யாராவது ஒத்தாசை செய்தா போதும். தோச்சதைப் பிழிஞ்சு உணர்த்தினா போதும். ஏதாவது!"

"எல்லாத்துக்கும் ஒரு வழி பண்றேன்."

சதீஷ் போனை எடுத்து டெலிபோன் டைரக்டரியின் மஞ்சள் பக்கங்களைப் புரட்டி 'சங்கர் எம்போரிய'த்துக்கு போன் செய்தான்.

"ஒரு வாஷிங் மெஷின் எத்தனை இருக்கும்?"

"ஸார் டோண்ட் ஒர்ரி எபவுட் தி ப்ரைஸ். சார், அட்ரஸ் சொல்லுங்க. எங்க சேல்ஸ் பர்சன் வந்து டெமோ பண்ணுவார். அப்றம் விலை பேசலாம். அதும் எங்க இன்ஸ்டால் மெண்ட் ஸ்கீம்ல இனிஷியல் பேமெண்ட் சிக்ஸ் அண்ட்ரட் கொடுத்தா போதும். பாக்கியை முப்பத்தாறு..."

"அதெல்லாம் வேண்டாம். இருக்கறதுக்குள்ளயே நல்ல மெஷின் அனுப்புங்க. டவுன் பேமெண்ட்."

போனை வைத்துவிட்டு "வாஷிங் ப்ராப்ளம் சால்வ்டு. அப்பறம் என்ன வேணும், டிஷ் வாஷர்? வீடு பெருக்க வாக்வம் க்ளீனர்? என்ன வேணும் சொல்லு."

"நான் அதெல்லாமா கேட்டேன். கொஞ்சம் எல்ப் பண்ணா போதும். நானே எல்லாக் காரியமும் செய்துக்கறேன்னுதானே சொன்னேன். வாஷிங் மெஷினை எல்லாம் எனக்கு இயக்கத் தெரியாது."

"கத்துக்கலாம்மா" என்றாள் ஸ்வேதா.

"நீ கத்துக்கயேன், அம்மாவுக்கு எல்பா இருக்கும்."

"நோ வே! நான் வாஷிங் மெஷின் இல்லைப்பா, கம்ப்யூட்டர்."

"மெஷின்னா பயப்படக் கூடாது. எதுக்கும் அவன் வருவான் எப்படி இயக்கறதுன்னு சொல்லித் தருவான்."

கணவன் ஒரு குட்டித் தூக்கம் போடச் சென்றதும் சமையலை முடித்துவிட்டு சற்று நேரம் தமிழாக்கத் தொடர் பார்த்தாள். அதில் யாரோ பாட்டிலைத் திறந்து விஷம் குடிக்கு முன் கண்ணயர்ந்தபோது, சதீஷ் ஓசைப் படாமல் அவளைப் பின்னாலிருந்து அணுகி அணைத்துக் கொள்ள முயன்றபோது திடுக்கிட்டு எழுந்தாள்.



"எதுக்காக நீ கஷ்டப்படணும்" என்று கணவன் பரிவுடன் அவளை அணைத்துக் கொண்டான். "இந்த முறை ஹாலிடே ரிசார்ட், என்ன ஆனாலும் சரி... போயே ஆகணும். ஒவ்வொரு வருஷமும் தவறிப் போய்டறது."

"பரவால்லைங்க. ஆபீஸ் வேலை முக்யமில்லையா?"

"என்ன பெரிய ஆபீஸ் தட்டுக்கிடறது? நான் உழைக்கிறேன்னு எங்கிட்ட எல்லா வேலையையும் கொடுத்துட்டு, மற்ற விபி எல்லாம் டார்ஜிலிங், கொடைக்கானல்னு குழந்தை குட்டியோட போய்டறாங்க."

"அதனாலென்ன!"

"எனக்கு ரொம்ப கில்ட்டியா இருக்கு சாவித்ரி. கடுமையா உழைக்கிறே. உனக்கும் ஒரு ரெஸ்ட் வேண்டாமா, வேணும்னா ஒரு பதினஞ்சு நாள் மாயவரம் போய்ட்டு வாயேன்?"

"வேண்டாங்க. ஸ்வேதாவுக்கு பாடம் சொல்லித் தரணும். மேலும் எங்க அம்மாவே எதுக்கு வந்தே, எதுக்கு வந்தேன்னு தொண தொணத்து மாப்பிள்ளை கஷ்டப்படுவார்னு துரத்தி அனுப்பிருவா. எனக்கு எதும் வேண்டாம்!"

"உனக்கு ஒரு ரெஸ்ட் வேண்டாமான்னு கேக்கறிங்களே, பரிவோட. அதுபோதும் எனக்கு" என்றாள்.

"உன்னை ம்யூசியத்திலதான் வெக்கணும்!" என்று அவளைப் பின்பக்கத்திலிருந்து அணைத்து, "அழகான ம்யூசியம் பிறவி. என்ன கொஞ்சம் தலைக்கு லேசா டை போட்டு, ப்யூட்டி பார்லர்ல போய் திருத்தம் பண்ணிக்கிட்டு வந்துட்டா, ஸ்வேதாவை உன் தங்கையான்னு கேப்பாங்க எல்லாரும். சாவித்ரி நீ ஏன் உன் தோற்றத்தைப் பற்றி கவலைப் படறதே இல்லை?"



"கொஞ்ச நாளா விரல்கள்லாம் ஒரே யடியா நடுங்குது டாக்டர்..."

"அதுக்கு என்ன பண்றது? சுரண்டல் லாட்டரி வாங்கி வாங்கி, வருஷக் கணக்கா சுரண்டிட்டு, இப்ப அரசு திடீர்னு தடை விதிச்சுட்டதால இப்படித்தான் விரல் எல்லாம் நடுங்கும்!"

– அம்பை தேவா

"யாருக்காக நான் அலங்காரம் பண்ணிக்கணும்?"

"எனக்காகத்தான்."

"நீங்க இந்த வெளி அலங்காரத்தினால தான் எம் மேல அன்பா இருக்கீங்களா?"

"சேச்சே! நீ என்ன ரூபத்திலயும் எனக்கு அழகானவதான்" என்று அவளை மறுபடி முத்தமிட்டு விட்டு, இன்னும் ஒரே ஒரு காப்பி" என்றபோது போன் மணியடித்தது.

"சாவித்ரி ஆபீஸ் போறேன். அந்த வாஷிங் மெஷின் சேல்ஸ்மேன் வருவான். காட்டச் சொல்லு. எனக்காகக் காத்திருக்க வேண்டாம். கொஞ்சம் லேட்டாகும் ஆபீஸ்ல" என்றான்.

போகும்போதுகூட அவளை இன்பமாக தோளில் அழுத்தி விட்டுத்தான் சென்றான்.

**சா**யங்காலம் அந்த இயந்திரம் கொண்டு வரப்பட்டது. வெளிர் நீலத்தில் ஒரு நெற்குதிர்க் குழந்தை போல இருந்தது. பளபள வென்று இரண்டு மூடிகள். அருகே விதவித மான குழாய் இணைப்புகள் தண்ணீருக்காக. டை கட்டின இளைஞன்.

நாயை, "இந்த டாக் கடிக்குங்களா?" என்று கை சொடக்கினான். டோனூ அவனை மாதிரி பார்த்தது. "கட்டிப் போட்றிங்களா? என்றவனைப் பார்த்து வாலாட்டியது.

"நான் ஒரு நாய் நேசன்" என்றான் அவன். "நீங்க ஏதுமே செய்ய வேண்டாம் மிஸஸ் சத்தீஷ் குமார். இந்தத் துணிகளை இந்தச் குட்டுக்குள்ள போட்டு, இந்த பட்டனை அழுக்கினா போதும்... இந்த விளக்கு எரியும். ஃபஸ்ஸி லாஜிக் மைக்ரோப்ராஸஸர் கண்ட் ரோல். ஆறு வாஷிங் ப்ரொக்ராம். பதினெட்டு காம்பினேஷன். அஞ்சு கேஜி துணி போட லாம். ரம்பா வீட்டிலகூட இதே மாடல்தான். உங்க துணிங்களுக்கு தகுந்தாப்பல டைமிங்கை தானே அஜ்ஜஸ்ட் பண்ணிக் கிட்டு முதல்ல, ரின்சிங், வாஷிங், ஸ்பின் ட்ரையிங், பை- டைரக்ஷனல், ரெண்டு டைரக்ஷன்லயும் பண்ணிட்டு, இந்தப் பாருங்க, வெளிய வரப்ப ஏறக்குறைய காஞ்ச நிலைல வரும். எடுத்து ஒரு உதறு உதறிப் போட்டுக்கலாம். அவ்வளவுதான். பட்டன் உடையாது. ப்ரைட்னஸ் போகாது. அதும் "டிஜிட்"னு ஆப்டிக்கல் ப்ரைட்டனர் சேர்த்திங்கன்னா..."

"என்ன விலை?"

"பதினஞ்சாயிரம். கூட ஒரு வால்க்ளாக் கிஃப்ட் தரோம்."

## அம்பு வீசும் நகைச்சுவையாளர்!

பிரபல இத்தாலிய நகைச்சுவை எழுத்தாளர் டாரியோ ஃபோ (Dario Fo)வுக்கு இலக்கியத்துக்கான நோபல் பரிசு கிடைத்திருக்கிறது. நோபல் பரிசு வாங்கும் ஆறாவது இத்தாலியர் இவர்.

எழுத்தாளர் மட்டுமல்ல; தமது நாடகங்களில் இவரே முக்கிய வேடமிட்டு நடிப்பவர். இவரது நடிப்பைச் சர்வதேச விமர்சகர்களும் பாராட்டியிருக்கின்றனர். சான்டிகோ நகரில், ஸ்டேஷன் மாஸ்டர் ஒருவருக்கு மகனாகப் பிறந்த இவர், சின்ன வயதில் உள்ளூரில் இருந்த மீனவர்கள் அளக்கும் கதைகளை எல்லாம் உன்னிப்பாகக் கேட்பாராம்.

நகைச்சுவை எழுத்து என்றால் வாழைப்பழத் தோலில் வழுக்கி விழும் நகைச்சுவையல்ல. வாழைப்பழத்தில் ஊசி ஏற்றும் நகைச்சுவை சிரித்தபடியே அம்பு



வீசும் நகைச்சுவை. எப்போதும் ஏழைகளுக்கும் எளியவர்களுக்கும் ஆதரவாகத்தான் இவர் எழுத்து இருந்து வந்திருக்கிறது. அரசை ரொம்பவும் கிண்டலடித்ததால், இத்தாலியப் பிரதமரின் கோபத்துக்கு அடிக்கடி இலக்காகியிருக்கிறார். ''மிஸ்டேரோ பாஃபோ'' என்ற நாடகத்தில் ''ஏசுவின் நற்செய்திகளுக்குத் தம்மிஷ்டப்படி புதிய அர்த்தம் கூறியதற்காக'' வாடிகனில் உள்ள கத்தோலிக்க தலைமை இவரை எச்சரித்ததுண்டு.

ஏழைகளுக்கு ஆதரவு, அரசுக்கு எதிர் என்றால் கம்யூனிஸ கலர் பூசப்படுவது இயல்புதானே. 'இவர் அதையும்விட ஒரு படி மேலானவர். இடதுசாரி, தீவிரவாத கும்பலைச் சேர்ந்தவர்' என்று காரணம் காட்டி 1980-ல் இவருக்குத் தன் நாட்டில் நுழைய அனுமதி மறுத்தது அமெரிக்க அரசு.

அவ்வளவு ஏன், இவர் அளித்த தொலைக்காட்சி நாடகம் ஒன்றில் மறைமுகமாக அரசைக் கிண்டலடித்து விட்டதற்காகப் பதினான்கு வருடங்கள் இவர் தொலைக்காட்சியில் தோன்றவே கூடாது என்று தடைவிதிக்கப்பட்டது. இப்போது வேறு வழியில்லை. நோபல் பரிசு பெற்ற தங்கள் குடிமகனை சின்னத் திரையில் காட்டியே ஆகவேண்டிய கட்டாயம் இத்தாலிக்கு!

— குல்லூ

சாவித்ரி அந்த விந்தை இயந்திரத்தை அவன் இயக்க ஆர்வத்துடன் பார்த்தாள். அதிலிருந்து ஆரோக்கியமான சப்தங்கள் வர சற்று நடுங்கி விட்டுத்தானே நின்றது. யுவன் விற்பனை விற்பன்னன். தன் டையை தோளில் போட்டுக் கொண்டு முக்கால்வாசி உலர்ந்த பளிச்சென்ற துணிகளை வெளியே எடுக்க, சாவித்ரிக்கு ஹைடெக் யுகத்தில் பிரவேசிப்பதில் பெருமையாக இருந்தது.

சாயங்காலம் சதீஷ் அலுவலகத்திலிருந்து வரத் தாமதமாகி விட்டது. அதற்குள் சாவித்ரி வாஷிங் மெஷினைப் பழகி விட்டாள். வீட்டின் பின் முற்றத்தில் பளபள வென்று எல்லாத் துணிகளும் காற்றில் ஆட அலாவுதின் ஜீனி போல அருகில் நின்றது, மாடல் நம்பர் டிஆர்ஏ 934.

''டெக்னாலஜி இருக்கறப்ப வீட்டு வேலையெல்லாம் பெரிய சுமையே இல்லை சாவித்ரி. சப்பாத்தி மெஷின் வந்துடுத்து, ரெடிமிக்ஸ் இட்லி மாவு வந்துடுத்து, எது வேணும் சொல்லு!''

''எதும் வேணாம். இந்த வாஷிங் மெஷினை விட எனக்கு ஒண்ணுதாங்க பெரிசு.''

''என்ன?'' அருகில் வந்து களைத்துப் போன முகத்தை நிமிர்த்தினான்.

''உங்க அன்புப் பெண்டாட்டி கஷ்டப் படறாளேன்னு பரிவா ஒரு வார்த்தை சொல்றிங்களே, அது போதும்ங்க. எட்டு ஊருக்கு உழைப்பேன்.''

''அன்புக்கு என்ன சாவித்ரி! நமக்கு எத்தனை வருசமாச்சு கல்யாணமாகி?''

''தை வந்தா பதினஞ்சு.''

''இன்னைக்கும் அப்படியே இருக்கே!'' என்று அவள் மூக்கு நுனியை விரலால் தொட்டான் சதீஷ். ''கிவ் மி எ கிஸ்.''

''பாக்கித் துணியை தோச்சுட்டு வந்துர்றேன்!''

சாவித்ரி, உள்ளம் பொங்கி நிறைந்த சந்தோஷத்தோடு வாஷிங் மெஷினில் போடுவதற்குக் கணவன் கழற்றிப் போட்ட சட்டைத் துணியை எடுத்துச் சென்றாள்.

கணவனின் சட்டை என்பதே ஒரு கிறக்கத்தை ஏற்படுத்த, அன்புடன் அதை மோந்து பார்த்தாள்.

முதுகுப் பக்கத்தில் லேசான பர்ஃப்யும் வாசனை. நம் வீட்டில் இந்த வாசனை கிடையாதே!

அட்டையில்(நடிப்பு): **திருமதி ஸ்ரீவித்யா**

வண்ணப்படம்: **உத்ரா**

# நிலா வேட்டை

## 3

**பா. ராகவன்**

திருமங்கை ஆழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம் என்று வெளேரென்று திருமண் தரித்த பட்டாச்சாரியார் சொன்னார். ஆழ்வார், முதல் வி.ஐ.பி. அவருக்குப் பிறகு எத்தனை வி.ஐ.பிக்களைப் பார்த்து விட்டது இந்தக் கோவில்? எம்.ஜி.ஆர், சிவாஜி, ரஜினி, கமல், சத்யராஜ். மேலும், ரசிகனை சீட் ஓரத்துக்கு இழுத்துப் போகிற மலையோர சண்டைக் காட்சிகள். அப்புறம் நூறு சினிமா திருமணங்கள். தாலி கட்டுகிற வேளையில், நிறுத்து என்று அபத்தமாகக் கீழ்ப்படியிலிருந்து அலறிக் கொண்டு வருகிற ஹீரோ அல்லது வில்லன். என்னமோ ஏதோ என்று பதைக்கப் பதைக்க ஷூட்டிங் பார்க்கிற பட்டாச்சாரியார்...

அகிலாவின் கல்யாணத்தை முதலில் ஷூட்டிங் என்றுதான் நினைத்ததாக சந்நிதித் தெருக்காரர்கள் சொன்னார்கள். மஞ்சள் துணி சுற்றப்பட்ட கேமரா எங்கும் கண்ணில் படாததால் தான் அது நிஜ கல்யாணம் என்பது விளங்கி, வியப்புடன் பார்த்திருக்கிறார்கள்.

"யக்கா, இன்னமே நடிக்கமாட்டியா?"

வழி மறித்துக் கேட்ட சிறுவனுக்குப் புன்னகையுடன் தலையாட்டி மறுத்ததைக் குருவியார் பார்த்திருக்கிறார். மறுநாள் தந்தியில் அது பெட்டிச் செய்தியாக ஆனவுடன்தான் பதைத்துப் போய் ரங்காவைக் கூப்பிட்டுக் கொண்டு அகிலாவின் வீட்டுக்கு ஓடினான் ஹரி.

எத்தனை பெரிய மடத்தனம்! தன் படத்து நாயகிக்கு உள்ளூரில் திருமணம் நடந்திருக்கிறது. ஊருக்குத் தெரியாதது பொருட்டல்ல. தனக்குத் தெரிந்திருக்க வேண்டாமா? ப்ரொட்யூசருக்கு? வேறு யாராவது ஒருத்தருக்கு? ம்ஹூம்! அகிலா. எத்தகைய வித்தகியாகச் செயல்பட்டிருக்கிறாள்! ஒட்டுமொத்தமாக ஒரு மாபெரும் கூட்டத்தை முட்டாளாக்குவதற்கு எத்தனை வல்லமை வேண்டும்!

"ப்ரெஸ்ஸுக்கு மட்டும் எப்படி நியூஸ் போச்சாம் ரங்கா?"

"இல்லை ஹரி. எந்த பேப்பரிலும் வரலை; தந்தி தவிர. நல்லது, கெட்டது எது நடந்தாலும் குருவியைக் கூப்பிட்டு சொல்லிடறது சினிமா சம்பிரதாயம். ஸோ, செய்திகளை முந்தித் தந்து விட்டார்கள்."

அகிலா வீட்டில் ஒரு கொசு கூட இல்லை. தமிழ் தெரிந்தும் ஹிந்தியில் பேசிக் கழுத்தறுத்த கூர்க்காவைக் கொஞ்சம் மிரட்டியதில், திருநீர்மலையை மட்டும் அடையாளம் காட்டினான். மேல் விவரங்களுக்கு மலை ஏறிப் போனதில், உபயோகமாக ஒரு தகவல் சிக்கவில்லை; அவள் எந்த நிறத்தில் புடைவை உடுத்தி இருந்தாள் என்பதைத் தவிர.

ஒரு நடிகர், இரண்டு ஒளிப்பதிவாளர்கள், ஒரு நகைக்கடை அதிபருடன் கிசுகிசுக்கப் பட்டு, கடைசியில் யாரோ ஒரு துபாய்க்காரனை மணந்து கொண்டு, விமானம் ஏறிவிட்டாள்.

ஹரி, முகத்தைத் துடைத்துக் கொண்டான். அகிலாவின் மேல் கொலைவெறி உண்டானாலும் ஏனோ அவளை சுயநலக்காரியாக நினைத்துப் பார்க்க முடியவில்லை, அவனால். நடிகைக்குத் திருமணம் என்பது அருட்கொடை. அமைகிறவன் உத்தமனாக இருந்து விடுகிற பட்சத்தில், அவள் ராமன் பாதம்பட்ட அகலிகை ஆகிவிடுகிறாள். படுகிற பாதங்களுக்குக் குறைவில்லை. பெரும்பாலும் யாரும் ராமராகத்தான் இருக்கிறதில்லை.

பகல் முழுக்க அங்கே இங்கே அலைந்து விட்டு, மாலை ப்ரொட்யூசரைப் பார்க்கப் போனபோது, அவர் தலையில் கைவைத்து உட்கார்ந்து இருந்தார். ஹரியைப் பார்த்ததும் சடாரென்று எழுந்து வந்து கையைப் பிடித்தவர், "அவ்ளோதானா?" என்றார் பதைத்து.

"ப்ளீஸ், பதறாதீர்கள். முக்கால்வாசிப் படம் முடிஞ்சாச்சு. இன்னமே, ஹீரோயினை மாத்தறதெல்லாம் நடக்கிற காரியம் இல்லை. சில கேண்டிட் ஷாட்ஸ் தனியா

எடுத்து வெச்சிருக்கேன். ஒரு ஸாங்குக்காக செஞ்சது. அதை வெச்சி, கிளைமாக்ஸை லேசா மாத்தி செட் அப் பண்ணிடலாம். அது கடைசிக் கட்டம். அதுக்கு முன்னால், அவ கொஞ்சம் மனுஷியா இருந்தால், வந்து முடிச்சுட்டுப் போவான்னு நம்பறேன்."

"வரமாட்டாய்யா! எனக்குத் தெரியும்! இவளை மாதிரி எத்தனை பேரைப் பார்த்திருக்கேன்? குடும்பம் ஒரு கோவில்னு அறிக்கை விட்டுட்டுப் போயிடுவாளுக. ஒரு குழந்தையைப் பெத்துட்டு, மூஞ்சியெல்லாம் பொதபொதன்னு ஊதிப் போன அப்புறம் வூட்டுக்காரனோட தகராறு பண்ணிட்டு திரும்பி வந்து, அக்கா வேஷம், அண்ணி வேஷம் போடுவாளுக. அறுவத்தேழுலேருந்து இந்த ஃபீல்டுல இருக்கேன் ஹரி. மனுஷத்தனம் அது. இதுன்னுட்டு நீ டயலாக்ல எளுதிக் குடுத்தீன்னா உணர்ச்சி பொங்கப் படிச்சுட்டுப் பேசுவாள். ஆனா, மனசு காப்பிப் பொடிச் சக்கையாட்டமாத்தான் இருக்கும்..."

பேசிக் கொண்டே வந்தவர், சடாரென்று குலுங்கி அழ ஆரம்பித்ததும் பதறிவிட்டான் ஹரி.

"சார், ப்ளீஸ்... ஒண்ணும் ஆகாது. நான் பார்த்துக்கறேன்."

"மூணு படம்... வரிசையா அடி பட்டுது. தெரியுமில்லை? 'டாஸ் எவ்ளோன்னு நினைக்கறே!' நம்ப மாட்டே. இன்னிய தேதிக்கு,



நான் இருக்கற வீடு ஒண்ணுதான் எனக்குச் சொந்தமா இருக்கு. இந்தப்படம் ஹீரோவை நம்பாம, உன்னை, உன் சப்ஜெக்ட் வேல்யூவை நம்பித் தொடங்கினேன். விதி எப்படி ஆட்டம் போடுது பார். அழாம என்ன செய்யச் சொல்றே?"

சோகத்தின் சதவீதத்தைக் கூட்டி அனுப விக்க அவர் ஸ்பிரிட்டைத் திறந்து பாட்டிலை எடுத்ததும் ஹரி கிளம்பினான்.

"எதுக்கும் சேம்பர்ல ஒரு புகார் குடுத் துடுங்க சார்" என்று போகிறவாக்கில் ரங்க ராஜன் சொன்னது அவர் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. சேம்பர் என்ன செய்யும்? நோட்டீஸ் அனுப்பும். அகிலா அந்தக் காகிதத் தில் கத்திக் கப்பல் செய்து அரபிக் கடலோரம் மிதக்க விட்டு வேடிக்கை பார்ப்பாள்...

விமானம் தாழப் பறக்கிற டிரைடன்ட் டின் மேல்தளம். இருளில் முகம் தொலைத்து, ஹரி உட்கார்ந்து இருந்தான். எதிரே ரங்கா கன்னத்தில் கையூன்றி, அவன் முகம் பார்க்க முயன்றபடி, "பதறிட்டேன் ஹரி, அந்த ஆள் அப்படி அழுதபோது" என்றான்.

"நானும்தான். ஒரு ஆம்பளை அழறது மாதிரி ரசிக்க முடியாத விஷயம் வேறு இல்லை. அழாமல் இருக்கறதுக்கு மட்டு மில்லை; அழறதுக்கும் அபார உறுதி வேண்டும். கொட்டிட்டால், சுமை குறைஞ்சுடும் இல் லையா? ஆனா, எத்தனை பேருக்கு அது சாத் தியம்?"

இவ்வாறு சொல்லிக் கொண்டு இருக்கும் போதே அவன் கண்களில் இருந்து ஒரு துளி இறங்கியது. அவசரமாகத் துடைத்தபோது, "நீயும் அழறியா ஹரி? நம்ப முடியலை!"

"அழுகை வரது. ஆனால், அகிலாவுக்காக இல்லை."

"பின்னே?"

அவன் ஒரு கணம் கண்ணை மூடிக் கொண்டான். அடுத்தடுத்து இரண்டு விக்கெட் டுகள் விழுந்திருக்கின்றன. இரண்டுமே சாதா ரண விஷயம் இல்லை. மேலும் இரண்டு பெண் கள் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். ஒரு சரித்திரத் தின் அடுத்த அத்தியாயத்தை நிர்ணயிக்கப் போகிற பெண்கள்.

ரஞ்சனி. அன்று அறைக்கதவைச் சாத்திக் கொண்டபின் அவனைச் சந்திக்கவில்லை. மறு நாள் அவன் எழுந்து வந்தபோது ரஞ்சனி இல்லை. பிளாஸ்கில் காப்பியும் வெளியே சென்றிருப்பதாக ஒரு குறிப்பும் மட்டும் இருந் தது. அவன் குளித்து முழுகி, ஸ்டூடியோவுக்குப் போய் வேலைகளில் கரைந்து, சட்டென்று மாலை ஞாபகம் வந்து, வீட்டுக்கு போன் செய்த போது ரஞ்சனி சாதாரணமாகத்தான் பேசினாள். "ஸாரி. காலைல கோவிலுக்குப் போயிருந்தேன். மனசு சரியில்லை." ஒரு முள்- நெஞ்சிலோ எங்கேயோ குத்தியது போலிருந் தது.

"ராத்திரி வரலை ரஞ்சனி. நைட் கால்ஷீட் கன்டின்யூ ஆறது."

அவள் பதில் சொல்லவில்லை.

மறுநாள் ரங்காவுடன் மௌரியாவுக்குப் போய் அவசரமாக ஒரு ரூம் போட்டு அங் கேயே குளித்து, சாப்பிட்டு அப்படியே ஷூட் டிங். அன்று இரவும் மறுநாள் இரவும் வேறு வேறு காரணங்கள் சொல்லி வீடு போகாமல் இருந்தது அவனுக்கே அவமானமாக இருந்தது.

எதைத் தவிர்க்க இப்படியொரு பாவ்லா? யாரிடமிருந்து விலக விழைகிறேன்? ரஞ்சனி? அது சாத்தியம்தானா? அப்பட்டமாகத் தான் சிறுமைப்பட்டுப் போவதைத் தனக்குள்ளே கண்டான் அவன்.

"மிஸ்டர் ஹரி, எண்பது சதவீதம் ஆண் களுக்கு மலட்டுத்தன்மை வராது; கிடையாது. மிச்ச பர்ஸன்டேஜும் ஏதாவது ஆக்ஸி டென்ட், தவறான ஆப்பரேஷன் இந்த மாதிரி காரணங்களால் சாத்தியமில்லாமல் போறது தான். உங்கள் கேஸ், வெகு விசித்திரம். பிறவியி லேயே... ஐ'ம் ஸாரி. கால் ஊனம், கை ஊனம்

## பெண்ணாய் வந்த போதி மரம்!

கணவரின் மறைவுக்குப் பிறகு வாழ்க்கையே இருட்டி விட்டது கல்யாணிக்கு. (கணவர் நட ராஜன் மிகச் சிறந்த மிருதங்க வித்வானாகத் திகழ்ந்தவர். டில்லி பல்கலைக்கழக இசைக் கல்லூரியில் மிருதங்க வித்வானாகப் பணி யாற்றியவர்.) இனி தான் வாழ்வதில் அர்த்தமே இல்லை என்று நினைத்தார். தற்கொலைதான் சிறந்த முடிவு என்று தீர்மானித்துக் கொண்ட அவர், யமுனை நதியில் பாய்ந்து உயிரை மாய்த் துக் கொள்ள நினைத்தார்.

அதே சமயம் இன்னொரு பெண்ணும் தம்மைப் போலவே புரண்டோடும் நதி நீரில் கால் வைப்பதைப் பார்த்தார். 'தம் வேதனை யைப் போலத்தான் அவளுடைய வேதனை யுமோ?' என்று யோசித்தார். அவளிடம் பேச வேண்டும் போலிருந்தது. ஓடிப் போய் அந்தப் பெண்ணின் கையைப் பிடித்து நிறுத்தினார். விவரம் கேட்டார்.

''பசிக்கொடுமை! அனாதரவான எனக்கு யாருமே இல்லை; வேலையும் கிடைக்க

வில்லை!'' என்ற வேதனையை, அவள் பெருகிய கண்ணீருக்கிடையே விவரித்த போது கல்யாணி மனம் நெகிழ்ந்தார்.

உடனே தாம் கையில் அணிந்திருந்த ஐந்து பவுன் வளையல்களைக் கழற்றி அந்தப் பெண்ணிடம் கொடுத்தார். ''வித்துக்கோ; பணம் கிடைக் கும்; வயிறார சாப்பிடு'' என்றார்.

''இந்த வளையல்களை விற்றால் எவ்வளவு ரூபாய் கிடைக்கும்?'' அந்தப் பெண் ஆர்வத்துடன் கேட்டாள்.

''என்ன... ஒரு ஐந்தாயிரம் கிடைக்கும்....''

சட்டென்று அந்தப் பெண் இரண்டு ஜோடி வளையல்களைத் திருப்பிக் கொடுத்து விட்டாள். ஒரு ஜோடியை மட்டும் தன்னிடம் வைத்துக் கொண்டாள். ''இதுக்கு சமாரா ஆயிரத்து ஐநூறு ரூபாய் கிடைக்கும் இல்லையா? இதில் ஒரு பசுமாடு வாங்கி, பால் கறந்து ஜீவனம் செய்து கொள்கிறேன்; ரொம்ப நன்றி'' என்று கல்யாணி யின் கால்களில் வீழ்ந்து வணங்கினாள். அந்தப்



× மாதர் சங்க விழாவில்...



• கல்யாணி

பசியிலும் புது வேகத்துடனும், தென்புடனும், உற்சாகத்துடனும் அவள் செய்வதைப் பார்த்துக் கொண்டே இருந்தார் கல்யாணி. தற்கொலை எண்ணம் அடியோடு மறைந்து புது மனுஷி யானார்.

பதினைந்து வருடங்களுக்கு முன்பு நடந்த சம்பவம் இது. தில்லியிலிருந்து தமிழ்நாட்டுக்கு வந்தார் கல்யாணி. தகுதி படைத்த உதவி தேவைப்பட்ட பெண்மணிகள் சிலருக்கு, உதவிகள் செய்தார். அந்தப் பெண்களைக் கொண்டே, 'ஐஸ்வர்யா மாதர் சங்கம்' துவக்கி சமூகப் பணியிலேயே முழு மூச்சுடன் இறங்கி விட்டார்!

— பிரபுசங்கர்

இல்லையா? ஜஸ்ட் லைக் தட், எடுத்துக்கப் பழகிக்கணும். மோர் ஓவர், நீங்கள் படித்தவர். தவிரவும்...''

இடைவிடாமல் காதுகளில் ஒலிக்கிற டாக்டர் மகாதேவனின் குரல்.

ஒரு மருத்துவரால், டேப்ரெக்கார்டர் மாதிரி விஷயத்தைப் பிசிறில்லாமல் கொட்டி விட முடிகிறது. பார்வையில் கனிவும் குரலில் கொஞ்சம் கருணையும் சேர்த்தால், தீர்ந்தது விஷயம். ஃபீஸை வாங்கிக் கொண்டால், அடுத்த பேஷண்ட்.

ஆனால் இதையே ஏன் ரஞ்சனியிடம் விளக்க முடியாமல் தடுமாறுகிறேன்? கரை உடைத்துப் பெருகும் வெள்ளத்தைத் தடுத்து நிறுத்துகிற கரம் எது? தாழ்வு மனப்பான்மை? தனக்கு ஒரு குறை என்பதைக்காட்டிலும் அவளுக்கு அது இல்லை என்கிற உணர்வே தன்னைக் குத்திக் கிழிப்பதாக அவன் நினைத்தான்.

''இது ஒருவித ஸாடிஸ மனப்பான்மையின் தொடக்கம்னு நினைக்கிறேன், ரங்கா.''

தலை குனிந்தபடி சொல்லி முடித்தான் ஹரி.

ரங்கா, பேச்சு மூச்சு அற்று இருந்தான்.

''ஐ'ம் ஸாரி ஹரி. நான் இப்படி ஒண்ணு எதிர்பார்க்கலை. இதான், ஒரு வாரமா நீ சரியா இல்லையா? காட்! போட்டு உளப்பிட்டு இருக்கே! ஒரே ஒரு காரியம் பண்ணு. எவ்ரிதிங் வில் பி ஆல்ரைட்.''

''சொல்லு.''

''போய் உன் மனைவியிடம் பேசு. எல்லாத்தையும். இப்ப உனக்கு வேண்டியது பரிதாப உணர்வோ, ஆறுதலோ இல்லை. வெறும் அரவணைப்பு. உனக்கே தெரியாததில்லை!''

''ப்ச்! முடியலைடா. ஒரு வாரமா வீட்டுக்கே போகலை. இன்னிக்குத்தான் போகப் போறேன். ஆனால், அவள் இருக்கமாட்டாள்.''

''ஏன்?''

''என்னமோ கருத்தரங்கம். கன்யாகுமரி போறா. இப்ப ஆறு மணிக்கோ, ஆறரைக்கோ ரயில் ஏறியிருப்பா.''

''நிறைய தப்பு பண்ணி இருக்காய் ஹரி.''

அவனுக்கே அது நன்றாகத் தெரிந்து இருந்தது. ஒரு வார காலப் புறக்கணிப்பு என்பது யாரும் மன்னிக்கக் கூடியது அல்ல. தவிரவும் ஒரு முன்னை விதைத்துவிட்டுப் போயிருக்கிறான். தனியாக என்ன பாடு பட்டிருப்பாள்? சொல்லியழ ஒரு தோழமை கலந்...

சட்டென்று ஸ்டீபனின் ஞாபகம் கத்தி



"என்னங்க இது, இந்தச் சுடுகாட்டுக்கு அந்த டாக்டர் பெயரை வெச்சிருக்காங்க?"

"இதன் சிறப்புக்கு அவர் நிறைய தன் பங்கைச் செய்திருக்காராம்!"

— வெ. ராஜாராமன்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

போல் இறங்கியது அவனுக்குள். கடவுளே, எல்லாவற்றையும் சொல்லியிருப்பாளா?

"ரங்கா, ஒரு நண்பனிடம் அதிகபட்சம் எத்தனை தூரம் பர்ஸனலா பேசலாம்னு நினைக்கிறாய்?"

"இவ்வளோ தூரம் சொல்லிட்டு இது என்ன கேள்வி?"

"ப்ச். நான் என்னைப் பற்றிச் சொல்லலை. ரஞ்சனி... ஐ'ம் ஸாரி. நீ சொல்லேன்."

"சந்தேகப்படறியா ஹரி?"

அவன் தவித்துக் கொண்டிருந்தான். அடுக்கடுக்காகப் பிழைகள். நிற்காமல் சுழற்றி அடிக்கும் மனப்புயல். இங்கே குழப்பம். அங்கே தயக்கம். கொஞ்சம் வெட்கம். கொஞ்சம் பயம். கதம்ப உணர்ச்சியில் தூக்கலாகத் தெரிகிற கலக்கம். ரஞ்சனி. கனவுப் பயிர் வளர்த்த காரிகை. இனி என்ன செய்யப் போகிறாள் அவள்?

"எதையும் யாரையும் சந்தேகப்பட என்ன இருக்கிறது ரங்கா? இந்த க்ஷணம் எனக்கு நிம்மதி இல்லை என்பதைத் தவிர வேறு எதுவுமே நிஜமில்லை. போறாத குறைக்கு அகிலா."

"ரொம்ப குழப்பிக்கறே ஹரி. பேசாமல் போய், படுத்துத் தூங்கு. நான் வேணா கூட வரவா?"

"வேணாம்டா. நீ வீட்டுக்குப் போ. நான் பார்த்துக்கறேன்."

ரங்காவைத் தேனாம்பேட்டையில் இறக்கி விட்டு, அவன் வீட்டுக்கு வந்தபோது மணி பதினொன்றைத் தாண்டியிருந்தது. ரஞ்சனி, ஊருக்குக் கிளம்பின அவசரம், சோபாவில் சிதறியிருந்த புடைவையிலும் சமையலறையில் சிந்தியிருந்த டிகாக்ஷனிலும் தெரிந்தது. ரஞ்சனி, எதற்கும் வேலைக்காரர்களை வைத்துக் கொள்வதில்லை. காரியங்களில் அவளது செய்நேர்த்தி, கலாபூர்வமானது. "விரலிடுக்கில் ஒரு துளி அழுக்கு இருந்தாலும் அது என்னைச் சிதற அடித்து விடுகிறது ஹரி" என்பாள் அவள். மனத்தில் இப்போது எத்தனை குப்பைக் கூட்டைகள் சேர்ந்திருக்கும்? பொறுக்கித் தள்ளும் விதமாக ஸ்டீபனிடம் கொட்டி இருப்பாளோ?

தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்த போது, போன் அடித்தது. ப்ரொபஸர்.

"அவ இன்னும் துபாய் போகலையப்பா! இங்கதான் காஷ்மீர், ஜெய்ப்பூர்னு சுத்தப் போயிருக்காளாம். விசாரிச்சுட்டேன். உடனே கிளம்பு. போயி இழுத்துட்டு வந்துடலாம்."

நினைத்து நினைத்துக் கவலைப்பட என்னென்ன பிரச்னைகள்! கிளம்பும்போது தண்ணியடிக்க உட்கார்ந்தவர், மயங்கிப் படுத்து விடவில்லை. என்னவோ குரங்கு வேலை செய்து அகிலா சென்ற பாதையைப் பிடித்திருக்கிறார். பணம் போட்டவரின் பிரத்தியேகக் கவலைகள். பாவம், அறுபது வயதில் இப்படி ஒரு குட்டி நடிகைக்காக ராத்தூக்கம் இழந்து, புலம்ப வேண்டி நேர்ந்து விட்டது.

"காலைல வரேன் சார்."

போனை வைத்து விட்டு, அடுத்தது என்ன என்று யோசித்தான். ஜெய்ப்பூரோ, காஷ்மீரோ, தேவலோகமோ. அகிலாவைத் துரத்திப் போய் பிடித்துவர எத்தனை நாட்கள் ஆகும் என்று தெரியவில்லை. ரஞ்சனி என்று திரும்புகிறாள்? கேட்டுக் கொள்ளவில்லை. கிளம்புவதை போனில் சொன்னவளிடம் அன்பாக ஒரு சொல் கூடப் பேசவில்லை. ஒரு வாரமாக சாப்பிட்டாளா, தூங்கினாளா - எதுவும் கேட்கவில்லை. சட்டென்று எப்படி அப்படி விலகி ஓடி விட்டேன்? அவனுக்கு அவமானம் பிடுங்கித் தின்றது. அவள் திரும்பி வந்ததும் உட்கார்ந்து பேச வேண்டும். நடந்து கொண்ட விதத்துக்கு மன்னிப்புக் கேட்க வேண்டும். அவளுக்குத்தான் யார் இருக்கிறார்கள், தன்னைத் தவிர? மேலும் அவள் தன்னைப் புரிந்து கொள்ளக் கூடும். ரங்கா குறிப்பிட்ட அரவணைப்பு ஒருவேளை, கவுட சாத்தியமாகலாம். எப்போது வருகிறாள் ரஞ்சனி?

அவன் ஒரு முடிவுக்கு வந்து ஸ்டீபன் வீட்டுக்கு போன் செய்தான். அவனுக்குக் கட்டாயம் தெரிந்திருக்கும்.

தூக்கக் கலக்கத்தில் போனை எடுத்தது ஸ்டீபனின் அம்மா.

"ஸ்டீபன் இல்லியே? நாகர்கோவில் போறதா சொல்லிட்டுப் போனான். வர நாலு நாள் ஆகும். நீங்க சௌக்கியமா? வெச்சிடவா?"

'ஸாரி ஹரி. நான் போறதா இல்லை. அநேகமா ஜெய்ப்பூர் போக வேண்டி இருக்கும்.'

- துல்லியமாகக் காதில் ஒலிக்கிற ஸ்டீபனின் குரல்.

சுரீலென்று வயிற்றில் ஒரு பய உணர்ச்சி மோதித் தள்ளியது.

ஸ்டீபன் உடன்வருவதை ரஞ்சனி ஏன் சொல்லவில்லை?

(தொடரும்)

# நான் வில்லன் அல்லே!

## 13

ஃபேண்ட் போட்டு எம்.ஜி.ஆரால ஆக்ட் பண்ண முடியாதுன்னு ஒரு பேச்சு ஒரு காலத்தில இருந்தது. ஏதோ வேஷ்டி கட்டினா அதுக்குத் தனியா ஒரு ஆக்டிங், பேண்ட் போட்டா தனி ஆக்டிங்னு இருக்கறாப்பல எண்ணம். அப்படி மத்தவங்க நினைச்சிக்கிட்டிருந்த சமயத்தில தான் ஏ.எல்.எஸ். ஒரு படம் எடுத்தார். திருடாதே! அந்தப் படத்தோட டைரக்டர் நீலகண்டன். அமோகமாக படம் ஓடி பெரிய வெற்றியைப் பெற்ற படம். பேண்ட் போட்டு எம்.ஜி.ஆரால நடிக்க முடியும்னு நிருபிச்ச படம் அது.

அதுல எனக்கும் அவருக்கும் ஒரு ஃபைட் ஸீன்ல அவரு ஒரு குத்துக் குத்துவார். என்னோட முகம் உடைஞ்சி போயிடும். உடைஞ்சி போயிடும்னா என் முகத்து மேல வேற ஒரு மேக்கப் போட்டு இருப்பேன். அது உடைஞ்சி என் உண்மையான மூஞ்சி தெரிஞ்சி போயிடும். நான் உடனே அங்கேயிருந்து ஓடிப் போய் படிக்கட்டு கிழே ஒளிஞ்சிக்குவேன். எம்.ஜி.ஆர். மெதுவா படிக்கட்டுல இறங்கி வருவார். இப்படி சீன் போவும்.

அந்த ஃபைட்டிங் ரொம்ப புதுமையா எடுத்திருந்தாங்க. அப்ப அதுதான் பேச்சு. அதை ஜனங்க எப்படி ரசிக்கிறாங்கன்னு பாக்கறதுக்காக நான், எம்.ஜி.ஆர், நீலகண்டன் மூணு பேரும் ஒரு தியேட்டர்ல போயி அந்த சண்டை சீனை மட்டும் பாத்துட்டுத் திரும்பிட்டோம்.

அப்ப அந்த சீன்ல நான் படிக்கட்டுக்குக் கிழே ஒளிஞ்சிருக்க, எம்.ஜி.ஆர். மெதுவா இறங்கி வர்றார் இல்லியா? அப்ப தியேட்டர்ல ரசிகர்கள் சொல்றாங்க. "இறங்காதீங்க... இறங்காதீங்க... கிழே நம்பியார் இருக்காரு, உங்க காலை பிடிச்சி இழுத்திடுவாரு."

அதாவது படத்தில வர எம்.ஜி.ஆரை ரசிகர்கள் எச்சரிக்கிறாங்களாம். அவருக்கு எதுவும் ஆயிடக் கூடாதுன்னு. படம் ஸ்கிரீன்னு கூட நினைப்பில்லாம அவர் மேல எவ்வளவு இன்வால்வ்மென்ட் பாருங்க. நான் ஆச்சரியப்பட்டேன்.

அப்புறமா சின்னப்பாதேவர் எம்.ஜி.ஆரை வச்சி பல படங்கள் எடுத்தார். எல்லாமே எம்.ஜி.ஆர் பேண்ட் போட்டு• அமர்க்களமா நடிச்ச படங்கதான்.

பேண்ட் தொளதொளான்னு இருந்தாலும், அதுவே அப்புறமா எம்.ஜி.ஆர். ஸ்டைல்னு எல்லாரும் கன்னா பின்னான்னு போட ஆரம்பிச்சாங்க.

யாருக்கு பேண்ட் போட்டு நடிக்க வராதுன்னு சொன்னாங்களோ, அவரு ஸ்டைலுன்னே ஒண்ணு உருவாச்சி- அதைச் சொல்றதுக்காகத்தான் இதைச் சொன்னேன்.

எம்.ஜி.ஆர். முதலமைச்சரா ஆவதற்கு முன்னாடி மதுரையை மீட்ட சுந்தர பாண்டியன், மீனவ நண்பன் ஆகிய ரெண்டு படங்கள்ல நடிச்சார். ரெண்டிலேயும் நான் இருந்தேன்.

மைசூர்ல தலைக் காவேரியில ஷூட்டிங். அது ஒரு ஏப்ரல் மாசம். நான் எப்பவுமே சம்மர்ல ஊட்டி போவேன்னு சொல்லியிருக்கேன் இல்லியா? அதனால என் மனைவி, 'ஏங்க, அங்கேயிருந்து திரும்பவும் மெட்ராஸ் திரும்பி அப்புறமா ஊட்டிக்குப் போறதைக் காட்டிலும், ஷூட்டிங் முடிஞ்சவுடனே அப்படியே அங்கிருந்து ஊட்டி போயிடலாம். என்ன சொல்றீங்க?'ன்னு கேட்டாங்க.

நல்ல ஐடியா, அப்படியே செய்யலாம்னு முடிவு பண்ணோம்.

கம்பெனியில கொஞ்சம் பணம் கொடுங்கன்னு கேட்டேன்.

'அங்கே வந்து தர்றோம்'னு சொன்னாங்க.

ஷூட்டிங் முடிஞ்சு ஊட்டி போறப்போ மறுபடியும் கம்பெனிக்காரங்ககிட்ட பணம் கேட்டேன்.

'இப்ப கையில பணம் இல்லே. அப்புறமா தர்றோம்'னு சொல்லிட்டாங்க. நானும் சரின்னு விட்டுட்டேன்.

நான் பணம் கேட்டதை எம்.ஜி.ஆர். தூர இருந்து பாத்துட்டு இருந்தார்.

கொஞ்ச நேரம் கழிச்சி எங்கிட்டே வந்து



• உலகம் சுற்றும் வாலிபன் படத்தில் எம்.ஜி.ஆருடன்...

ஊட்டிக்குப் போய்த் திரும்பி, பணத்தைத் திருப்பிக் கொடுக்கறதுக்காக எம்.ஜி.ஆரைப் பார்க்கப் போனேன்.

அதுக்குள்ள அவர் தமிழ்நாட்டின் முதலமைச்சரா ஆயிருந்தார்.

அவரு ஆபீசுக்குப் போனேன்.

அவருக்கு என் வாழ்த்துகளைச் சொன்னேன். ஐயாயிரம் ரூபாயை எடுத்து நீட்டினேன்.

"என்ன இது?"

"உங்ககிட்ட ஐயாயிரம் ரூபாய் வாங்கியிருந்தேன் இல்லியா... அதை இருப்பிக் கொடுக்கத்தான் வந்தேன்."

"ஓஹோ... அந்த அளவு சீரியஸா இருக்கீங்களோ, பணத்தை திருப்பிக் கொடுக்க"ன்னு கேட்டார். "அப்படீன்னா நான் கூடத்தான் உங்களுக்கு எவ்வளவோ பணம் திருப்பிக் கொடுக்கணும்; தெரியுமா?"

எனக்குப் புரியலே. அவரே சொன்னார்:

"உங்க வீட்ல நான் எவ்வளவு தடவை சாப்பிட்டிருப்பேன். அதெல்லாம் கணக்குப் போட்டா நான் எவ்வளவோ கொடுக்கணும்?"

"அதையும் இதையும் கம்பேர் பண்ணாதீங்க"ன்னு நான் சொன்னேன்.

"சரி, உலகம் சுற்றும் வாலிபன் படத்தில நடிச்சீங்க. ஆனா அதுக்குச் சம்பளமே வாங்கிக்கலியே, அதை நான் கொடுக்க வாணாமா?"

"அந்தப் படத்தோட வெற்றிதான் எனக்குச் சம்பளம்"னு சொல்லி நான் சிரிச்சேன்.

"இப்படி ஒவ்வொருத்தருமே சொல்லிட்டா என்ன ஆகும்?"

"உங்களுக்கு நிறைய பணம் மிச்சம் ஆவும்" என்று நான் சொல்லவும் அவரும் சேர்ந்து சிரிச்சிட்டார்.

"நான் ஏன் அந்தப் படத்துக்குச் சம்பளம் வாங்கலே, தெரியுமா?"ன்னு நான் மறுபடியும் ஆரம்பிச்சேன்.

"ஏன், ஏன்?"

"உங்களைக் கஷ்டப்படுத்தாம, ஆனா அதே சமயம் பழிவாங்கணும்னு ஆசைப்பட்டேன். அதுக்காகத்தான்!"

அவருக்கு ஒண்ணும் புரியல்ல.

"ஆமா, 'இவன் நம்மகிட்ட பணம் வாங்காம இருக்கான். நாம குடுக்க வேண்டி

பத்தாயிரம் ரூபாய் பணத்தை எடுத்து நீட்டினார்.

"என்னங்க இது?"

"கம்பெனியில நீங்க பணம் கேட்டப்ப அவங்க இல்லேன்னு சொல்லிட்டாங்களாமே. அதான் நான் தர்றேன்!"

"இது என்ன உங்க கம்பெனியா?"ன்னு நான் அவரைக் கேட்டேன்.

"யோவ்... அவங்க தரல்ல... நான் தர்றேன்... வாங்கிக்க வேண்டியதுதானே..."

"உங்ககிட்ட வாங்கினா திருப்பித் தரணும்... அவங்ககிட்ட வாங்கினா அது என் சம்பளம். திருப்ப வேணாம். அதான் கேட்டேன்!"

"திருப்பிக் கொடுக்கணும்னு நான் சொன்னேனா?" அப்படீன்னார் எம்.ஜி.ஆர்.

"நான் திருப்பிக் கொடுப்பேன். நீங்க வாங்கிக்கறதா இருந்தா மட்டுமே நான் இப்ப உங்ககிட்ட இருந்து பணம் வாங்கிப்பேன். அதுவும் எனக்குப் பத்தாயிரம் தேவையில்லை. ஐயாயிரம் ரூபாய் போதும்."

அப்படி அவர்கிட்ட பணம் வாங்கி, நாங்க

## எம். என். நம்பியார்

யிருக்கு'ன்னு ஒரு எண்ணம் உங்ககிட்ட இருந்துக்கிட்டே இருக்குமில்லையா? அப்படியே இருக்கட்டும். அதுதான் நான் உங்களை வாங்கப்போற புதுமையான பழி."

இப்படி பேசிக்கிட்டிருந்தோம். கிளம்பும் போது எம்.ஜி.ஆர். சொன்னார்:

"சரி... உலகம் சுற்றும் வாலிபனுக்குப் பணம் வாங்க மாட்டேங்கறீங்க. ஓ.கே. இப்ப நான் வசதியா நல்லா இருக்கேன். உங்களுக்கு எப்ப எவ்வளவு பணம் வேணுமின்னாலும் தயங்காம எங்கிட்ட கேக்கணும் சரியா?"

"ரொம்ப தேங்க்ஸ். அதே சமயம் உங்ககிட்ட வந்து நான் பணம் கேக்கற நிலை எனக்கு ஏற்படக் கூடாதுன்னு நீங்க வேண்டிக்குங்க. என்ன சரியா?"ன்னு நானும் பதிலுக்குச் சொல்லிட்டு வந்துட்டேன்.

என்னோட மகன் மோகன் ஒரு தரம் என்னைக் கேட்டான்: "ஏம்பா... நீங்க ஒருத்தர்தான் எம்.ஜி.ஆர்கிட்ட போய் எந்த உதவியும் கேக்காம இருக்கீங்க. அவரோட பழகினவங்க எல்லாருமே அவரால ஏதாவது ஒரு வகையில பலன் அடையறாங்க."

"நீ சொல்றது சரி. அப்படி எதுவுமே கேக்காம இருக்கறதனாலதான் அவரோட



''கண்ணா, 'ஸ்போக்கன் இங்கிலீஸ்' கத்துக்கறியாமே? மாமாகிட்ட கொஞ்சம் பேசேன்.''

"ஸ்டுபிட் ஆஃப் தி இடியட். கெட் அவுட்!''

— க. சரவணகுமார்

பழகினவங்கள்ல என்னால தலை நிமிர்ந்து நிக்க முடியுது. நம்ம பணம்தான் அவருகிட்ட இருக்கு'ன்னு சொல்லிட்டு. அப்பத்தான் என் மகன்கிட்ட உலகம் சுற்றும் வாலிபனுக்கு நான் பணம் வாங்காத கதையைச் சொன்னேன். "அதனால நீயும் கூட தலை நிமிர்ந்து நிக்கலாம்"ன்னேன். அவனுக்கும் சந்தோஷமா இருந்தது.

கொஞ்சநாள் கழிச்சி எங்கிட்ட ஒரு எம்.எல்.ஏ. வந்தார். ஒரு புராஜக்ட்- என்ன அதுன்னு சரியா இப்ப ஞாபகமில்ல... அதைப் பத்தி சொல்லிட்டு, "ஸார்... நீங்கதான் தலைவர்கிட்ட ஒரு வார்த்தை சொல்லணும். சொன்னா உடனே முடிஞ்சிடும்"னு கேட்டார்.

"நான் இதுக்கெல்லாம் போற டைப் இல்லீங்க... என்னை இதில் ஏன் சம்பந்தப்படுத்தறீங்க?"ன்னு கேட்டேன்.

"சும்மா செய்யணும்னு இல்ல. ஒரு வார்த்தை எம்.ஜி.ஆர்.கிட்ட சொன்னா போதும். புராஜக்ட் கிளியர் ஆனதும் நாலஞ்சி லட்ச ரூபா உங்களுக்கு வரும். உட்கார்ந்த இடத்தில் இருந்தே சம்பாதிக்கலாம்."

"அப்படியா சமாசாரம்? ஒண்ணு செய்யுங்களேன். எம்.ஜி.ஆராடே சம்பந்தி ஒருத்தர் இருக்கார். டைரக்டர் சங்கர். பெரிய குடும்பஸ்தன். அவருக்கு இந்த வாய்ப்பைக் குடுங்களேன்" அப்படீன்னு நான் சொன்னேன்.

"இல்லீங்க. நீங்க சொன்னாத்தான் செய்வேன்னு..." வந்தவர் இழுத்தார்.

எனக்கு 'பளிச்'சினு விஷயம் புரிஞ்சு போச்சு.

"உண்மையைச் சொல்லுங்க. யார் இந்த ஐடியா குடுத்து எங்கிட்ட உங்களை அனுப்பினது?"

தயங்கியபடியே... "இல்லீங்க... தலைவர் தான்!"

எனக்கு எப்படியும் ஏதாவது பணம் கொடுக்கணும். இல்லாட்டி எந்த வழியிலயாவது என்னை அவர்கிட்ட இருந்து பணம் வாங்க வைக்கணும்னு எம்.ஜி.ஆரே இப்படி ஒரு ஐடியா பண்ணியிருந்தார். இந்த ஒரு விஷயத்துல அவரால என்னை ஜெயிக்க முடியல்ல.

இந்த மாதிரியெல்லாம் உரிமையா எம்.ஜி.ஆரோட பழகற வாய்ப்புக் கிடைச்சதுக்கு நான் காலமெல்லாம் கடவுளுக்கு நன்றி சொல்லிக்கிட்டே இருக்கணும்.

சினிமாவில மினிமம் கியாரண்டி, மேக்ஸிமம் கியாரண்டின்னு ரெண்டு உண்டு. எம்.ஜி.ஆரைப் போட்டு படம் எடுத்தா எப்பவுமே மேக்ஸிமம் கியாரண்டிதான். அப்படியே படம் நல்லா போகாம போனாலும் மினிமம் கியாரண்டிக்குப் பழுதிருக்காது. இதில பொருத்தம் என்னன்னா ரெண்டு கியாரண்டியையும் இங்கிலீஷ்ல சொல்லிப் பாத்தீங்கன்னா ரெண்டிலேயும் எம்.ஜி.ன்னு வரும்.

ஒரு மனுஷனுக்கு எந்த அளவு அதிகபட்சம் அதிர்ஷ்டம் வர முடியும்னு நான் எம்.ஜி.ஆர்கிட்டதான் பார்த்தேன். இன்

னொருத்தரா இருந்திருந்தா அந்த அதிர்ஷ்டத்தை அவரோட தலை தாங்கியிருக்காது. பரமசிவன் தலையில கங்கை எப்படி ஒரு மூலையில சாதுவா உட்கார்ந்திருக்கிற மாதிரி அவ்வளவு அதிர்ஷ்டத்தையும் அவரு சர்வ சாதாரணமா தாங்கிட்டார்.

ஒரு தனி மனிதனுக்காக- அவரோட சிகிச்சைக்காக ஒரு ஜம்போ ஜெட் விமானத்தையே படுக்கை அறையா மாத்தி அனுப்ப சென்ட்ரல் கவர்ன்மெண்ட் முடிவெடுத்தது வேறு யார் ஜாதகத்திலயாவது உண்டா? எம்.ஜி.ஆருக்கு மட்டும்தான் அது நடந்தது!

அவருக்கு அகில இந்திய உள்ளம். குறுகிய மாநில உள்ளம் இல்ல.

அப்படிப்பட்டவர் தம் வாழ்க்கையில கடைசி மூணு வருஷம் அனுபவிச்ச வேதனை இருக்கே, அது சொல்லி முடியாது. சொர்க்கம், நரகம் ரெண்டையும் ஒரு மனுஷன் உயிரோட இருக்கிறப்பவே அனுபவிச்சார்னா அது எம்.ஜி.ஆராத்தான் இருக்க முடியும்னு நான் நினைக்கிறேன்.

கடைசி காலத்தில தமக்கு வேண்டாதவங்களை எல்லாம் கூட அட்ஜெஸ்ட் பண்ணிக்கிட்டு போக வேண்டிய நரக வேதனையை அவர் அனுபவிச்சார். எனக்கு நல்லா தெரியும்.

செத்துப் போறதுக்கு சில வாரங்கள் முன்னாடி நான் அவரைப் போய்ப் பார்த்தேன். முக்கால் மணி நேரம் என்னோட பேசினார். அவர் பேசினதில ஒரு வார்த்தைக்கூட எனக்குப் புரியலே. அப்ப நான் மனசுக்குள்ளே அழுதேன். எப்படி வாழ்ந்தவருக்கு இப்படி ஒரு நிலையா?

அவருக்கு நேரமாயிட்டுதுன்னு நினைக்கிறேன். 'அப்புறம்'னு இழுத்தார். அந்த ஒரு வார்த்தைதான் எனக்குப் புரிந்தது. என்ன கொடுமை அது?

எம்.ஜி.ஆர் போல ஜனங்களைக் கவர்ந்தவங்க-இனிமேல்தான் பிறக்கணும்.

சினிமாங்கற மீடியத்தை அவரு அவ்வளவு அற்புதமாகக் கையாண்டார்.

ரெண்டே ரெண்டு உதாரணம் சொல்லி எம்.ஜி.ஆர். பத்திய என் நினைவுகளை முடிச்சிக்கலாம்னு நினைக்கிறேன்.

கோடம்பாக்கம் மேம்பாலம் இல்லாம இருந்த காலத்தில ஒரு நாள், நான் பகல் சாப்பாட்டுக்கு வீட்டுக்கு வந்து திரும்பிப் போற வழியில, அங்கே ரயில்வே கேட் மூடியிருந்தது.

ஒரு நாலு பசங்க- செக்கச் செவேல்னு- அட, நான் அவங்க உடம்பைச் சொல்லலீங்க- அவங்க கண்ணைச் சொன்னேன். நல்ல 'மப்பு'ல இருந்தாங்க. என் கார்கிட்ட வந்து நின்னாங்க.

''நீங்கதானே எங்க அண்ணனை அடிச்சது?''ன்னு ஒருத்தன் ஆரம்பிச்சான்.

''நீங்கல்லாம் யாருன்னே எனக்குத் தெரியாதே. உங்க அண்ணன் யாருன்னும் தெரியாது''ன்னேன்.

''எங்க வீட்டுப் பிள்ளை'யில எங்க அண்ணனை அடிச்சது நீங்கதானே?''ன்னு அவங்க கேட்டப்புறம்தான் ஓஹோ... இவங்க எம்.ஜி.ஆர். ஃபேன்ஸ்னு தெரிஞ்சது.

''அதுக்குதானேப்பா எனக்குக் காசு குடுக்கறாங்க?''

''காசு குடுத்தா?... காசு குடுத்தா அவரை அடிச்சிடுவியா நீ?'' அப்படீன்னு ஆவேசமா சொன்னான் இன்னொருத்தன்.

''அவருகூடத்தான் என்னை அடிச்சாரு... அதுக்கென்ன சொல்றீங்க?''

''உன்னை அடிக்கணும்யா... அதுக்காக?''

ஒண்ணு தெரிஞ்சு போச்சு. ''நாம சும்மா இங்க வார்த்தையை வளர்த்துக்கிட்டே போனா அவங்க ரொம்ப சூடு ஆயிடுவாங்க. அட்ஜஸ்ட் பண்ணிக்கிட்டு காரை கிளப்ப வேண்டியதுதான்.''

''இப்ப என்ன செய்யணும்... சொல்லுங்க''ன்னேன்.

''எங்க அண்ணனை இனிமே அடிக்கக் கூடாது.''

''அவ்வளவுதானே... சரி... அடிக்கல்லே... திருப்திதானே?''

''நமஸ்காரம் ஸார். போயிட்டுவாங்க. நம்பியாருக்கு ஜே!''

(தொடரும்)

**பிந்து 1**

**பிந்து 2**

**பிந்து 3**

**இவைதான் அடுத்த வாரம்**

**பிரபஞ்சன் எழுதும்**

**ஒன்... டூ... த்ரீ...**

**கதைகள்**



## கல்கி கன்ஸல்டன்ஸி

# கிரைஸில் வைத்த குட்டு!

முதலீட்டாளர்களுக்குக் கலக்கம் ஏற்படுத்தக்கூடிய ஒரு செய்தி சென்ற வாரம் வெளியாகியிருக்கிறது : பதினான்கு என்.பி. எஃப்சிக்கள் (Non Banking Finance Companies) கிரைஸில் அமைப்பிடம் சின்னதாகக் குட்டு வாங்கியிருக்கின்றன என்கிற செய்தி!

கடந்த சில ஆண்டுகளாகவே பங்கு மார்க்கெட் தூங்கி வழிவதால் பணத்தை வங்கிகள் அல்லாத நிதி நிறுவனங்களில் முதலீடு செய்து வந்தனர் பொதுமக்கள். கிரைஸில் (Credit Rating Information Services of India Limited) அமைப்பு இந்த நிதி நிறுவனங்களின் அந்தஸ்தையும் பாதுகாப்புத் தன்மையையும் நடுநிலையுடன் கணித்து, சான்றிதழ் வழங்கி வருகிறது. பள்ளிப் பிள்ளைகளுக்கு 'ரேங்க்' போடுவது போல் நிதி நிறுவனங்களுக்கும் ரேங்க் உண்டு. சமீபத்திய கணிப்புக்குப் பிறகு பதினான்கு நிறுவனங்கள், ஏற்கெனவே உள்ள நிலையிலிருந்து அடுத்த கீழ் நிலைக்கு இறக்கப்பட்டிருக்கின்றன. இவற்றுள் சென்னையைச் சேர்ந்த சில நிறுவனங்களும் அடக்கம்.

உடனே இந்த நிறுவனங்களெல்லாம் திவாலாகிற அபாயத்தில் உள்ளன என்று முடிவு கட்டிவிடக் கூடாது. எனினும் இந்த நிறுவனங்கள் முறைப்படி வாடிக்கையாளர்களின் பாக்கியைத் திரும்பத் தர திணறுகின்றன என்று கிரைஸில் மதிப்பிட்டிருக்கிறது. அவற்றை depromote செய்ததற்கான காரணமும் இதுவே.

பெரும்பாலான நிதி நிறுவனங்கள் லாரி கம்பெனிகளுக்குக் கடன் அளித்து வந்தன. அவற்றின் முக்கிய வர்த்தகமே தவணையில் லாரி வாங்கக் கடனுதவி செய்வதுதான்.

பொருளாதார தேக்க நிலை காரணமாக லாரி கம்பெனிகளின் இயக்கம் மந்தமாகியிருக்கிறது. அதன் தொடர்ச்சியாக நிதி நிறுவனங்களுக்கும் பணப்புழக்கம் குறைந்து போயிருக்கிறது. இதனால்தான் பொதுமக்களின் டெபாஸிட்களை உரிய காலத்தில் திருப்பித் தர அவை திணறுகின்றன.

ஒருசில நிறுவனங்கள் தங்களை 'இறக்கி வைத்ததற்காக' கிரைஸில் அமைப்பைச் சாடுகின்றன. ஆனால் அந்தச் சாடுதலில் நியாயம் இல்லை. கொஞ்சம் சுயபரிசோதனை செய்து அவை தங்கள் இயக்கத்தைத் திருத்திக் கொள்ளலாம்.

முதலீட்டாளர்களுக்கு ஒரு உபயோகமான குறிப்பு : எவ்வளவுதான் பிரபலமான நிதி நிறுவனமானாலும் அதன் பின்பலமாக ஒரு தொழில் நிறுவனம் உள்ளதா என்பதை மட்டும் பார்த்துக் கொள்ளுங்கள். அப்படி இருக்கிற நிறுவனத்தில் முதலீடு செய்வது பாதுகாப்பானது. இந்தப் பின்பலம் இல்லாத நிதி நிறுவனங்கள் என்னதான் பிரபலமாயிருந்தாலும், விளம்பரப்படுத்தினாலும் அவற்றின் ஸ்திரத்தன்மை கொஞ்சம் சந்தேகத்துக்குரியதுதான்.

உலகச் சந்தையில் பங்கு மார்க்கெட் ஆட்டம் கண்டு, ஷேர் விலைகள் கிடுகிடுவென்று சரிந்த செய்தியை அறிவீர்கள். இந்த நிகழ்ச்சி நடந்த தினத்தை 'கறுப்பு நாள்' என்று ஸ்டாக் மார்க்கெட் வட்டாரங்களில் அழைக்கிறார்கள். பத்து ஆண்டுகளுக்கு முன்பு இதே அக்டோபர் மாதத்தில் (அக்டோபர் 20, 1987) இதே போன்ற சரிவு நிகழ்ந்தது. ஆனால் அப்போதைய சரிவினால் இந்தியப் பங்குச் சந்தை பாதிப்புக்குள்ளாகவில்லை. இந்த முறையோ, உலகச் சந்தை பூகம்பத்தின் எதிரொலி இங்கும் கேட்டிருக்கிறது. ஷேர் விலைகள் பத்து முதல் பதினைந்து சதவிகிதம் வரை குறைந்து போய் பெரிய நஷ்டத்தை ஏற்படுத்தியிருக்கிறது.

இந்த உலகளாவிய பொருளாதாரச் சிக்கலுக்கு என்ன அடிப்படைக் காரணம் என்பதை அடுத்த வாரம் சொல்கிறேன்.

— வி. கோபாலன்

# மன்மத அழைப்பு

ஆயிரம் கோடிக் கவிதைகள் உன்றன்
பார்வையில் பிறக்கிறது! - நீ
அரை நொடி சிரிக்கும் புன்னகையோ அதன்
அர்த்தம் விரிக்கிறது!

தேரென நீயும் ஊர்வலம் வருகையில்
தெருவே சிலிர்க்கிறது! - உன்
சின்னச் சின்ன மின்னல் அசைவோ
சரித்திரம் படைக்கிறது!

கூந்தலை விரல்கள் கோதும் அழகு!
கோடி கொடுத்திடலாம்! - ஆ!
காந்தக் கவர்ச்சிக்கே ஒரு காவியம்
பாடி முடித்திடலாம்!

ஏங்கும் தனிமையில் எத்தனை நாட்கள்
இளைத்துக் கிடப்பேன்நான்! - அடி!
என்னவளே! வாஎன் அருகே! உனை
இணைத்துச் சிறப்பேன்நான்!

அம்புகள் தைத்த இடங்களைஎல்லாம்
அன்பால் ஒற்றிஎடு! - நான்
அற்புத இளமை அரங்கில் சிறக்க
இன்றே வெற்றிகொடு!

அமுதும்விடமும் அனலும் புனலும்
அமைந்த சங்கமமே! - என்
அங்கம் முழுதும் வைப்பாய் உன்றன்
நெற்றிக் குங்குமமே!

— மதிவண்ணன்



# பாமரனுக்கொரு சட்டம்; பணக்காரனுக்கொரு சட்டமா?

●● 'ஜாதி இரண்டொழிய வேறில்லை' என்று முழங்கிய தமிழ் மண்ணில் இன்று சாதிய வெறி தலைவிரித்தாடுகிறது. 10.8.97 ஞாயிறன்று கோவையில் ஜான்பாண்டியன் ஒரு கூட்டத்தைக் கூட்டியிருந்தார். அதற்காக, தற்போது சாதித் தீ கொழுந்து விட்டெரியும் தென் மாவட்டங்களிலிருந்து ஏராளமான தொண்டர்கள் வாகனங்களில் வந்தனர். அவர்கள் செல்லும் வழியிலுள்ள உடுமலை (கோவையிலிருந்து சுமார் 70 கி.மீ) நகரில் கடைகளை அடைக்கச் சொல்லி வற்புறுத்தியது காவல் துறை. கலவரம் ஏதும் நடக்காமலிருக்க முன்னெச்சரிக்கையாம். கேரள நீதிமன்றம் 'பந்த்'தைத் தடை செய்திருக்கும் இந்த நேரத்தில் ஒரு தனி மனிதருக்காகக் கிட்டத்தட்ட ஒரு 'பந்த்'தை நடத்தியது காவல் துறையின் கையாலாகாத்தனமா! அரசியல் சதுரங்கமா! புரியவில்லை.

உடுமலை, இ. கபாகரன்.

●● அதிகமாக சம்பாதிக்கும் கவுண்டமணி - செந்தில்கூட வருமான வரி பாக்கி வைத்துள்ளனர். பூ ஒன்று புயலானது வைஜெயந்தி ஐ.பி.எஸ் என அநீதியை எதிர்க்கும் விஜயசாந்தியும், ஜெய்ஹிந்த், தாயின் மணிக் கொடி, செங்கோட்டையென தேச பக்தியை வியாபாரமாக்கும் அர்ஜுனும், மூன்று முறை தேசிய விருது பெற்ற கமல்ஹாசனும், சுய முன்னேற்றத் தொடர் எழுதும் கே. பாக்யராஜும் கூட பாக்கி வைத்திருப்பது ஆச்சரியமான அதிர்ச்சி. கேட்டால், வருமான வரி கணக்கில் பிரச்சனையிருக்கிறது. அதனால்தான் வரியை கட்டாமலிருக்கிறோம்' என்று பல வருஷமாகச் சொல்கிறார்கள். பாமரனிடம் ஜப்தி பண்ணுவதில் காட்டும் வேகத்தை பணக்காரரிடம் காட்ட அரசு தயங்குவது ஏன்? வருமான வரி பாக்கி வைத்திருப்பவர்களின் படங்களுக்கு அரசு விருதுகளோ, மான்யமோ, வரி விலக்கோ, ஏன்... சென்சார் சர்டிபிகேட் கூடத் தரக் கூடாது. - இதை சட்டமாக்குவார்களா!

அந்தணப்பேட்டை, அண்ணா அன்பழகன்.

●● நான் மாவட்ட தொழில் மையம் மூலம் "லோன்" பெறுவதற்காக மாவட்ட தொழில் மைய அலுவலகம் சென்றேன். விண்ணப்பம் சமர்ப்பித்தேன். அதிர்ச்சியாய் இருந்தது எனக்கு! அங்கிருக்கும் அனைத்து அலுவலர்களும் ஆளுக்கு 50 ரூ தந்தால் மறு வாரமே இண்டர்வியூவுக்கு அழைத்து "லோன்" சாங்ஷன் செய்திடுவோம். இல்லையென்றால் மூன்று மாதத்திற்கு மேலாகும்" என்றனர். இதற்குப் பெயர்தான் பகற் கொள்ளையோ!

பாப்பாங்குளம், வா.க. சங்கீதா பாலு.

●● அண்மையில் மேனகா காந்தி நமது முதல்வரிடம் "நாயைக் கொல்லாதீர்கள்" என்று வேண்டுகோள் விட்டாராம். இவரும் "சரி, நாய்களின் இனப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த நாய்களைப் பிடித்து கருத்தடை ஊசி போட்டு விடச் சொல்கிறேன்" என்று அதன்படி உத்திரவிட்டாராம். இது கொக்கு தலையில் வெண்ணெயை வைத்து பிறகு கொக்கைப் பிடிப்பது போலில்லை? மதுரை அரசு மருத்துவமனையில் நாளொன்றுக்கு 120 பேர் நாய்க்கடிக்காக ஊசி போட வருகிறார்கள். ஸ்விட்சர்லாந்திலிருந்து ஐஸ் பெட்டியில் பம்பாய் வழியாக வரவழைக்கப்படும் அந்த ஊசி மருந்தின் விலை சராசரி 150 ரூபாய். ஒரு நாள் மருந்தைக் கணக்கிட்டு ஆண்டுக்கு எவ்வளவு இழப்பு என்று கணக்கிட்டுக் கொள்ளுங்கள்! மதுரையில் இரவு 10 மணிக்கு மேல் குடிசைப் பகுதிகளில் தனியாக நடந்தால் பெரிய நாய்க் கும்பலே வளைத்துக் கொண்டு கடித்துக் குதறி விடும். நூற்றுக்கு மேற்பட்ட நாய்களின் 'அலைச்சலை' இரவு நேரங்களில் பார்க்கலாம். இதில் என்ன பாவ புண்ணியம்? தெரு நாய்களை ஒழித்துக் கட்ட வேண்டாமா?

அனுப்பானடி, இரா. கல்யாணசுந்தரம்.



# கண்காட்சி நடத்துவது மக்களை ஏமாற்றவா?



'வீட்டு உபயோகப் பொருள்கள் கண்காட்சி', 'ஜவுளி கண்காட்சி', 'உணவுப் பொருள் கண்காட்சி'... என்று எல்லா ஊர்களிலும் ஏதாவதொரு கண்காட்சி நடப்பது வாடிக்கையாகி விட்டது.

"எதுவும் வாங்காமல் 'கம்'மென்று வீட்டில் உட்கார்ந்திருக்கும் நடுத்தர வர்க்கத்தை மனவியல் ரீதியாக கையைப் பிடித்து இழுக்கும் முயற்சிதான் இந்தக் கண்காட்சிகள்" என்று கூறுகிறார் மதுரையைச் சேர்ந்த பேராசிரியர் ஒருவர். அவரே தொடர்ந்து "மதுரை போன்ற பொழுது போக்கு அம்சங்கள் குறைவாக உள்ள ஊர்களில் இது போன்ற கண்காட்சிகள் அடிக்கடி நடத்தப்படுகின்றன. கண்காட்சி என்றால் விலை குறைவாக இருக்கும் என்ற கருத்து மக்களிடையே பரப்பி விடப்பட்டிருப்பதால் மனோரீதியாக மக்கள் ஏமாந்து போகிறார்கள்" என்று குற்றமும் சுமத்துகிறார்.

இது உண்மைதானா? - தொடர்ந்து மதுரையில் பலவித கண்காட்சிகளை நடத்தி வரும் மடீட்சியா (மதுரை மாவட்ட சிறு மற்றும் குறுந்தொழில்கள் சங்கம்)வின் தலைவர் ஏ. செல்வராஜிடம் கேட்டோம்.

"நாங்கள் கடந்த பதினான்கு வருடமாக ஐடியல் ஹோம் கண்காட்சிகள் நடத்தி வருகிறோம். நீங்கள் குறிப்பிடுவது போல் விலை அதிகமாக இருந்தால் எங்கள் கண்காட்சிகள் வெற்றி பெறுமா?

"மக்கள் கடை வீதிகளுக்குப் போகும்போது ஒவ்வொரு சாமானும் ஒவ்வொரு பகுதியில்தான் கிடைக்கும் என்பதால் நிறைய அலைய வேண்டியிருக்கும். கண்காட்சி என்றால் ஒரே இடத்தில் எல்லாம் கிடைத்து விடுகின்றன. கடைவீதிகளில் கூட்டம், ட்ராஃபிக் ஜாம், பார்க்கிங் பிரச்னைகள் குறைகின்றன. மக்களுக்குப் பொழுதுபோக்கு அம்சமாகவும் இந்தக் கண்காட்சிகள் அமைகின்றன.

"பெண்களை ஏமாற்றுவது அவ்வளவு சுலபமல்ல. விலை தெரியாமல் ஏமாற மாட்டார்கள். எனவே இந்தக் குற்றச்சாட்டு உண்மையானதல்ல. பெரும்பாலும் தயாரிப்பாளர்களே நேரடியாக ஸ்டால்கள் எடுப்பதால் விலைகள் நிச்சயம் குறைவாகவே இருக்கும்.

"நாங்கள் ஸ்டால்கள் எடுப்பவர்களிடம் 'மார்கெட் விலையை விட குறைவாக விற்பனை செய்ய வேண்டும்' என்று நிபந்தனையே விதிக்கிறோம். கூடுதல் விலை என்றால் புகார் செய்யும்படி பத்திரிகையாளர்களையும், பொதுமக்களையும் கேட்கிறோம். ஆனால், இதுவரை புகார் ஏதுமின்றி வெற்றிகரமாகவே எங்கள் கண்காட்சிகள் நடைபெறுகின்றன. மக்களின் நலனுக்காகவே இவை நடத்தப்படுகின்றனவே தவிர ஏமாற்று வேலை எதுவுமில்லை!"

'விலை அதிகமாக இருந்தால் புகார் கொடுக்கலாம்' என்றெல்லாம் இவர்கள் சொல்வதாலேயே 'நிச்சயம் விலை அதிகமாக இருக்காது' என்று மக்கள் முழு நம்பிக்கை பெறுவதற்காகத்தானோ என்னவோ! இப்படி முணுமுணுக்கிறார் ஒரு பொதுஜனம்!

— எஸ்.ஜே. இதயா

● ப. இராம் முருகன், சென்னை - 81

? என்னைத் தீர்த்துக்கட்ட ஜெயலலிதா சதி செய்கிறார் என்கிறாரே கிருஷ்ணசாமி... இது பற்றி...?

! அதான் நக்கீரன் கோபால் மீது வழக்குத் தொடுத்திருக்கிறாரே, ஜெ! இன்னும் கல்கி மீதும் அவர் வழக்குப் போடணும்னு உங்களுக்கு ஆசையா இருக்குதா?

● ஸ்ரீ வித்யா காளிதாஸ், சிதம்பரம்.

? 'ஒரே பொய்கையில் தோன்றிய இரு மலர்கள் நாங்கள்.... அ.தி.மு.க. தாமரை என்றால் ம.தி.மு.க. அல்லி...' என காளிமுத்து கூறியுள்ளாரே?

! ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள் என்று காமராஜர் கூறியதே இவர்களுக்கும் பொருந்தும். அல்லியையும் தாமரையையும் அவமானப்படுத்துவானேன்...!

● இந்திரா ஜி., பெங்களூர் - 8.

? இன்னமும் ஆயிரம் கிராமங்களில் தேநீர் கடைகளில், தாழ்த்தப்பட்ட மக்களுக்கு தனி



• சினிமா கனவு!



• வித்தியாச வலியுறுத்தல்

தம்ளர் பழக்கம் உள்ளது என்கிற செய்தி பற்றி...? -

! ரொம்ப வருத்தப்பட வேண்டிய விஷயம். மனமாற்றம் தேவைதான். ஆனால், யாராயிருந்தாலும் ஆளுக்கொரு தம்ளரைக் கையோடு எடுத்து வந்து அதில் ம. ஊற்றச் சொல்லி சாப்பிடலாம். ஏன்னா, தம்ளர்கள் 'கழுவ'ப் படுகிற கண்றாவியை நான் பார்த்திருக்கிறேன்... சகல வியாதிகளுக்கும் வாய்ப்பு உண்டு!

● ஸ்ரீவத்ஸன், மன்னார்குடி.

? எம்.கே.டி. – பி.யூ. சின்னப்பா

சிவாஜி – எம்.ஜி.ஆர்

கமல் – ரஜினி

.... இவ்வரிசையில் இப்போது சூர்யா – விஜய்...! சரியா...?

! விண்மீன்களின் வரிசையில் டார்ச் லைட்களைச் சேர்க்காதீர்கள்!

● எம். பிச்சைக்கனி, திருமால்பூர்.

? அயோத்தியில் ராமர் கோயில் கட்டுவது நாட்டின் சுயமரியாதை, மற்றும் கௌரவத்துடன் தொடர்புடையதாகும் என்று



• இழந்த மரியாதை!



• சிறகு முளைத்து....

எல்.கே. அத்வானி கூறுகிறாரே...?

! நாட்டின் சுயமரியாதை, கௌரவம் எல்லாவற்றையும் பப்ரி மஸ்ஜித்தை இடித்த போதே பாழாக்கினவர்கள் இவர்கள்தானே!

● பி. கார்த்திகேயன், சென்னை - 15.

? குங்குமத்தில் மு.க. ஸ்டாலின் எழுதும் 'பயணச் சிறகுகள்' தொடர் பற்றி...?

! எழுதுவது தேர்ந்த கை என்று தெரிகிறது!...

● எஸ். சேகர், திருவாரூர்.

? முகவரியைத் தமிழில் பிரகரித்த கல்கி

# மு.க.மலிவான

இப்பொழுது ஆங்கிலத்தில் பிரகரிப்பது ஏன்...?

! டில்லிக்குக் காவடி தூக்காமல் நிறுவனத்தை நடத்த முடியவில்லையே...! டில்லியில் இருக்கும் அதிகாரிகள் 'எங்களுக்குத் தமிழ் தெரியாது' என்கிறார்கள். ஹிந்தியில் பிரகரிப்பதைவிட ஆங்கிலம் மேல் என்று முடிவு செய்தோம்.





• இரட்டையர்....

● ப. ராமகிருஷ்ணன்,
ஆவணத்தாங் கோட்டை.

? பெண்கள் தயாரிப்பாளர்களாக இருந்தால் தரமான சினிமா வெளிவரும் என்கிறாரே நடிகை சுகாசினி.

! இதை ஒப்புக் கொள்ள முடியாது. தயாரிப்பாளர்களாகிவிட்டால் அவர்களும் கலெக்ஷனைத்தானே பார்ப்பார்கள்...! இப்போது தொழில் நுட்பத்திலும் நடிப்பிலும் உள்ள

## நீங்கள் கேட்டவை – தராசு




• ஆக்கிரமிப்பு...

பெண்களே சமரசத்துக்குத் தயாராயிருக்கும் போது, பணம் முதலீடு செய்தால் எப்படி நடந்து கொள்வார்கள்...?

● ஏ. சுகுமார், காட்டுக்கானூர்.

***? இந்துக்கள் 'லுங்கி' அணியக் கூடாது என்று இராமகோபாலன் கூறியுள்ளாரே?***

! ஆமாமாம்! லுங்கி அணிந்து கோவிலுக்குள் வரக் கூடாது என்ற அறிவிப்புப் பலகை கண்டு சில பயணிகள், அதை அவிழ்த்துவிட்டு உள்ளாடையுடன் போகும் அவலத்தை ஒரு கோவிலில் பார்க்க நேர்ந்தது! இப்படியெல்லாம் நச்சு நச்சுவென்று வித்தியாசம் பாராட்டி பிளவுகளை அதிகரிக்கக் கூடாது.

# முதல்வரா..?

● வே. ஈஸ்வரன், பரமக்குடி.

***? சமீபத்தில் பார்த்து ரசித்த (அல்) சிரித்த அரசியல் நிகழ்ச்சி பற்றி...?***

! உ.பி. சட்டசபை கலாட்டாதான்! நம் ஊரிலும் இது நடந்ததுதான் என்றாலும் இங்கு மைக்குகள் பறந்தனவே தவிர 'காணாமல்' போகவில்லை.




•.... திரையுலகில்...

● வீ. முத்துக்குமரன், திருமானூர்.

***? ஜெ மீதுள்ள வழக்குகள் முடிவு பெற இன்னும் பதினைந்து வருடங்கள் ஆகும் என்கிறாரே நெடுஞ்செழியன்...?***

! பதினைந்தோ இருபதோ வழக்குகளில் முடிவு தெரிய பதினைந்து வருஷமாகலாம்தான்; ஆனால் ஒரே ஒரு வழக்கில் தீர்ப்பு சீக்கிரம் வந்தாலே போதும்.... 'ஜெ'யின் எதிர்காலம் நிர்ணயிக்கப்பட்டு விடும்.

## நீங்கள் கேட்டவை — தராசு

● ஜோதிதாசன், சென்னை – 29 ❑

***? இந்துக் கோயில்களின் வருமானம் அரசாங்கத்தை அடைகிறது; முஸ்லிம், கிறித்தவ கோயில்களின் வருமானம் அந்தந்த ஜமாத்தையும், திருச்சபையையும் அடைகிறதே... – இதுதான் இந்திய அரசின் மதச்சார்பின்மையா...?***

! ஆட்சியில் இருப்போர் நியாய உணர்வோடு சிந்தித்துப் பார்க்க வேண்டிய அம்சம்தான். மாற்று ஏற்பாட்டுக்கு இந்து மதத்தினர் அனைவரும் ஒற்றுமையாகக் குரல் கொடுக்க வேண்டுமே.... அதற்குத் தயாராக இருக்கிறார்களா...?

● ந. தாமோதரன், சேலம் – 6

***? 'என்னை விட மலிவான முதல்வர் யாரும் இருக்க முடியாது...' என்று கருணாநிதி சொன்னது பற்றி உங்கள் கருத்து...?***

! மலிவான என்பதை நீங்கள் எந்த அர்த்தத்தில் எடுத்துக் கொள்கிறீர்கள் என்பதைப் பொருத்தது. அவரை அணுகுவது எளிது; அவருக்காகச் செலவாகும் தொகை குறைவு என்றெல்லாம் பார்த்தால் மலிவான முதல்வர்தான். வேறு வகைகளில் அல்ல...



• ... தொடர்கிறதா?

● மணிமதியண்ணன், சுப்பராயர்புரம்.

***? பெங்களூரில் கணவர்கள் நலச் சங்கம் தொடங்கியிருக்கிறார்களாமே...?***

! அடிப்படையே கோளாறு! மனைவி நலமின்றி கணவன் நலம் ஏது...? தம்பதியர் நலச் சங்கம் என்று ஆரம்பிக்கட்டும்...!

● ஜே. பாபு, குடந்தை

***? எத்தனையோ கேள்விகள், விமர்சனக் கடிதங்கள் அனுப்பியும் பிரசுரமாகவில்லை. இனிமேல் வளர்மதி ஆசைத்தம்பி, எம். அசோக்ராஜா, புலவர் எஸ்.கே. மூர்த்தி ஆகியோரின் பெயரில் தான் கடிதம் எழுதட்டுமா?***

! பெயரில் என்ன இருக்கிறது பாபு...? சரக்கில் தானே சகலமும்...?

> ❑ ரூ. 50 பரிசு பெறுபவர்
> ஜோதிதாசன்,
> 3, பாளையம் தெரு,
> அமைந்தகரை, சென்னை 600 029

✉ சந்தன வீரப்பன் பற்றிய கார்டூனும், தலையங்கமும் மிகவும் அருமை.
சிதம்பரம் - 1,
ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ இலக்கியப் போட்டியில் வென்று, பரிசாக அமெரிக்காவுக்கு போய் அவதிப்பட்ட கட்டுரையாளரின் அனுபவம் வெடிச்சிரிப்பை வரவழைத்தது! அதே சமயத்தில், அவரது அப்பாவித்தனத்துக்காக பரிதாபப்படாமல் இருக்க முடியவில்லை.
திருச்சி - 20,
இ. முஹம்மது ஹுசேன்.

# சிரிப்பு வெடியால் பட்ட சித்திரவதை!

✉ அயெ சுந்திப் பார்க்கப் போய் அலறியடித்து வந்த நாவலாசிரியர் க. வேணுகோபாலின் சொந்த சோகக் கதையைப் படித்து வேதனையடைந்தேன். இப்படித்தான் ஒரு பெரீ...ய்...ய வாரப் பத்திரிகையும் பெரீ....ய்...ய இசையரசரும் சேர்ந்து மெட்டுக்குப் பாட்டெழுதும் போட்டியை நடத்தினார்கள். அதற்கு நான் எழுதிய பாடல் வரிகளைத் தேர்ந்தெடுத்துப் பிரசுரித்த அந்த மாபெரும் பத்திரிகை பாடலை எழுதியவர் பெயரை அந்த இதழில் பிரசுரிக்காமல் உரிய கவிஞரே நேரில் அலுவலகம் வந்து பரிசைப் பெறலாம் என அறிவித்தது. ஆனால் நேரில் போய்க் கேட்டபோது, பிறகு தருவதாகக் கூறி ஏமாற்றி விட்டனர். 840 கிலோ மீட்டர் பயணம் செய்து 500 ரூபாய் செலவு செய்து, புத்திக் கொள்முதல் செய்ததுதான் மிச்சம்!
கோனாபட்டு.
தேன்மொழி மன்னவன்.

✉ ராஜேஷ்குமாரின் ஒன், டூ, த்ரீ கதைகள் மூன்றும் ரொம்ப நன்றாக இருந்தன!
சென்னை - 1,
கே.ஆர். உதயகுமார்.

✉ சிரிக்கச் சிரிக்க சிரிப்பு வருது அடக்க முடியலே... கல்கி வெடித்த சிரிப்பு வெடியை மறக்க முடியலே!
கோவை - 14,
ஏ.எஸ். இராமசாமி.

✉ கோபால் ஜோக்கிலிருந்து, சர்தார்ஜி ஜோக்ஸ் வரை, ஒரே ஜோக்குகள் மயமாய் அச்சிட்டு, என் வயிற்றையே புண்ணாக்கி விட்டீர்களே! நான் எப்படி சார் தீபாவளிப் பலகாரங்களைச் சாப்பிடுவது?
சித்தம்பூண்டி.
பாசி. கோகுலன்.

✉ முன்னாள் ஆட்சியின் பிரச்னை பற்றிய வாசகர் கேள்விக்குத் தராசு அளித்த பதில் பாராட்டுக்குரியதே... காரணம்... கடந்த காலத்தில் நிகழ்ந்தவை இன்னும் மக்களால் ஜீரணிக்க முடியாத வகையில் விஸ்வரூபம் கண்ட பிரச்னை ஆயிற்றே... அதான்... அதே சமயம் இந்நாள் ஆட்சியாளர்களுக்கும் ஓர் எச்சரிக்கை உணர்வை ஏற்படுத்தும் வகையில் அமைந்திருந்தது.
குடந்தை. ஆர். ஷம்மு.

✉ சுப்புடுவின் இசை, நாட்டிய விமர்சனங்களிலிருந்து தொகுத்து வழங்கிய 'பஞ்ச்' விமர்சன வரிகள், சர வெடிகளாய் சப்தித்தன.
தேவராயனேரி,
மு. கருணாநிதி.

✉ இளவரசர் ஃபிலிப், தனது வாய்க்கு 'கிளிப்' போடாமல் பேசி மாட்டிக் கொண்டதை சுவாரஸ்யமாக சுட்டிக் காட்டியிருக்கிறது இவ்வார தலையங்கம். நமது பிரதமரும் தம் பங்குக்கு இதே தவறு செய்ததையும் இடித்துரைத்து - தான் ஒரு நடுநிலை இதழ் என்பதை மட்டுமின்றி, நம்மவர்கள், அடுத்தவர்கள் என்ற பாரபட்சமில்லாமல் உள்ளதை உள்ளபடி சொல்லும் ஒரே இதழ் கல்கிதான் என்பதையும் நிரூபித்துள்ளீர்கள்.
சேலம் - 2, சூர்யநிலா.

✉ கிரேஸி மோகனின் 'பாரதம் படும் பாடு' தீபாவளி சிறப்பிதழில் சக்கைப் போடு போட்டிருக்கின்றது. இந்தச் சிரிப்பு வெடியில் நாங்கள் ரொம்பவும் திக்குமுக்காடிப் போனோம்!
சேலம் - 9,
மு. இரவிச்சந்திரன்.

✉ தமிழ் நாட்டின் முதல் அமைச்சராக சுப்பிரமணிய சுவாமி ஆனால் அவரைப் பற்றிய செய்தித்தாள்களில் செய்திகள் எப்படி இருக்கும்? என்ற கற்பனைக் கட்டுரை மிக சுவாரஸ்யமாக இருந்தது.
மணியக்காரன் பாளையம்,
ஏ.ஜி. கல்யாணசுந்தரம்.

✉ 'கலக்(கு)கிறார்கள் கார்ட்டூனிஸ்டுகள்' என்ற தலைப்பில் வெளிவந்துள்ள கலந்துரையாடலில் ஒரு சிறு திருத்தம். திரு. சாவி, ஆனந்தவிகடனில் எழுதிய 'இங்கே போயிருக்கிறீர்களா?'வுக்கு நான் கார்ட்டூன் வரையவில்லை. ஓவியர் கோபுலு அவர்களே செய்திருந்தார். வள்ளுர் கோட்டத்தைப் பற்றிய கார்ட்டூன் கருவும் கருத்தும் என்னுடையதே.
சென்னை 34, நடனம்.

# "கார் வாங்கி விட்டேன்; தவணை கட்டத்தான் சிரமப்படுகிறேன்!"

## — கூறுவது ஓர் எம்.பி!



"என்னுடைய கிராமம், பதான்கோட்டையும் கல்கத்தாவையும் இணைக்கும் கிராண்ட் டிரங்க் சாலையில் இருப்பது எனக்கு சௌகரியமாய் இருந்தது. நிறைய சோஷலிஸ்ட் கட்சித் தலைவர்கள், வழியில் கிராமத்தில் எங்களுடன் தங்கிவிட்டுப் போவார்கள். ஜமீன்தார்களின் அட்டூழியங்கள் அதிகமாய் இருந்த அந்தக் காலத்தில், அவர்களை எதிர்த்துப் போராட எங்களுக்கு உத்வேகம் தந்தார்கள் இந்தத் தலைவர்கள். அதிலும் ராம் மனோகர் லோகியா முக்கியமானவர்" என்கிறார் பகவதி தேவி.

பகவதி தேவி இன்றைக்கு நாடாளுமன்ற உறுப்பினர். பீகார் மாநிலத்து அவுரங்காபாதில் உள்ள மித்தாய் கிராமத்துக்காரரர்.

1996 தேர்தலில் பா.ஜ.க. உறுப்பினரை 60,000 வோட்டுகள் வித்தியாசத்தில் தோற்கடித்து, புத்த கயா தொகுதி ஜனதாதள எம்.பி. ஆனார். இத்தனைக்கும் அங்கே பா.ஜ.க. வேட்பாளர் கிருஷ்ண சௌத்ரி செல்வாக்கு மிகுந்தவர்!

ஆனாலும் இவராக சீட் கேட்டு கட்சித் தலைமையை நச்சரித்ததில்லை. தலைவர்களாகவே வீடு தேடி வந்து தேர்தலில் நிற்கச் சொன்னதுதான்! பத்துத் தடவை ஜெயிலுக்குப் போய் வந்தவர் பகவதி தேவி. ஒரு தடவை கைக் குழந்தையுடன்!

இவர் போட்டியிட்ட தேர்தல்களில் எல்லாமே விளம்பரம் எதுவும் செய்யவில்லையாம். நோட்டீசுகள், சுவரொட்டிகள், லவுட் ஸ்பீக்கர்கள், கார் ஊர்வலங்கள் எதுவுமே கிடையாது!

தொகுதி முழுக்க மாதக் கணக்கில் நடந்து சென்றே மக்களைச் சந்தித்திருக்கிறார் இவர். ரொட்டியும், உப்பும், குடிக்கத் தண்ணீரும் கூடவே எடுத்துச் சென்று விடுகிறார். இரவு மட்டும், உள்ளூர் கிராமவாசிகளுடன் தங்கி விடுகிறார். பெரும்பாலும் தரையிலேயே படுத்துவிடுகிறார். இல்லாவிட்டால், ஒரு கயிற்றுக் கட்டிலில் வானமே கூரையாக படுத்துக் கொண்டு விடுகிறார்!

பெரிதாக பக்தி என்றோ, கோயில்கள் என்றோ அக்கறை காண்பிப்பதில்லை. 'செய்யும் தொழிலே தெய்வம்' என்பதுதான் இவரது நம்பிக்கை. டீவியில் இந்தி செய்தி மட்டுமே பார்க்கிறார். பாட்டு, நடனம், சினிமா எதுவும் கிடையாது. ஆரம்பக் கல்வியோடு சரி. "அது போதும்; யாரும் என்னை ஏமாற்ற முடியாது!" என்கிறார் பகவதி தேவி.

நண்பர் கொடுத்த ஒரே ஒரு கைக் கடிகாரத்தை மட்டும் அணிந்திருக்கிறார்.

டில்லியில் எம்.பிக்கள் வசிக்கும் 'மீனாபாக்'கில் பெண், மாப்பிள்ளை, பேரப்பிள்ளையுடன் வாசம். யார் வேண்டுமானாலும் பார்க்கவும், பேசவும் - ஏன் அங்கேயே தங்கவும், செய்யலாம்.

வாழ்க்கையில் வெகுவாக ஆசைப்பட்டு இப்போதுதான் ஒரு டாடா சுமோ வாங்கியிருக்கிறார். "ஆனால் தவணைகள் கட்டுவதுதான் சிரமமாயிருக்கிறது!"

மிக மிக ஏழைக் குடும்பம். தகப்பனாருடன் சேர்ந்து கல் உடைத்தால்தான் சாப்பாடு. விறகும் சுள்ளிகளும் பொறுக்கி வந்து விற்றால்தான் குடும்பத்தைக் காப்பாற்ற முடியும் என்று இருந்த நிலையிலிருந்து, ஒரு பெண்மணி எம்.பி. ஆக முடியுமா என்று கேட்பவர்களுக்கு, பகவதி தேவியே பதில்.

— எஸ்.வி.என்.

# படித்ததில் இடித்தது:

# குழந்தைகளின் பிரபஞ்சம்



## வேண்டாத அங்கலாய்ப்பு!

குழந்தைகள் திரைப்படம் பற்றிய நூல் இது. 'அரும்புகளின் பரிசுத்தம்தான் குழந்தைகளின் உலகம்' என்று கட்டியம் கூறித் தொடங்குகிற ஆசிரியர், பரிசுத்தத்துக்கு அப்பாற்பட்டுப்போன 'ஸலாம் பாம்பே' போன்ற படங்களுக்காகவே நிறைய எழுதுகிறார்.

தமிழில் வெளியான குழந்தைகளுக்கான படங்கள் என்பதில் 'அழியாத கோலங்கள்' பட்டியலிடப்படுவது வேடிக்கையா, வேதனையா?

தமிழில் வெளியான எஸ். பாலச்சந்தரின் 'அவனா இவன்?' அல்லது 'யார் பையன்' போன்ற படங்களைத் தொட்டுக்கூடப் பார்க்க முடியாத மதிப்பீடு இது. உலக அளவிலும் பல ஆண்டுகளுக்கு முன் வெளியான ஜப்பானியக் குழந்தைப் படம் 'யூகி வாரிஸ் ஸு' போன்றவை ஆசிரியரின் கவனத்துக்கு வராதது வியப்பு.

மற்றெல்லாத் துறையிலும் உள்ளதுபோல் இடதுசாரி, மார்க்சியவாதிகள் சார்ந்தவைதாம் இலக்கியம் என்கிற மாதிரி, வர்க்க ரீதியில் திரைப்படங்களையும் பார்ப்பது சரியானதாய்த் தோன்றவில்லை. அமெரிக்கத் தயாரிப்பான E.T அற்புதமான அறிவியல் படம். அதில் 'வெள்ளைக் குழந்தைகளைத் தானே காட்டுகிறார்கள்? ஒரு கறுப்புச் சிறுவனோ, ஒரு ஆசியச் சிறுவனோ இல்லை' என்பது தேவையற்ற அங்கலாய்ப்பு.

"அமெரிக்கப் படங்கள் குழந்தைகளை சந்தோஷப்படுத்தவும், உலகக் குழந்தைகளிடமிருந்து அவர்களை மேன்மைப்படுத்தியும் எடுக்கப்படுகிறது" என்பது மன்னிக்க முடியாத ஒரு குற்றம் போல் ஆசிரியரால் விமர்சிக்கப்படுகிறது.

குழந்தைகள் கபடமற்ற மலர்கள். வேற்றுமைகளைப் புகட்டி அவர்களின் எதிர்காலத்தைச் சிதைக்க வேண்டியதில்லை.

உழைக்கும் சிறார்கள் பற்றிய பிரச்னை, குழந்தைகள் மனசுக்கு வேண்டாம். பெரியவர்கள் பொறுப்புணர்வுடன் பதில் சொல்ல வேண்டிய விஷயம் அது.

இந்த நூலில் ஆசிரியர் எதை நிறுவ முயல்கிறார் என்பது தெளிவாக இல்லை. அச்சுப்பிழைகளை மன்னிக்கலாம். ஆயினும் வாசகனை மிகவும் சிரமப்படுத்தும் (உதா: 'இவை தாண்டுகிறது') மொழி நடையை எப்படி மன்னிப்பது?

எப்படியானாலும் ஈரானியப் படமான அமிர் நதேரியின் 'ரன்னர்' பற்றித் தந்துள்ள அறிமுகம் மனசுக்கு ஆறுதலையும் நம்பிக்கையையும் தருவதையும் குறிப்பிட்டுவிட வேண்டும்.

— சுப்ர.பாலன்

குழந்தைகளின் பிரபஞ்சம் / யமுனா. ராஜேந்திரன்/ வெளியீடு: 'சேவ்' 18, தென்னம்பாளையம், திருப்பூர் 641 604/ ரூ. 20)

சமீபத்தில் ஸ்டான்போர்டு பல்கலைக் கழகத்தில் சேர்ந்து செல்ஸியா படிக்கத் தொடங்கினாலும் தொடங்கினார், ஏகப்பட்ட கெடுபிடிகள் – எக்கச்சக்க வதந்திகள். அமெரிக்க அதிபர் கிளிண்டனின் மகள் என்றால் சும்மாவா?

வகுப்பறைகளில் கண்ணாடித் தடுப்புகள் போடப்பட்டன – துப்பாக்கி குண்டு நுழைய முடியாத ஸ்பெஷல் கண்ணாடி – பல்கலைக் கழகத்தின் வராந்தாக்களில் – மறைவான இடங்களில் பல காமிராக்கள்.

இப்படியெல்லாம் பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்ய சம்மதித்தாலும், பல்கலைக் கழக உறுப்பினர்களுக்கு வேறு ஒரு கவலை தொற்றிக் கொண்டது. "செல்ஸியாவுக்குப் பாதுகாப்பாக செக்யூரிடி ஆட்கள் கூடவே வருவார்களோ? அப்படியானால் அவர்களை வகுப்பறைக்குள் அனுமதிக்கத் தங்கள் விதிமுறைகள் இடம் தரவில்லையே! ஒருவேளை மாணவர்களைப் போலவே மஃப்டியில் பாதுகாவலர்கள் வருவார்கள் என்றால், இதை சம்பந்தப்பட்ட பேராசிரியர்களுக்குத் தெரியாமல் எப்படி வைத்துக் கொள்ள முடியும்?" நல்லவேளையாக எந்தவித பூனைப்படையும் செல்ஸியாவுடன் வராது என்று அறிவித்து விட்டார் கிளிண்டன்.

இருந்தாலும் சக மாணவர்களிடையே யூகத்தின் அடிப்படையில் பலவித செய்திகள். 'கல்லூரியிலிருந்து தப்பிப்பதற்காக ஒரு ரகசிய சுரங்கப்பாதை கட்டுகிறார்கள்', 'செல்ஸியாவின் கழுத்தில் ஒரு கம்ப்யூட்டர் சிப்பைப் பொருத்தியிருக்கிறார்கள் – அவர் எங்கிருந்தாலும் அவர் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்க இது உதவும்', இப்படி. உள்ளூர் பத்திரிகை ஒன்று, "குறிப்பாக ஸ்டான்போர்டு பல்கலைக் கழகத்தை செல்ஸியா தேர்ந்தெடுத்ததற்குக் காரணம், அவரது பாய் பிரண்ட் இங்கு படிப்பதுதான்" என்று ஆதாரமில்லாமல் மனம் போன போக்கில் பிரகரித்து விட்டு, பிறகு வேறு வழியில்லாமல் தன் குற்றத்தை ஒப்புக் கொண்டிருக்கிறது.

பல்கலைக் கழகத்தின் அருகில் உள்ள 'பாலோ அல்டோ' என்ற ஹோட்டல்காரர்கள் 'வெல்கம் செல்ஸியா' என்றே தங்களின் ஒருவகை சாண்ட்விச்சுக்குப் பெயர் சூட்டியிருக்கிறார்கள். பலவித காய்கறிகள் இந்த சாண்ட்விச்சில் இடம் பெற்றிருக்கின்றன. (செல்ஸியா சைவ உணவு விரும்பி என்பது குறிப்பிடத்தக்கது).

பத்திரிகையாளர்களுக்கு உருக்கமான பகிரங்கக் கடிதம் ஒன்றை எழுதியிருக்கிறார் ஹில்லரி கிளிண்டன், "என் மகளைத் தனியே விட்டு விடுங்கள்; உங்கள் பரபரப்புக்கு அவளை இரையாக்காதீர்கள்" என்று.

— குல்லூ



# 9

அந்தத் தீ மூட்டம், வீரப்பனுக்கு நான் வந்து விட்டதை அறிவிக்கும் சிக்னல். தீ கொழுந்து விட்டு எரியத் தொடங்கிய கொஞ்ச நேரத்தில் சரசரவென்று ஒரு சப்தம். தோளில் துப்பாக்கி ஊஞ்சலாட வீரப்பன் வந்தான்.

"வாங்க ஆசிரியரே! இப்ப எதுக்கு வந்திருக்கீங்க?"

அந்தக் கேள்வியே எனக்கு அபாய அறிவிப்பு போலப் பட்டது.

"ஒன்பது பேரைப் பிடிச்சி வெச்சிக்கிட்டு இப்படிக் கேட்டீங்கன்னா எப்படி?" என்றேன் உதட்டளவில் சிரித்துக் கொண்டு.

"அது சரி. பொது மன்னிப்பு கொண்டாந்தீங்களா?"

"அதெல்லாம் பேசுவோம். முதல்ல அந்த ஒம்பது பேரை எங்க வெச்சிருக்கீங்க? காட்டுங்க?" என்றேன் கறாராக.

ஏனோ அவன் தீர்மானமாக அதற்கு மறுத்தான்.

"பொது மன்னிப்பு தந்தாங்களா, இல்லையா? அதைச் சொல்லுங்க முதல்ல!"

நான் கையில் சில தினசரிகளைக் கொண்டு போயிருந்தேன். பிணைக் கைதிகளை வீரப்பன் நாய்ச் சங்கிலியால் கட்டி வைத்து சவுக்கால் அடிக்கிறான் என்று செய்தி வெளியாகியிருந்த பத்திரிகைகள். அதைக் காட்டி, "நீங்க காட்டமாட்டேன்னு சொன்னா, அதுக்கு இதுதான் அர்த்தம். நான் முதல்வரிடம் என்ன சொல்லட்டும்?" என்றேன் கோபமாக.

"அதெல்லாம் இல்லை. வந்து பாருங்க" என்று கோபமாக எழுந்து கொண்டான். நான் அவனுடன் நடந்தேன்.

கொஞ்ச தூரம் நடந்ததும் ஓரிடத்தில் ஆணி அடித்தாற்போல என் கால்கள் நின்று விட்டன. அங்கே -

அந்த ஒன்பது பேரும் வரிசையாக உட்கார்ந்திருந்தார்கள்.

தலை கலைந்து தாடியும் சோகமுமாக அவர்கள் கிடந்த காட்சி என்னை ஓர் உலுக்கு உலுக்கி விட்டது. அவர்களில் ஒருத்தரைக் கூட எனக்கு முன்பின் தெரியாது. ஆனால் சொந்தச் சகோதரர்களின் சோகம் போல் நெஞ்சைச் சுட்டது. அத்தனைபேரும் கர்நாடக காகாரர்கள். ஒருவரைத் தவிர யாருக்கும் தமிழ் தெரியவில்லை. தமிழ் தெரிந்த அந்த ஒரு ஆளிடம் நான் பேசினேன்.

"இரண்டு மாநில முதல்வர்களும் சேர்ந்து தான் என்னை அனுப்பியிருக்காங்க. நீங்க கவலைப்பட வேணாம். கூட்டிட்டுப் போய்டுவேன். பயப்படாம இருங்க" என்று ஆறுதல் சொன்னேன்.

டி.பி.யால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த வேலாயுதம் என்பவருக்கு நான் எடுத்துப் போயிருந்த சில மாத்திரைகளைக் கொடுத்து விட்டு மற்றவர்களுக்கும் ஆறுதல் சொல்லி விட்டு வீரப்பனிடம் பேச ஆரம்பித்தேன்.

எடுத்த எடுப்பிலேயே பொது மன்னிப்பு இல்லாவிட்டால் பேச வேண்டாம் என்று கறாராகச் சொன்னான் வீரப்பன். மேலும் பழைய கதைகளைப் பேச ஆரம்பித்து, கோபம் தலைக்கேறி ஒரு முழுமையான தீவிரவாதி போல நடந்து கொள்ள ஆரம்பித்தான். அது, நான் அதுவரை காணாத வீரப்பனின் புதிய முகம்.



• வீரப்பனுடன்....

ஆனால் அமைதிப் பேச்சை அவனால் முற்றிலுமாகப் புறக்கணிக்க முடியவில்லை என்பதையும் நான் கண்டு கொண்டேன்.

இன்னொரு விஷயத்தையும் நான் கவனித்தேன். பிணைக் கைதிகளோடு, வீரப்பனோ, அவனது ஆட்களோ ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அவர்கள் தனியே ஒரு தீவு போல் இருந்தனர். நான் எத்தனையோ பேசிப் பார்த்

'நக்கீரன்' கோபால்

# நானும் வீரப்பனும்!

தும் வீரப்பன், அவர்களை விடுகிறவனாக இல்லை.

வெறும் கையுடன்தான் திரும்ப வேண்டும் என்பது கிட்டத்தட்ட உறுதியாகிவிட்ட நிலை. இருப்பினும் அந்த ஒன்பது பிணைக் கைதிகளையும் படம் எடுத்துக் கொண்டு, இரு மாநில முதல்வர்களுக்கும் அவர்களைக் கடிதம் எழுதச் சொல்லி வாங்கிக் கொண்டு, கனத்த மனத்துடன் கிளம்பினேன்.

கிளம்பும்போது வீரப்பனின் சட்டையை கவனித்தேன். அதில் 'Security' என்று எழுதியிருந்தது. சென்டிமென்ட்டாக அவனைத் தாக்க முடிவு செய்து, "செக்யூரிட்டின்னு உங்க சட்டைல எழுதியிருக்கே, அதுக்கு என்ன அர்த்தம்னு தெரியுமா!" என்று கேட்டேன்.

"என்ன அர்த்தம்?"

"செக்யூரிட்டின்னா பாதுகாப்பு. இந்த ஒம்பது பேருக்கும் நான் திரும்பி வர வரைக்கும் நீங்கதான் பாதுகாப்பு. இவங்க உயிருக்கும் சேர்த்துத்தான் சொல்றேன்!" என்று சொல்லி விட்டுக் கிளம்பினேன்.

சென்னை வந்தடைந்ததும் முதல் காரியமாக முதல்வரைச் சந்தித்து, நிலவரத்தைச் சொன்னேன். பிணைக் கைதிகள் எழுதிய கடிதத்தையும் வீரப்பன் அனுப்பிய கேஸட்டையும் கொடுத்தேன்.

மறுநாள் கூடுதல் டி.ஜி.பி. அலெக்சாண்டர் எனக்கு போன் செய்தார்.

"இன்று மாலை சிறப்பு விமானத்தில் கர்நாடக முதல்வர் வருகிறார், நீங்கள் பேச்சுவார்த்தைக்கு வர அரசு அழைக்கிறது" என்றார். சென்றேன்.

"உங்களுக்குக் கொடுக்கப்பட்ட காரியத்தை மிகவும் சிறப்பாகச் செய்திருக்கிறீர்கள். அந்த ஒன்பது பேரை மீட்டுவர நீங்கள்தான் சரியான ஆள். எப்படியும் இக்காரியத்தை நீங்கள் சாதிக்க வேண்டும்" என்றார் ஜெ.எச். பாட்டீல்.

"காவிரி விஷயத்தில் கர்நாடகா நமக்குக் கை விரித்தாலும், வீரப்பன் பிடித்து வைத்துள்ள 9 பேரும் கர்நாடகக்காரர்கள் என்பதால் இவ்விஷயத்தில் நாம் உதவ வேண்டும்" என்று தமாஷாகச் சொன்னார் கலைஞர்.

எல்லாம் சரி. ஆனால் எதைச் சொல்லி மீட்டு வருவது? அவன் கேட்கிற பொது மன்னிப்பெல்லாம் சட்டப்படி சாத்தியமே

• பிணைக் கைதிகளுடன்...

# பகத்சிங்கின் ஆசை!

**தூக்கு தண்டனைக் கைதி பகத் சிங்குக்குக் கருணை காட்டும் படி அவருடைய தந்தை மனு செய்ததை அம்மாவீரன் கண்டித்தது பற்றிய விவரம் 'கல்கி'யில் (12.10.97) வெளியாகியிருந்தது. அதைத் தொடர்ந்து ஒரு நிகழ்ச்சி. தண்டனை நிறைவேற்றப்படுமுன் பகத் சிங் "தயவு செய்து என்னைத் தூக்கிலிடாதீர்கள்" என வேண்டினார். "அப்படி வா, வழிக்கு" என்ற அதிகாரிகள் "நீ முன்பே கேட்டிருந்தால் ஒருக்கால் அரசு கருணை காட்டியிருக்கும்" என்றார்கள், எகத்தாளமாக. பகத்சிங், "அற்பர்களே! நான் அதற்காகச் சொல்லவில்லை. உயிர் பிரியும் போது என் கால்கள் இப்புனித மண்ணை ஸ்பரிசித்திருக்க வேண்டும் என்று விரும்புகிறேன். தூக்கிலிடப்பட்டால் அது சாத்திய மாகாதே! எனவே தரையில் நிற்க வைத்து என்னைச் சுட்டுத் தள்ளுங்கள்" என்றார்.**

**— அ. ஷண்முகசுந்தரம்**



இல்லையே?

இருப்பினும் காவலைஞர் அவனுக்கு ஆறு சலுகைகள் தர முன் வந்தார்; பாட்டிலும் ஏற்றுக் கொண்டார்.

என் குடும்பத்தை - குறிப்பாக மனைவியை ஒருவாறு சமாளித்து சமாதானப்படுத்தி விட்டுக் கிளம்பினேன்.

**வீ**ரப்பன் குறிப்பிட்டிருந்த கிராமத்தைச் சென்றடைந்ததும் அங்கே ஓர் அதிர்ச்சி காத்திருந்தது.

சாதாரணமாக நான் போகும் போதெல்லாம் இன்முகத்தோடு வரவேற்று உபசரித்து அனுப்புவது கிராமத்துக்காரர்களின் வழக்கம். ஆனால் இந்த முறை நடந்ததே வேறு.

குறிப்பிட்ட அந்த கிராமத்து வீட்டுக்குள் நான் நுழைந்ததுதான் தாமதம்.

"ஐயா, வந்துட்டீங்களா, ஒம்பது பேரை அந்தப் படுபாவி கிட்டேருந்து காப்பாத்துங்கய்யா! கொல்லப் போறதா முடிவெடுத்துட்டானாம். சீக்கிரம் போங்கய்யா... போங்கய்யா!" என்று அலறிக் கொண்டு ஓடி வந்தான் ஒரு கிழவி.

பதைத்துவிட்டது எனக்கு. கொலை வெறி தலைக்கேறியவனிடம் என்ன பேசி, எப்படி மீட்பது? தவிர என் உயிருக்கு என்ன உத்திரவாதம்?

நான் சிவாவிடம், "வேணாம், நாம் திரும்பிடலாமா?" என்று கேட்டேன்.

கிராமவாசி இதைக் கேட்டு, "நீங்க மட்டும் போகாட்டா, நிச்சயமா ரெண்டு பேரை வெட்டிடுவான். ஏன்னா, எப்பவுமே ரெண்டாவது முறை பேச்சு வார்த்தை நடக்கும் போதே போலீஸ் உள்ள வந்துடறதுதான் வழக்கம். இப்ப நீங்க ரெண்டாவது முறை வரீங்க. நீங்களும் திரும்பிப் போயிட்டால், அவன் கோவமாயி வெட்டிடுவான். தயவு செஞ்சு காப்பாத்துங்க!" என்று கதறினார்கள்.

சாகத் துணிந்து, கிளம்பினேன் என்றுதான் சொல்ல வேண்டும்.

**கா**ட்டுவாசியுடன் நடந்தோம். அன்று அமாவாசை. அமாவாசை இரவு என்றால் எப்படி இருக்கும் என்பதைக் காட்டுக்குள் நடந்தால்தான் முழுக்க உணர முடியும். நம் கை கூட நமக்குத் தெரியாது. எதிரே மரம் இருந்தாலும் சரி; யானையே இருந்தாலும் சரி; தெரியாது! விதி போன போக்கில் நடந்து கொண்டிருந்தோம்!

நள்ளிரவு பன்னிரண்டு மணி. காட்டுவாசி எங்களை நிறுத்தி, ஒரு புதருக்குள் பதுங்கச் சொன்னான்.

"எதுக்குய்யா?"

"இந்த இடத்துல முனி இருக்குது. பன்னெண்டுலேருந்து ஒரு அவருக்கு இந்த இடத்தைக் கடக்கக் கூடாது. முனிப் பாய்ச்சல் பயங்கரமா இருக்கும்!"

முனியாவது! சனியாவது? ஆனால் நகரக் கூடாது என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டான். வீரப்பன் உத்தரவாம்.

இருள் - திகில். பயம். வேறு வழி? பதுங்கிக் கிடந்தோம். சிறிது நேரம் கழித்து மெள்ள வெளியே வந்து மேலும் நடக்கத் தொடங்கினோம்.

மறு நாள் காலை 11 மணிக்கு வீரப்பனைச் சந்தித்தோம்.

அவன் எழுந்து வந்து வரவேற்காமல் உட்கார்ந்த இடத்திலிருந்தே சைகை காட்டிக் கூப்பிட்டான். பணயக்கைதிகள் ஒன்பது பேரையும் சங்கிலியால் கட்டி வைத்திருந்ததையும் ராஜு* என்ற நபர் சாகக் கிடந்ததையும் கண்டேன்.

ரத்தம் உறைய வைத்த காட்சி அது!

(தொடரும்)

• மனைவி குழந்தையுடன் கிரிதரன்



# சொன்னால் நம்பமாட்டீர்கள்!

திண்டுக்கல்லில் மைத்துனர் திருமணம். அதில் கலந்து கொள்வதற்காக கிரிதரன் தன் மனைவி, குழந்தையுடன் எழும்பூர் ரயில் நிலையத்தின் இரண்டாவது பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்தார்.

திடீரென்று, ரயில் மூன்றாவது பிளாட்பாரத்திலிருந்து உடனடியாகப் புறப்படப் போவதாக அறிவிக்கப்பட்டதும் திடுக்கிட்டார் கிரி. 'அடடா, தவறாக இங்கே நின்று கொண்டிருக்கிறோமே' என்று நொந்து கொண்ட அவர், பரபரவென்று மூட்டை முடிச்சுகளை அள்ளிக் கொண்டு ரயிலை நோக்கி ஓடினார். மனைவியும் (குழந்தையும் கூட) தம்மால் தூக்க முடிந்த பெட்டி, படுக்கைகளைச் சுமந்து கொண்டு பின் தொடர்ந்தார். தங்களுக்குரிய பெட்டியைத் தேடி உள்ளே நுழைவதற்கும் ரயில் புறப்படவும் சரியாக இருந்தது.

மனைவியும், குழந்தையும் தம்முடன் பத்திரமாக ரயில் ஏறிவிட்டதை நிம்மதியுடன் கவனித்த அவர், இருக்கையைத் தேடிக் கண்டு பிடித்தார்.

ஒவ்வொரு சாமானாகப் பார்த்துப் பார்த்து இடைத்த இடத்தில் அடுக்கிக் கொண்டிருக்கும் போதே சந்தேகம்... ஏதோ ஒன்று குறைகிறதோ...

"ஏங்க, நம்ம சூட்கேஸைக் காணோம். பிளாட்பாரத்திலேயே விட்டுட்டு வந்திட்டோம்!" என்ற மனைவியின் பதற்றம் அதை ஊர்ஜிதம் செய்தது.

நகைகள், பணம், துணிமணிகள், பட்டுப் புடைவைகள் என்று ஆயிரக்கணக்கில் மதிப்பு அடங்கிய சூட்கேஸ் அது!

குனிந்து ஜன்னல் வழியாகப் பார்த்தால் ரயில் இண்டியைத் தாண்டிக் கொண்டிருந்தது.

"அபாயச் சங்கிலியைப் பிடித்து இழுக்கலாமா?" மனைவி கேட்டார்.

"வேண்டாம். அதனால் எவ்வளவு பேருக்கு அசௌகரியம். அடுத்து ரயில் செங்கல்பட்டில் நிற்கும். அங்கே இறங்கி அந்த ஸ்டேஷன் மாஸ்டரிடம் விவரம் தெரிவிக்கலாம்" என்றார் கிரி.

"அதுவரை பெட்டி, பிளாட்பாரத்திலேயே இருக்குமா?"

"அப்படி ஒன்றும் ஆகாது. பெட்டி அங்கேயேதான் இருக்கும்; எங்கும் போகாது" என்று உறுதியுடன் சொன்னார் கிரி.

செங்கல்பட்டு ஸ்டேஷன். ஓடோடிச் சென்று ஸ்டேஷன் மாஸ்டரிடம் விவரம் சொன்னார். அவரும் சென்னை எழும்பூருக்குத் தொலைபேசியில் விவரம் தெரிவித்தார். எழும்பூர் ரயில் நிலைய கண்காணிப்பாளர் சாரி, தம் அலுவலர்களை அனுப்பித் தேடச் சொன்னார். போனவர்கள் வெறுங்கையுடன் திரும்பி வந்தார்கள்.

தகவல் செங்கல்பட்டுக்குத் தெரிவிக்கப் பட்டது. அதுவரை ரயிலை நிறுத்தி வைத்து தகவல் தெரிந்து கொள்ள உதவிய செங்கல் பட்டு ஸ்டேஷன் மாஸ்டருக்கு நன்றி சொல்லி விட்டு, திண்டுக்கல் பயணத்தைத் தொடர்ந்தார் கிரி.

திண்டுக்கல் ஸ்டேஷனில் இறங்கி, திருமண கூடத்திற்குப் போனார் கிரி. அங்கிருந்து சென்னையிலுள்ள தன் நண்பர் ஒருவருக்குத் தொலைபேசி மூலம் விவரம் சொன்னார். அந்தப் பெட்டிக்குள் என்னென்ன பொருட்கள் இருந்தன என்ற பட்டியலையும் சொன்னார்...

அன்று மாலைக்குள்ளாக சென்னையிலிருந்து தகவல்: "பெட்டி இடைத்து விட்டது. ஸ்டேஷன் சூபரின்டெண்டெண்ட் சாரியின் அலுவலகத்தில் நீ சொன்ன எல்லா பொருட்களுடனும் பத்திரமாக இருக்கிறது!"

எப்படி கிடைத்ததாம் பெட்டி? முதலில் தேடியபோது அலுவலர்களின் கண்களிலிருந்து தப்பிவிட்ட அந்தப் பெட்டி, கூட்டமும் சந்தடியும் குறைந்த இரவு வேளையில் தனியாக, அனாதரவாகக் கிடந்தது தெரிந்திருக்கிறது. உடனே அது கண்காணிப்பாளர் அலுவலகத்திற்குக் கொண்டு வரப்பட்டு விட்டது!

"மக்கள் எல்லோரும் நல்லவர்கள்; பிறர் பொருளுக்கு ஆசைப்பட மாட்டார்கள்!" என்றார் கிரி.

நிஜம்தானோ!

சந்திப்பு; படம்: **பிரபுசங்கர்.**

போட்டிக் கதை – 7

# யாதும் ஊரே...

“ராமர் இருக்கிற இடம்தான்டி அயோத்தி!”

“இதையே எவ்வளவு நான் சொல்வேன்? சீதை இருக்கிற இடம்தான் மிதிலைன்னு எப்போ வரப் போறேன்?”

ரிட்டையர் ஆன பிறகு சாரங்கனை மிரட்டும் கேள்வி. இனி மீதி வாழ்க்கையை எங்கே போய்க் கழிப்பது? இதுதான் மனைவி பூமாவோடு தினம் வாக்குவாதம்.

“பூமா, ரிட்டயராயாச்சு. கேன்த்ரீய வித்யாலயா டீச்சரா. ஊர் ஊரா டிரான்ஸ்ஃபர் பண்ணான். குவார்டர்ஸ்லியே வாழ்ந்தாச்சு. சொந்தமா வீடோ, ஃப்ளாட்டோ வாங்கிக்கலே. இனிமே எங்கே போய்த் தங்கறது? பூர்வீகச் சொத்தா கிராமத்லே வீடு இருக்கு... அதான் அங்கே போயிடலாம்கறேன்!”

“அந்தப் பட்டிக்காட்டுக்கு நான் வரவே மாட்டேன். உங்கப்பா படுத்தினதெல்லாம் ஞாபகம் வரும். இந்நாள் வரை சௌகரியமா வாழ்ந்தாச்சு. கிராமத்துல வசதிப்படாது. குக்கிராமம். கரண்ட் கட். தண்ணிப் பிரச்னை. பொழுது போகாது.”

“அப்போ எங்கேதான் போய்த் தங்கறது?”

“மாம்பலம்!”

“மெட்ராஸ்ல வாடகை கொடுத்துக் கட்டுமாடி?”

“எதுக்கு வாடகை தரணும்? சொந்தமா அங்க வீடு வாங்க முடியாது, சரி. சின்னதா ஒரு ஃப்ளாட் வாங்க முடியாதா?”

“அங்கெல்லாம் சதுர அடி என்ன விலைன்னு தெரியுமா?”

“தெரியாது. தெரியவும் வேணாம். என் மன்னி முன்னாடி அதே மாம்பலத்துல நான் தலைநிமிர்ந்து நடக்கணும்.”

பூமாவுக்கு ஒரே அண்ணன். பூர்வீகச் சொத்தாக மாம்பலத்தில் ரெண்டு கிரவுண்டில் பெரிய்ய வீடு. அந்தச் சொத்தில் பூமாவுக்குப் பங்கு கிடைக்கவில்லை.

“பெண்களுக்குச் சொத்துல பங்கா? அதான் கல்யாணத்துக்கு ஏகமா செலவழிச்சாச்சே” என்றாள் மன்னி. தலையாட்டினான் தமையன்.

“கோர்ட்டுக்குப் போகணும்” என்றாள் பூமா.

சாரங்கன் பூமாவை அடக்கி விட்டார். “அவாளா கொடுத்தா அழகு. கொடுக்காட்டா குறைஞ்சு போயிட மாட்டோம்.”

குறைந்துதான் போனார்கள்.

“மாம்பலத்துல நீங்க ஃப்ளாட் வாங்கறேன். நாம அங்கதான் வாழணும்.”

“எல்லாத்தையும் போட்டு பொண்ணுக்குக் கல்யாணம் பண்ணியாச்சு. பையன் படிச்சு முடிச்சு இப்பத்தான் வெளியூர்ல வேலைல சேர்ந்திருக்கான்... பணத்துக்கு எங்கேடி போறது?”

“என் நகையெல்லாம் வித்துடுங்கோ.”

“இருபது பவுன் தேறுமா?”

“கண்ட கண்ட ஷேர் பேப்பரெல்லாம் குப்பையா கெடக்கே. வித்துத் தலை முழுகிடுங்கோ.”

“இப்போ அடிமாட்டு விலைக்குத் தான்டி போகும்.”

“என் வார்த்தைய எப்போ கேட்டேள்? நாலு கிரவுண்ட் வாங்கிப் போடுங்கோன்னேன். வாங்கலே. தங்கம்னேன். குந்துமணி பெயரலே. ஏதோ நானாக் கொண்டு சீட்டு சேர்த்தேனோ பையன் படிச்சான். பொண்ணுக்குக் கல்யாணமாச்சு.”

“மிச்சத்தையும் சொல்லேன். வட்டிக்கு



ஆசைப்பட்டு ஃபைனான் கம்பெனில கோட்டை விட்டதை."

"கொஞ்சம் சறுக்கினா அதையே பிடிச்சுக் கோங்கோ. அழகழகா காம்ப்ளிமெண்ட்ஸ் கொடுத்து ஏச்சுட்டான் பாவி. இதோ பாருங் கோன்னா. எல்லாருக்கும் அவாவா பொறந்து வளர்ந்த இடம்தான் பிடிக்கும். சந்தோஷமான நினைவுகளைத் தர்ற இடம் பிடிக்கும். உங் களுக்கு உங்க கிராமம் பிடிச்சிருக்கு. நேக்கு மாம்பலம் பிடிச்சிருக்கு. உங்களுக்குப் பிடிச்ச மாதிரி கோயில் குளம் இங்கேயும் இருக்கு. பொழுதுபோக்குக்குக் குறைச்சலே இல்லே. ரெங்கநாதன் தெருவில நடந்துட்டு வந்தாலே போதும்."

''காலிப் பசங்க கண்ட இடத்துல இடிப்பான். இரைச்சல், அழுக்கு, புழுதி, சேறு. ஏன் விச்ராந்தியா இருக்கணும்னு தோணலே."

"ம்ம்... தாலி கட்டிண்டதிலேர்ந்து ஜிப்ஸி மாதிரி உங்களோட இழுத்த இடத்துக்கெல் லாம் வந்திருக்கேன். டில்லி, பாம்பே, ஹைதரா பாத், ஆவடி, நெய்வேலி, கல்பாக்கம்... என் ஆசைக்காக உங்களைக் கொஞ்சம் மாத்திக்கப் படாதா? ஏன் வீம்பு பண்றேள்?"

"திருமண் கிராமம்தான்டி நம்ம பூர்வீகம்."

"நேக்கு மாம்பலம் பூர்வீகம்."

"பூர்வீகம்கறது பரம்பரை பரம்பரையா..."

''அதெல்லாம் அந்தக் காலம்! எப்போ பொழப்பைத் தேடி ஊர் விட்டு ஊர் போக ஆரம்பிச்சாச்சோ.... அப்பவே எல்லாம் மாறிப் போயாச்சு. திருமண் புழுதில நீங்க புரண் டிருக்கலாம். சரி. உங்க குழந்தைகள்

வைதேஹி நாராயணன்

புரண்டுதோ? அதுகளுக்கு அந்தக் கிராமம் மேல என்ன பிடிப்பு இருக்கப் போறது? அங்கே யாரைத் தெரியும்? சரிசமமா பேச மனுஷாள் உண்டா? அதுக குழந்தைகளா வளர்ந்த போது எந்த ஊர்ல இருந்தாளோ அங்கதான் பிடிப்பு இருக்கும். பொண்ணைக் கேட்டா டில்லிதாம்மா பிடிச்சிருக்குங்கறா. ஏன்? அவ நினைவு தெரிஞ்சு படிச்சு வளர்ந்த தெல்லாம் அங்கே. அதான் டில்லிப் பைய னையே கல்யாணம் பண்ணிண்டு அங்கேயே செட்டிலாயிட்டா. கரோல்பாகையும் அஜ்மல் கான் ரோடையும் விட மனசில்லே. பையன் கிட்ட கேளுங்கோ. எந்த ஊர்டா பிடிச்சிருக் குன்னு? முழிப்பான். முழுசா நாலு வருஷம் அவன் எங்கேயும் சேர்ந்து இருக்கலே. "திருமண்"ணா நெத்தில இட்டுக்கற நாமக் கட்டியாம்பான்."

"நாமதான் பூர்வீகம்னா என்னன்னு புரிய வைக்கணும்."

"போதுமே பெருமை! கல்யாணப் பத்திரி கைல போடறதோட எல்லாருக்கும் பூர்வீகம் நின்னு போச்சு. யாரு ஐடண்டிஃபை செய்றா?"

"எடக்கு மடக்கா பேசாதடி. உலகத்துலே எல்லா இடத்துலயும் மனுஷா தொடர்ந்து இருக்கான்னா அதுக்குக் காரணமே இந்த பூர்வீக மண் மேல உள்ள பிடிப்புத்தான்."

"மண்மோகம் இப்போ கலைஞ்சுண்டு வர்றது. எது சௌகரியமோ அதை நாடற காலம். நிரந்தரம்னு எதுவுமே இல்லே. குழந்தை கள் மாமா வீடுன்னு மாம்பலத்துலே விடு முறைகளை ஜாலியா கழிச்சிருக்கு. ஒரு பிடிப்பு இருக்கும். சிடிங்கறதனாலே வாங்கற சொத் துக்கு மதிப்பு ஏறிண்டே போகும். உங்க பூர் வீகத்துக்கு ஏதாவது மதிப்பு உண்டா?"

'சொடேர்' என்று மூஞ்சியில் அடித்த மாதிரி இருந்தது. சாரங்கன் சொல் இழந்தார். தொண்டை அடைக்க, "என்ன இருந்தாலும் அது நம்பளோட..." முனகினார்.

"உங்களோட..."

"பிரிச்சுப் பேசாதடி. என்னோட உணர்ச்சி களைப் புரிஞ்சுக்கோ!"

"எங்களுக்கெல்லாம் உணர்ச்சியே வேணாமா? ஜடமாயிடணுமா?"

"குழந்தைகளையும் ஒரு வார்த்தை கேட்டுண்டு. பூர்வீகம் மேல அவாளுக்கும் பாத் யதை உண்டுடி. சங்கிலியா தொடர வேண்டிய தாச்சே."

"ஊரு, தேசமெல்லாம் போய் யாதும் ஊரேங்கற காலம்ன்றா இது!"

"எல்லாரையும் தாயா நினைக்கலாம்டி. தப்பில்லே. ஆனா, பெத்தவ உசத்தி இல் லையா!"

பூமா விருட்டென்று கிளம்பினாள்.

"எங்கேடி கிளம்பிட்டே?"

"உங்களோட பேசறதுக்கு சுவத்துல முட்டிக்கலாம்!"

திருமண்ணில் கால் பட்டதும் சாரங்கனுக்கு சிலிர்த்தது. ஜீவிக்கப் போரா டும் கிழட்டுக் கிராமம். நிரா கரிப்பதன் நிழல் கிரஹணை மாய்ப் படிந்திருந்தது. பீடி விற்கும் பெட்டிக் கடை. அரசியல் பேச டீக்கடை நிழல் தராத கொடி மரங்கள். வளையவரும் நாய்களும், அசிங்கத்தில் புரளும் பன்றிகளும். பிரம்மாண்டமான கோவில் சிதிலமடைந்து இருந்தது. பாசி ஆடையில் கோவில் குளம். மௌனமாய் நகர்ந்தார் சாரங்கன்.

"வந்தாச்சு!" வீட்டைப் பார்த்ததும் மனம் பொங்கியது.

எவ்வளவு பெரிய திண்ணை. தொட்டார். பூரா புழுதி. இறுகின பூட்டைத் திறக்க சிரமப் பட்டார். திறந்ததும் மூச்சை அடைத்தது நாற் றம். கால்பட்ட இடமெல்லாம் வௌவால் புழுக்கை. எங்கும் ஒட்டடையும் கறையானு மாக. கண்ணில் ஜலம் வந்தது.

ரேழி, அரங்கு, கேமரா உள், திருமப்பள்ளி... ஒவ்வொன்றாக திறந்து கொண்டே போனார். பழைய கால நினைவுகளையும்தான். ஒவ் வோரிடத்திலும்தான் எத்தனை கதைகள்! மன சைக் கிறிக் கொண்டு ஒரே சமயத்தில் அலை மோதி வெளிப்பட தலைசுற்றுவது போல இருந்தது. நிலையைப் பிடித்துக் கொண்டார். கண்கள் அரை இருட்டுக்குப் பழக்கமாக பெரு மாள் மேடையில சோகையாக செல்லரித்த



**"என் புருசனுக்கு முன் கோபம் ஜாஸ்தி!"**

**"அப்படியா?"**

**"ஆமா. அவரோட சமையலை யாராவது குறை சொல்லிட்டா போதும். உடனே கோச்சிக்கிட்டு அவங்க அம்மா வீட்டுக்கு போயிடுவார்."**

**– நாகூர் ஆர். லோகநாதன்**

லக்ஷ்மியும், வெங்கடாஜலபதியும்... அடை அடையாய் கரப்புடன். புழக்கடைக்கு வந்து வீட்டைப் பார்த்தபோது சுற்றுச்சுவர் சரிந்திருந்தது. செங்கல் பூத்து சேப்புமண் சொரிய... கிணற்றில் எட்டிப் பார்த்தார். கும்பி நாற்றம் குடலைப் புரட்டியது. தென்னை மரங்களை அண்ணாந்து பார்த்தார். எல்லாம் மொட்டு மரங்கள். ஒவ்வொன்றாய்த் தொட்டுப் பார்த்தார்!

"எல்லாரும் போயிட்டாலும் நீங்க இருக்கேள். என்னைத் தெரியறதா? நான்தான் சாரங்கன். எளநிப் பைத்தியம்."

"பாழடைஞ்ச வீடு. ஜாக்கிரதை. புழக்கடைக்குப் போக வேண்டாம். வர வர கண் வேற மறைக்கறது. பூச்சிபொட்டு இருந்து போட்டுத் தொலையப் போறது" - பூமா பக்கத்தில் இல்லாவிட்டால் என்ன? அவள் பேசறாப் போலவே இருக்கும் சாரங்கனுக்கு!

"இருக்கும்டி... ஆனா போடாது. கூடத்துல சுவர் ஓரமா தேள் ஊறும். ஈரமான இடத்துலே பூரான், புழக்கடை கோடில நாகம். ஆனா நம்ம வம்புக்கு வராது. அப்பல்லாம் ஊரே இங்க வந்துதான் புத்துக்குப் பால் தெளிக்கும்."

"போதுமே பெருமை. வீட்டைப் பூட்டிண்டு வாசலுக்கு வாங்கோ." - வந்தார்.

"தஞ்சாவூர்லே ரூம் எடுத்துத் தங்குங்கோ. யாராவது சிந்தராளா, பார்த்தேளா?"

"ஊர்ல யார்டி இருக்கா" கண்கள் அலை பாய்ந்தன. ஏமாற்றம். கழிவிரக்கம்.

"யார் இருப்பா? பொழைக்கத் தெரிஞ்சவா போயிட்டா!"

திண்ணைப் புழுதியில் தம் பெயரை எழுதினார். சின்ன வயசுப் பழக்கம்.

"சொன்னதெல்லாம் ஞாபகம் இருக்கா? வந்த விலைக்கு வித்துத் தொலைச்சுட்டு வாங்கோ!" பூமாவின் குரல் பூதாகாரமாய்.

"பெருமாளே!" தூணைக் கட்டிக் கொண்டு கண்களை மூடிக் கொண்டார்.

"ஊர் என்னடி பாவம் பண்ணித்து? யார் இருந்தா என்ன இல்லாட்டா என்ன? பெருமாள் இருப்பார். சேவிக்கலாம் வாடி."

"வேண்டியது சேவிச்சாச்சு."

"புண்ய க்ஷேத்திரம், பட்சிதீர்த்தம்."

"பழம்பெருமை எல்லாம் மூட்டைகட்டி வையுங்கோ. பாசிக்குளத்துல குளிச்சு, வாய் கொப்பளிக்க வேண்டாம். ஸ்கின் டிஸீஸ் வந்துடும்!"

"என்னோட வரமாட்டியா?"

முக்யமான பதிலை எதிர்பார்க்கும்போது மௌனம் கொடூரமானது.

"ஏண்டி இந்த உதாசீனம், நிராகரிப்பு. என்ன குறைஞ்சு போயிடுத்து இங்கே?" கதற வேண்டும் போல இருந்தது.

திருமண். ஒருகாலத்தில் மிக அழகான கிராமம். காவிரிக் கரை. சலசலக்கும் நீரோடு அரச மரம் போட்டி போடும். முப்போகம். மரகதப் பச்சை. பிரம்மாண்டமான கோவில். பிராகாரத்தில் சதா குழந்தைகள் விளையாடும். கோவில் புஷ்கரணியில் நீந்தும். நித்யப்படி கருடசேவை. மண்டகப்படி. கோஷ்டியில் கைநிறைய புளியோதரைப் பிரசாதம். வாலிபம் வரும் வரை சாரங்கனுக்கு எல்லாமே விளையாட்டுதான்! ஊர்ப்புழுதியில் புரள்வதே சொர்க்கம். அப்பா நிலம், நீச்சு, கோவில் எல்லாம் பார்த்துக் கொண்டார். மணியம் வேற. வீட்டு வாசலில் காத்துக் கிடப்பார்கள். ராஜாங்கம்தான். கொஞ்சம கொஞ்சமாக எல்லாம் விட்டுப் போச்சு. நடைமுறைகள் மாறிப் போயின. யார் யாரைக் கைவிட்டா? வாழ்ந்து கெட்டாச்சு. கல்பட்டதும் விலகிய பாசி நீர்ப் பரப்பைக் காட்டியபின் மூடுவதைப் போல பழசெல்லாம் ஞாபகத்துக்கு வந்து விடுபட்டன!

"யாரது குளத்தங்கரை இருட்டுலே?" பட்டாச்சாரியின் குரல்.

"நான்தான்."

"தெரியலே!"

"சாரங்கன் - பட்டாமணியம் பையன்."

"அடடே பார்த்து யுகமாச்சா. புடிபடலே. எங்கே இப்படி..."



"உங்க காதல் கல்யாணத்துல முடிஞ்சா நேர்த்திக்கடன் செலுத்தறேன்னு வேண்டிக்கிட்டியாமே?"

"ஆமா, எங்களுக்குக் குழந்தை பிறந்து வளர்ந்ததும் பீச்ல ஆறுமாசம் சுண்டல் விற்க அனுப்பறோம்னு வேண்டிக்கிட்டேன்..."

- செங்குன்றம் கே. ரமேஷ்ராமன்.

"ஜோசியரே... ஒரு சினிமா நடிகைய காதலிக்கறேன்... கல்யாணமாகற வாய்ப்பு இருக்கா?"

"ஓ... கை நிறைய ஜீவனாம்சம் வரவேண்டியிருக்குதுன்னு ஜாதகம் சொல்லுதே!"

– அம்பை தேவா



களும், புளியோதரையும் குவிந்திருந்தது ஒரு காலம்!

நடையைப் பூட்டினார் பட்டர்.

"என்ன விசேஷம்? எங்கே தங்கி இருக்கேள்?"

"வீடுதான் இருக்கே..."

"இருக்கட்டும்."

"இருக்குமான்னு புரியலே. வித்துடலாமான்னு பார்க்கறேன்!"

"பெருமாளே! நீங்கதான் பாக்கி."

"சும்மா பார்த்துட்டுப் போகலாம்னு."

"யாரை?" – சங்கடமான கேள்வி. யாரிருக்கா பார்க்க?

"பெருமாளைத்தான்!"

"வாங்கோ. அவரும் மனுஷாளைப் பார்த்து நாளாச்சு!"

வில்லைக் கற்பூரத்தில் பெருமாள் நிழலாய்த் தெரிந்தார். அப்பல்லாம் ஆயிரத்தெட்டு நாமாவளி சொல்லி பெருமாள் புகழை அடுக்கிக் கொண்டே போவார்கள். இப்போ இது போதும்! தாயார் சன்னதியில் விளக்கில்லை. பெரிய திருவடியும் சின்னத் திருவடியும் இருக்குமிடம் தெரியவில்லை. உள் மண்டபமெல்லாம் விழுந்தாச்சு!

"உங்கப்பாவோட எல்லாம் போச்சு. யாரும் படியளக்கறதில்லே. படியளந்த பெருமாளே இப்பல்லாம் பட்டினி."

"கோவிலுக்கு நிறைய சொத்துண்டே!"

"சொத்து இருந்து என்ன பண்றது? பக்தி, நம்பிக்கை போயிட்டா எது மிஞ்சும்? எல்லாரும் ஊரை விட்டுப் போயிட்டா. இவர் தனியா மாட்டிண்டு திண்டாடறார். போக்கிடம் இல்லே!"

ஐந்து ரூபாயைத் தட்டில் போட்டு தீர்த்தம், சடாரி வாங்கிக் கொண்டார்."

"துளசி... ஸாரி இருக்துலா!"

பட்டர் சிரித்தார். "நந்தவனத்துல நெருஞ்சிதான் இருக்கு!"

"சித்தே இருங்கோ. உங்களோடயே வந்துடறேன்."

தனியா இருக்க பயம். பெருமாள்தான் பயமில்லாமல் தனியா இருக்கார்! ராக்காலத்தை முடித்தார். அரைப்படி சாதத்தை பெருமாளுக்குக் காண்பித்து, கையோடு எடுத்துக் கொண்டார்.

"நாங்க சாப்பிடறதைப் பெருமாளுக்குக் காட்டிட்டுப் போறேன்."

மடப்பள்ளி அமுதுவாரையில் பொங்

**வா**சல் திண்ணையில் படுத்தபோது தூக்கம் வருவதாக இல்லை. புழுக்கம். கொசுத் தொல்லை. இரவெல்லாம் அரைமயக்க நிலையில் யார் யாரோ வந்து போனார்கள். அப்பா பேசறாப்ல இருந்தது.

"பின்கட்டுலதான் எல்லாரும் பொறந்தா. ரேழிலதான் மேல போய்ச் சேர்ந்தா. கேமரா உள்ளிலே அப்பல்லாம் ஒதுங்க நேரம் கெடைக்கறதே அபூர்வம். வீடு பூரா மனுஷா இருப்பா. அதுக்கு நடுவுலயும் எல்லாம் நடக்காமலா இருந்தது? உள் அரங்கு இருட்டுலே பகல் நேரத்லே கூட கனைப்பா. கிணத்தடிலே குளிக்கறதும், மஞ்சள் தேய்ச்சுக்கறதும் எல்லாம் பார்வைலே படும். படட்டும்னுதான். ஊரையே மிரட்டி என்ன பிரயோசனம்? உங்கம்மா வச்சதுதான் சட்டம்! எங்களை விடுடா... உன் சாந்தி முகூர்த்தம் இங்கதானே நடந்தது! மறந்துடுவியா?" மறக்கறதா?!

"ஏண்டி பயப்படறே. நான் என்ன பூதமா உன்னை முழுங்கறதுக்கு?" – தலையாட்டினாள். கரப்பைக் காட்டினாள்.

"அப்போ சௌகரியம்தான்" இறுக்கிக் கொண்டார்.

கரப்புக்கு பயப்பட்டாலும் பயப்படுவா. என்கிட்டே... அம்மா போனப்ப அப்பா காலைக் கட்டிண்டு கேவறாப்ல இருக்கு!

"உங்கம்மா எங்கியும் போகலடா. இங்கயே தான் சுத்திண்டிருப்பா. கண்ணை மூடிண்டு தூங்கு. வந்து அணைச்சுப்பா."

சாரங்கனை யாரோ அணைத்து தலையைக் கோதுவது போல இருந்தது.

அப்பாவுக்கு சுவாசம் இழுக்கறது. பிராயச்சித்தம் செய்தாச்சு. சாரங்கனின் கைகளைப் பற்றிக் கொள்கிறார். ஜிலீர்ங்கறது!

"பொறந்து வாழ்ந்த வீடும் பெத்தவா மாதிரி தான். கைவிட்டுடாதே. கவனிச்சுக்கோ. எங்களுக்கு இங்கே வந்து ஸ்ரார்த்தம் செய். ஒழிஞ்சபோது எங்களோட இருக்க இங்கே வா. நாங்க காத்துண்டிருப்போம்!"

விடியல் காற்று குளிரூட்ட முழிப்பு வந்தது. கண்களை லேசாக மூடி மூடித் திறந்து உடலைச் சுருக்கினார். மறுபடி தாயின் அணைப்புக்கு ஏங்கினார். பெற்றவாளை கவனிக்காம சாக விடலாம்! விற்க முடியுமோ?

"வித்துடுங்கோன்னா!" மனைவியின் குரல் மற்றவர்கள் குரல்களை அடக்கியது. சட்டென்று முழிப்பு வந்தது.

"**ம**ணியக்காரர் வீடு விலைக்கு வந்திரிச்சாம்!"

"அக்ரஹாரத்தில அந்த வீடுதான் பாக்கி இருந்திச்சு. யாரு வாங்கறாங்க?"

"சேர்வை கேட்டாராம். ராவுத்தர் போட்டிதுபாய் பணமில்லே!"

"கறவை நின்ன மாட்டையும் சம்ரக்ஷிக்கணும். கசாப்புக் கடைக்கு வித்துடப்படாதும்பார் உங்க தோப்பனார்" என்றார் பட்டர்.

"ஏமாறாம நல்ல விலைக்கு வித்துட்டு திரும்பிப் பார்க்காம வாங்கோ!"

பூமாவோட சண்டை போட இனி தெம்பில்லை.

ராவுத்தரிடம் அட்வான்ஸ் வாங்கியாச்சு. ஆறு மாசத்துல முழுப் பணமும் வாங்கிண்டு பத்திரம் பதிவு செய்யறதா ஒப்பந்தம்.

வீட்டை ஒருமுறை குற்ற உணர்ச்சியோடு பார்த்தார்.

"அம்மா... அப்பா... என்னை மன்னிப்பேளா? எனக்கு வேற வழி தெரியலே. உங்க காலம் மாதிரி இப்ப இல்லே. முழுசா மாறிப் போச்சு. தயவுசெஞ்சு என்னோட கூட, போற இடத்துக்கு வந்துடுங்கோ. ஏன்னா இங்கே ராவுத்தர் வரப் போறார்."

புழக்கடைக்கு வந்து அண்ணாந்து பார்த்தார். இளநீர் சாப்பிடணும்போல இருந்தது. எட்டா உயரத்திலிருந்து அவை சாரங்களைப் பார்த்துச் சிரித்தன. ஊரை விட்டு வந்தபின்பும் பின்னால் யாரோ கைகொட்டிச் சிரிப்பது போலவே இருந்தது.

"பின்னால் திரும்பிப் பார்க்காம வாங்கோ."

**மா**ம்பலத்தில் மாதம் ஆயிரத்து ஐநூறு வாடகை கொடுத்து ஐநூறு சதுர அடி பொந்தில் குடி ஏறினார்கள். ஃப்ளாட் விலை விசாரிக்க விசாரிக்க ஏறிக் கொண்டே போயிற்று. எப்படிப் புரட்டினாலும் நானூறு சதுர அடிக்கு மேல் வாங்க முடியாது போலத் தோன்றியது.

பூமாவுக்கு துக்கம் தொண்டையை அடைத்தது.

"மன்னிக்கு முன்னாடி ராணி போல வாழணும்னு ஆசைப்பட்டேன். உம்..."

"கிராமத்துல நாலு கட்டு வீடு. கல்யாண மண்டபம் மாதிரி கூடம். ஓடிப் பிடிச்சு விளையாடலாம். இங்கே ஒட்டிண்டுதாண்டி படுக்கணும்."

"பரவாயில்லே."

"ஒருநாள் உனக்கே இதெல்லாம் பிடிக்காம போயிடும்."

"முதல்ல ஃப்ளாட்டுக்கு அட்வான்ஸ் கொடுத்துட்டு வாங்கோ."

"இப்பவும் கெட்டுப் போயிடலே. ராவுத்தர் நல்லவர்."

"கிராமம் கிராமம்னு ஏன் உசிரை விடறேள்? உங்க கிராமம் என்ன? எல்லா கிராமமுமே அழிஞ்சாச்சு. அழகில்லே. மனுஷா இல்லே. ஆத்மாவே இல்லே!"

"ஏண்டி... உன் மாம்பலம் மட்டும் மாறலியா?"

"ஆமாம். எல்லாம்தான் மாறிப் போச்சு. நாமும் மாறணும்!"



## மகளுக்கு இல்லை வாய்ப்பு!

**மகள் ஜோதி மீனாவை விட அம்மா ஜோதிலட்சுமிக்குத்தான் வாய்ப்புகள் அதிகம். அதுவும் தெலுங்கில் அம்மா பயங்கர பிசி! ஆட்டம்–பாட்டம் ரோல்களில் இல்லீங்க. நல்ல கேரக்டர் ரோல்களில்!**

**–என் ராஜேஸ்வரி**

**பூ**மா துள்ளிக் குதித்தாள்.

"பையனுக்கு சிங்கப்பூர்ல ஏதோ ஸாஃப்ட்வேர் வேலை கெடச்சிருக்காம். டாலர்ல சம்பளம். வாம்மான்னு எழுதி இருக்கான். நீங்களும் வரேளா?"

"மாம்பலத்தை விட்டா போறேங்கறே?"

"இங்கே என்ன கொட்டிக்கிடக்கு? சிங்கப்பூர் எப்படி இருக்கும் தெரியுமா?"

"நீ போயிட்டு வா."

"ஏன் வரேன்... அங்கேயேதான் இருப்பேன்.



''அந்த டாக்டருக்கு மூளை குழம்பிப் போயிடுச்சா என்ன?''

''ஏன் சொல்றே?''

''டாக்டர் எனக்கு நாலு நாளா ஒரே ஜுரம்'னு சொன்னா, 'என்னய்யா இது. வரவனெல்லாம் ஏதாவது வியாதி சொல்லிக்கிட்டே வர்றீங்க. நல்ல விஷயம் சொல்லிக்கிட்டு யாருமே வர மாட்டீங்களா'ன்னு கேட்கிறார்!''

– வெ. ராஜாராமன்

பாஸ்போர்ட், விசாவுக்கு முனைந்தாள்.

''சம்மர் லீவுக்கு குழந்தையை அழைச்சுண்டு வரேன். உங்க பேரனுக்கு 'வில்லேஜ்' பார்க்கணுமாம்'' என்று எழுதி இருந்தாள் பெண்.

''இதோ பாருங்கோன்னா. தனியா கெடந்து திண்டாட வேண்டாம். பிள்ளையாண்டான் சிங்கப்பூர் லேர்ந்து எழுதறதை எல்லாம் படிங்கோ. அங்கே ஸெரங்கூன்ரோடு மாம்பலம் மாதிரியே இருக்காம். கோவில் எல்லாம் இருக்காம். தமிழ்ல பேசலாமாம். முஸ்தஃபா கடைல அம்மா, அப்பா என்ன.. உங்க ஊர் பெருமாளைக் கூட வாங்கிடலாமாம்.''

''பைத்யம்.''

''ஒரு வார்த்தைக்குச் சொன்னா, ஏன் கோபம்? கிராமத்ல போய் மோட்டு வளைய பார்த்துண்டே இருங்கோ. பிடிக்கும்.''

பிள்ளையிடமிருந்து வரும் லெட்டர்கள் அம்மாவுக்குத்தான் வரும். அப்பாவுக்கு வெறும் நமஸ்காரம்தான். அதிசயமாக இம்முறை அப்பாவுக்கு ரெண்டு வரி எழுதி இருந்தான்.

''உங்களுக்குத் தெரியாததல்ல. யாதும் ஊரே யாவரும் கேளிர்''

லெட்டர் ஹெட்டில் எஸ்.எஸ். திருமண் என்றிருந்தது. சாரங்கன் சுந்தரம் திருமண். வடநாட்டிலிருந்தபோது சர்நேமாக எழுதிய ஊர்ப் பெயர்தான் பிள்ளைக்கு நிலைத்திருக்கிறது. சாரங்கனுக்குச் சிரிப்பு வந்தது.

நீங்க உங்க கிராமத்தைக் கட்டிண்டே அழுங்கோ.''

''ராவுத்தர்கிட்ட அட்வான்ஸை திருப்பிடட்டுமா?''

''வேண்டாம். எல்லாத்தையும் வித்து போடுங்கோ. பேங்க்ல தவறாம வட்டிப் பணம் வரும். நிம்மதியா இருங்கோ.''

''எங்கேடி இருக்கறது? அதானே கேள்வி.''

''ஏன்... ராவுத்தர்கிட்டயே வாடகைக்கு இருக்கேம்ப்பான்னு கேளுங்கனேன். செலவு குறைச்சல். உங்களுக்கு ரொம்ப நாள் பிடிக்காது. சிங்கப்பூருக்கே வந்துடுவேள்!''

பூமா மன்னியிடம் பீற்றிக் கொண்டாள்.



''என் பெண்டாட்டி பெரிய ஆபத்துல சிக்கிட்டிருந்தா; கஷ்டப்பட்டு காப்பாத்திட்டேன்!''

''எப்படி?''

''அவ மயக்கமடைஞ்சதும் அடிக்கிறதை நிறுத்திட்டேன்!''

– நெல்லைராஜ்

பூமா சிங்கப்பூர் போயாச்சு. சாரங்கன் ராவுத்தரிடம் பேசி முடிவெடுக்க திருமண் வந்தார்.

''நீங்க ஊரோட வர்றதே சந்தோசம்'' என்றார் ராவுத்தர்.

ரெண்டே நாளில் வீட்டைச் சுத்தம் செய்தார். மனசும் சுத்தமானது போல இருந்தது. இனி ஆன்மா சுத்தப்படட்டும். கோவிலுக்குப் போனார். ஊரிலே இனி யார் இருந்தா என்ன... போனால் என்ன? அவன் இருக்கான்!

ஆள் அரவமே இல்லாத கோவில் வாசலில் இவ்வளவு கூட்டமா? பெருமாள் காணாமல் போயிட்டாராம்! எங்கே போனார்? ஏன்? சாரங்கனுக்கு நடப்பது எதுவுமே புரியவில்லை! உங்களுக்கு?

# இந்தோனேஷியாவில் தீ; மலேசியாவில் கோபம்!

இந்தோனேஷியாவில் பல காடுகளில் எழுந்த தீயினால், மலேசிய மக்களுக்குக் கொழுந்து விட்டெறியும் கோபம்!

'தென்னைமரத்தில் தேள் கொட்ட பனைமரத்தில் நெறி கட்டிய கதை' போல்தான் இது. இந்தோனேஷியாவில் படர்ந்த தீ, அதன் அண்டை நாடான மலேஷியாவின் நிலப்பரப்பை வெகு உஷ்ணமாக்கி விட, அங்குள்ள ஒரு பெரும் காட்டுப் பகுதி, நிலத்தடி மண்ணின் வெப்பத்தால், தானாகவே உஷ்ணமடைந்து எரியத் தொடங்கி விட்டது. இப்படியெல்லாம் இந்த இரு நாடுகளிலும் எழுந்த புகை மண்டலங்கள் சிங்கப்பூர் காற்றையும் நச்சுப்படுத்தியிருக்கிறது. இந்தோனேஷியாவில் எப்படி தீப்பிடித்தது?

சந்தைப் பொருளாதாரமே நாட்டு முன்னேற்றத்துக்கு ஏற்றது என்று சில வருடங்களுக்கு முன் முடிவெடுத்தது இந்தோனேஷியா. அப்போது அதன் அந்நிய நாட்டுக் கடனாக ஐநூறு கோடி டாலர்! தேக்கு மரம் அந்த நாட்டின் பொருளாதாரத்துக்குக் கணிசமாகக் கைகொடுத்தது. வருடத்துக்குச் சுமார் முப்பது கோடி டாலர் மதிப்புள்ள தேக்கு மரத்தை ஏற்றுமதி செய்து வந்தது.

வெளிநாட்டுச் செலாவணியை அதிகம் பெறுவதற்காக இந்தோனேஷியா அரசு வைத்த அடுத்த குறிதான் பனைமர எண்ணெய் - அதாவது பாமாயில். அடுத்த மூன்று வருடங்களில் 72 லட்சம் டன் பாமாயிலை ஏற்றுமதி செய்ய வேண்டும் என்று தீர்மானித்தது அரசு. (உலகெங்கும் பாமாயிலுக்கு அப்படி ஒரு டிமாண்ட்). இந்த லட்சியத்தை அடைய வேண்டுமென்றால் தற்போதுள்ள பனைமர விவசாயப் பரப்பைப் போல இரு மடங்கு நிலம் தேவைப்படும்.

எனவே, பல காட்டுப் பகுதிகளை சமன்படுத்திப் பனை மரங்களை வளர்க்க வேண்டியது அவசியமானது. சமன்படுத்தச் சுலபமான வழியாக அந்த விவசாயிகள் (வியாபாரிகள்) தேர்ந்தெடுத்தது அவற்றுக்குத் தீ வைக்கும் முறையைத்தான். அப்படி வைத்த தீதான் காடுகளை அழித்ததோடு மலேசியாவுக்கும் பரவியது.

இதன் காரணமாகச் சுமார் முப்பது தனியார் நிறுவனங்களுக்குக் கொடுக்கப்பட்ட பாமாயில் லைசன்சை (காடுகளுக்குத் தீ வைத்ததன் காரணமாக) ரத்து செய்திருக்கிறது இந்தோனேஷிய அரசு. "இந்தோனேஷியாவைப் பற்றிக் குறைகூற இது சமயமல்ல. சிக்கலைத் தீர்ப்பதில் இந்தோனேஷிய அரசுக்கு நாம் உதவ வேண்டும்" என்று தமது நாட்டு மக்களை சமாதானப்படுத்தியிருக்கிறார் மலேசிய துணைப் பிரதமர்.



மாறிய காற்றின் திசை, எதிர்பாராது பெய்த மழை ஆகியவையும் சேர்ந்து தீயையும், அதனால் விளைந்த சேதத்தையும் ஓரளவு குறைக்க உதவியிருக்கின்றன. இந்த நிகழ்ச்சி இந்தோனேஷியாவுக்கு மட்டுமல்ல; இயற்கையை அழிக்க நினைக்கும் அனைவருக்குமே ஓர் எச்சரிக்கை!

— ஜி.எஸ்.எஸ்.




படத்தில் இருக்கிற வினோத ஜந்து வேகப் பட்டதில்லை. மொத்த உலகத்தையும் கபளீகரம் செய்து விடக்கூடிய அளவுக்கு அபாயகரமானது. 'மென் இன் பிளாக்' என்ற ஆங்கிலப் படத்தில் இவை வருகின்றன.

அன்னிய கிரகத்து மனிதர்களின் விண் கலங்கள் பற்றி ரகசியமாய் உளவு அறிந்து, பூமியை அவற்றின் தாக்குதலிலிருந்து காப்பதற்காக அமெரிக்காவில் உருவாக்கப்படும் கறுப்புப்படை அமைப்புத்தான் இந்த, 'மென் இன் பிளாக்'.

அமெரிக்காவில் ரிலீஸ் ஆகி வசூலில் சக்கைப் போடு போடுகிற இந்தப் படத்தின் வெற்றிக்கு என்ன காரணம் தெரியுமா?

அமெரிக்க மக்களில் பலரும், வேற்றுக் கிரகங்களில் உயிர்கள் வசிப்பதாக நம்புவதுதான்! இதை நிரூபிக்கிறது அமெரிக்காவில் நடத்தப்பட்ட ஒரு சர்வே.

சர்வேயில், 34 சதம் பேர் வேற்று கிரக உயிரினங்கள் நிஜம் என்றும், இவர்களில் 80 சதம் பேர், அமெரிக்க அரசு, மக்கள் பீதியடையக் கூடாது என்பதற்காகவே அது பற்றின உண்மைகளை ரகசியமாய் வைத்திருக்கிறது என்றும் நம்பிக் கொண்டிருக்கிறார்கள்.

22 சதம் பேர் வேற்று கிரக உயிரினங்களுக்கும், இந்த பூமியில் உள்ள சில மனிதர்களுக்கும் ரகசியத் தொடர்பு உள்ளதாகவும் நம்புகிறார்கள்.

இன்னும் சில பேர், அமெரிக்க அதிபராக ரொனால்டு ரேகன் இருந்தபோது, ரஷ்யாவின் ராணுவ நடவடிக்கைகளை உளவு அறியும் நோக்கத்துக்காக அமல்படுத்துவதாகச் சொன்ன எஸ்.டி.ஐ. என்ற 'பிரத்யேக பாதுகாப்பு வியூகம்' உண்மையில் வேற்று கிரக உயிரினங்களின் நடமாட்டம் பற்றி உளவு பார்க்கத்தான் நிறைவேற்றப்பட்டது என்று ஆழமாய் நம்புகிறார்கள்!

மொத்தத்தில், நம் ஊர் சாமி சென்டிமென்ட்களால், மாரியாத்தா படங்கள் ஓடுவது போல, அமெரிக்காவில் வேற்று கிரக சென்டிமென்ட், அது தொடர்பான திரைப்படங்களின் வெற்றிக்கு உதவுகிறது.

— மௌஷ்மி

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621
Annual Subscription : India Rs. 208/-; Overseas Rs. 1200/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 104/-; Overseas Rs. 600/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS(S) M4392/97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/(S) 161 * Registered as a Newspaper in Srilanka





L.R.SWAMI / P.P.